# எனது உலக சுற்றுப் பிரயாணம்.

எழுதியவர்
டாக்டர் சவரிராயன் ஏசுதாசன், F. R. C. S. E.
கிறிஸ்துகுல ஆசிரமம்
திருப்பத்தூர்—வட ஆற்காடு





திருப்பத்தூர் விக்டோரியா அச்சுயந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

1935

விலை அணா 10.



திருப்பத்தூர் ஆசிரம ஜெபாலயம்.



திருப்பத்தூர் ஆசிரம வைத்தியசாலை.

# முகவுரை.

கடந்த வருஷம் பிரயாணஞ் செய்துகொண்டிருக்கும் போதே வழியில் எழுதிய தினசரிக் குறிப்புகளை ஆங்கிலத்தில் அச்சிட்டு எனக்கு நெருங்கிய சிநேகிதருக்கு மாத்திரமனுப்பினேன். ஆனால் என் பிரயாணங்களில் நான் கண்டு கற்றவைகளை என் சொந்த ஜனமாகிய தமிழ் மக்களோடு, விசேஷமாக கிராம ஜனங்களோடு, நான் பகிர்ந்து அனுபவிக்க வேண்டுமென்பதே என் பேரவா. நான் போய்ப் பார்த்த பற்பல தேசங்களின் காரியங்களை தினசரி குறிப்புகளாக மாத்திரமல்ல, ஒழுங்காக பொருளுக்கேற்றபடி பிரித்து விவரமாகவும், சில காரியங்களைக் கூட்டியும், இச்சிறு புத்தகத்தில் எழுதியிருக்கிறேன். இந்தியாவிற்கு நான் திரும்பி வரும் கப்பல் பிரயாணத்தில் இதை நான் எழுத ஆரம்பித்தாலும், இப் புத்தகத்தின் பெரும் பாகத்தை ஆசிரமத்திற்கு வந்த பின்னே எழுதவேண்டியதிருந்தது. ஆசிரமத்தின் பற்பல ஜோலிகள் மத்தியில் புத்தகமெழுதும் வேலை எத்துணை கஷ்டமானது என்பதை இந்த ஆசிரமத்திற்கு வந்து போயிருக்கும் நண்பர் இலகுவாய் கிரஹித்துக்கொள்ளக்கூடும். மேலும் தமிழ் புத்தகம் எழுதுவோர் அதைரியமடையக்கூடிய ஒரு பெரிய காரணமுண்டு. எத்துணை பிரயாசத்துடன் கஷ்டத்தையும், சுகத்தையும், செலவையும், நேரத்தையும் பாராமல் புத்தகம் எழுதினாலும் தாய் பாஷையில் எழுதியதை ஆவலாய் வாசிக்க ஆங்கிலக் கல்வியடைந்தவர்களுக்குப் பிரியம் கிடையாது. பாமர மக்களுக்குள்ளும் எழுத்துவாசனையறிவு

போதாது. கிராம உபாத்திமார்கள், கிராம முன்சீப்புகள் முதலிய கிராமத் தலைவர்களுக்கும் கிராம ஜனங்களைக் கூட்டி அவர்கள் மனக் கண்களைத் திறந்துவிடவும், அவர்களுக்கு நல்லறிவூட்டி புத்தகங்களை அவர்களுக்கு வாசித்துக் காட்டவும் அக்கரை கிடையாது.

இதுவரைக்கும் கிராம ஜனங்கள் நன்மைக்காக நான் எழுதியிருக்கும் தமிழ் புத்தகங்களை வாசித்து அறிவு பரவச் செய்ய நான் எடுக்கும் பிரயாசங்களில் நான் பட்டிருக்கும் கஷ்டங்களும் மனச்சோர்வும் என்னைச் சில வேளைகளில் தியங்கச் செய்கின்றன. எனினும் இக்காலத்தின் தொண்டு தற்சமயத்தில் பயனற்றதுபோல் தேசத்திற்காகப் பாடுபடும் தொண்டர்களைத் தியங்கச் செய்தாலும் ஒருவரும் அதைரியப்படவேண்டாம். விதை உயிருள்ளதாயிருந்தால் பலன் தருவது நிச்சயம். கண்ணீரோடு விதைக்கிறவர்கள் ஆனந்த கீதங்களோடு கதிர்களை அறுக்கும் நாள் வரும். அப்படி நமது சொந்தக் கண்களினால் பலனைக் காணவிட்டாலும் கூட நமது பிள்ளைகள் நமது பாடுகளின் நற்பலனை அனுபவிப்பார்கள். இது நிச்சயம். உறுதியான இந்த நம்பிக்கையை கைவிட்டோமானால் நமது சுதந்திரம் ஒருபோதும் கிட்டாது. இதர நாடுகளின் முன்னேற்றத்திற்குக் காரணமாயிருந்திருக்கும் சில காரணங்களை விவரித்து இப்புத்தகத்தில் எடுத்துக் காட்டி இருக்கிறேன். விசேஷமாக இதர நாடுகளில் தாய் பாஷையில் பாமரமக்களின் கட்டாயக்கல்வி, ஜாதிசமயக்கட்சிகளில்லாது ஐக்கியமுள்ளவர்களாய் தேசாபிமானத்தினால் தூண்டப்பட்டு

தங்கள் சுதந்திரத்தை அவர்கள் பாதுகாத்துக்கோள்வது, யந்திரத் தொழில், வியாபார விருத்தி இவைகளை முக்கியப் படுத்தி விவரித்திருக்கிறேன். நம்மைப்போன்ற கீழ்நாட்டாராகிய சீனர், ஜப்பானியர் அந்நியர் தங்கள் மேல் அரசுபுரிய இடங்கொடாமல் எவ்விதமாக முன்னேற்றமடைந்து தங்கள் சுதந்திரத்தை இழக்காது காத்து முன்னேற்றமடைந்திருக்கிறார்கள் என்பதை விசேஷமாகக் கவனித்து வாசியுங்கள். இதன் காரணமென்னவென்று கவனித்து அறியுங்கள். நமக்கு விதித்தது இவ்வளவுதான் என்று, உங்கள் சோம்பலையும் மடமையையும் முயற்சியின்மையும் ஒரு பெரிய தத்துவ ஞானமாகப் பாவித்து மரண நித்திரை மயக்கத்திற்கு ஆளாகாதிருங்கள். பரிபூரண சுதந்திரமே கடவுள் மனுஷனுக்கு ஏற்படுத்திய இலக்கு. விழிப்புடன் இந்தச் சுதந்திரம் கிட்டுமட்டும் ஓயாது முயற்சிசெய்யுங்கள். உயர்கல்வியடைந்தவர்களே! இப்படிப்பட்ட புத்தகங்களின் அறிவு பாமரமக்களிடையே பரவச்செய்வது உங்கள்மேல்விழுந்த பெருங்கடமை.

கிறிஸ்துகுல ஆசிரமம்,
திருப்பத்தூர்.
1—6—1935

உங்கள் நண்பன்
சவரிராயன் ஏசுதாசன்.

# எனது உலக சுற்றுப் பிரயாணம்.

தற்காலத்தில் அந்நிய நாட்டிற்குப்போக விரும்புபவன் தன்தேச சர்க்காரிடம் பிரயாண அநுமதிப்பத்திரம் ஒன்று பெற்றுக்கொள்ள வேண்டும். இதற்காக நான் சென்னை சர்க்காரிடம் விண்ணப்பம் செய்திருந்தேன். இரண்டு மாதம் போல்காத்திருந்து பலபிரயாசம்எடுத்தும் சென்னை சர்க்காரின் பிரதம ஆங்கில காரியதரிசியின் கைமட்டும் என்காரியம் போய் விட்டதால் எனக்கு அநுமதி கொடுக்க சர்க்கார் மிகயோசனை செய்து தாமதிப்பதாகக் கண்டேன். சென்னை சென்று சர்க்கார் தலைமைக் காரியாலயத்திற்கு பலதடவை அலைந்து இரண்டிலொன்று சீக்கிரம் தெரிவிக்கும்படி வற்புறுத்திக் கேட்டபின்புதான் கடைசியாக கொழும்பில் நான் கப்பலேறப் புறப்பட ஒரே நாளிருக்க ஏப்ரல் 5-ம் தேதி மதியத்திற்கு மேல் பிரயாண அநுமதிப்பத்திரம் என் கை சேர்ந்தது. மறு நாள் காலை திருப்பத்தூர் சேர்ந்து ஜெபாலயத்தில் ஆசிரமக் குடும்பத்தினரோடு எனக்கு அச்சமயம் புலன்பட்டமட்டும் என் பிரயாண நோக்கத்தைக் குறித்துப் பேசிச்ஜெபித்து கடவுளின் பாதுகாப்பிற்கு அவர்களையும் என்னையும் ஒப்புவித்து வழிவிட்டனுப்பிக்கொண்டேன். மதியத்திற்குமேல் புகை வண்டியேறினேன். சகோதரன் பேற்றன் ஈரோடு மட்டும்

வந்து வழிவிட்டனுப்பித் திரும்பினர். ஈரோடு தற்சமயத்தில் தென்னிந்தியா இருப்புப்பாதை ஸ்தானங்களில் ஓர் பெரிய புகைவண்டி ஸ்தானம். பெரிய கட்டடங்கள், ஸ்நானபான சௌகரியங்களமைந்த விசாலமான காத்திருக்கும் அறைகள், நீண்டபீடங்கள், சமீபத்தில் இருப்புப்பாதை உத்தியோகஸ்தர் வசிக்க ஏராளமான வீடுகள் முதலியன இருக்கின்றன. காவேரிநதியோரமானதால் தண்ணீர் சவுகரியமுண்டு. விவசாய அபிவிர்த்திக்காக காவேரி நதியின் குறுக்கே மேட்டூர் பெரும் அணை கட்டப்பட்டிருக்கிறது. திருப்பத்தூர் கடல் மட்டத்திற்குமேல் 1300 அடி உயரம். தென்மேற்காக பிரயாணஞ்செய்யும்போது லோக்கூர்கிட்ட பூமி 1400 அடிக்குமேல் உயர்ந்திருக்கிறது. சேலம் செல்ல பூமி தாழ்ந்து ஈரோடு 500 அடி உயரம்தானிருக்கிறது. திரும்பவும் கோயம்புத்தூர் மார்க்கமாக மேற்கே பூமி உயர்ந்து நீலகிரி மலைத்தொடர்பில் தோதபித்தா மலைச்சிகரம் 10000 அடி உயரமட்டுமிருக்கிறது. இது நிற்க.

இரவில் வண்டிமாறி தென்கிழக்காய்ப் பிரயாணம்செய்து காலை திருச்சினுப்பள்ளி சேர்ந்தேன். நாயக்கர் வம்ச கடைசி இராணியாக இங்கு ஆண்ட மீனாட்சியின் சம்பிரதியாக தமது வாலிபப் பிராயத்தில் உத்தியோகம் வகித்த சிவபக்த கவிராயராகிய தாயுமானவர் இருந்த இடம் இந்நகர்தான். பலநூற்றாண்டுகளுக்குமுன் விசிஷ்டாத்துவைதபோதகம் செய்த வைணவ சிரேஷ்டகுருவாகிய இராமானுஜாச்சாரியாருக்கும், அவர்முன் வந்த ஆழ்வார்களுக்கும் பிரதான ஸ்தலமாய் விளங்கிய

ஸ்ரீரங்கம் இந்நகருக்கு வடக்கில் சுமார் 1மைல் தூரத்திலிருக்கின்றது. 18-வது நூற்றாண்டில் முதலில் மகம்மதியர் வசத்திற்கும் பின்பு ஆங்கிலர் வசத்திற்கும் நமது தமிழ்நாடு கீழ்ப்படுவதற்கு காரணமாயிருந்த பலவித அரசியல் விவகாரங்களும் இந்நகரோடு எவ்வாறு கலந்திருந்ததென்பது சரித்திரம் வாசித்தால் நன்கு புலப்படும். தமிழ் நாட்டில் இது இரண்டாவது நகரம். தமிழ்நாடு முழுவதையும் ஏகாதிபத்திய மாண்புடன் கொஞ்சம் குறைய ஆயிரம் வருஷத்திற்கு முன் ஆண்ட ராஜேந்திர மன்னன் பிரதம நகராகிய தஞ்சாவூருக்கு இது சமீபம். காவேரி நதியோரம். பல கல்லூரிகள் உண்டு. இங்கு செங்குத்தான பெரும்பாறையுச்சியில் தாயுமானவர் கோயில் என்ற ஓர் அழகிய சிவாலயமுண்டு. இந்த ஜில்லாவிலே பல்லவ மன்னர்கள் மாண்பைவிளக்கும் பாறைகளைக்குடைந்து வெட்டிய பல அழகிய ஆலயங்களும், சிலா சாசனங்களுமுண்டு. இது தென்னிந்திய இருப்புப்பாதை மத்திய ஸ்தானம். இங்கு நான் திரும்பவும் வண்டி மாற்றினேன். புகைவண்டி ஸ்தானம் பெரிது. வண்டி ஏறும்படி ஒரு பீடத்திலிருந்து இன்னொன்றுக்குச் செல்ல பூமியின்கீழ் வெட்டப்பட்ட குகைப்பாதைகள் வழியாய்ப் போக வேண்டும். சில வருஷங்களுக்கு முன் கொழும்பு செல்லும் பிரயாணிகள் சிற்ப மாண்புபொருந்திய பெரும் ஆலயங்களும், திருமலைநாயக்கன் மால் என்ற அழகிய அரண்மனை, பெருங்கடைவீதிகள் முதலியனவுள்ளதும், மதுரை திருநெல்வேலியாகிய பாண்டிய நாட்டு மன்னர் அரசுபுரிந்ததுமான மதுரை மாநகர் வழியாய்த் தூத்துக்குடித் துறைமுகம் சென்று

கப்பலேறுவார்கள். இப்போதோ மலைப்பாறைகளில் வெட்டிய பண்டைய பல சமணக் கோயில்கள், மடங்களுள்ள புதுக் கோட்டை மார்க்கமாக குறுக்கு வழியாய் இராமேஸ்வரம் கடந்து புகைவண்டி தனுஷ்கோடித் துறைமுகம் செல்லுகிறது. மண்டபம் சேரவும் இலங்கை சர்க்கார்வைத்திய உத்தியோகஸ் தர் வந்து தொத்து நோயுள்ளவர்கள் யாரவது இலங்கை போகாதபடி தடுக்க பரிசோதனை செய்தார். இலங்கை சர்க்கார் இவ்வளவு கவனமாய்த் தன் ஜனங்களுக்காகப் பிரயாசம் எடுத்து அவர்கள் சுகத்தைப் பாதுகாப்பது மிகவும் போற்றத்தக்கது. ஆனால் இலங்கையிலிருந்து நமது பக்கம் வருவோரையோ இப்படிச் சோதித்து இந்திய மக்களைப் பாது காக்க ஒரு பிரயத்தனமும் இந்திய சர்க்கார் எடுத்துக்கொள்ள வில்லையே.

இராமேஸ்வரம் பெயர்பெற்ற க்ஷேத்திர பூமி. மண்டபம் முதல் தனுஷ்கோடி மட்டும் மிகச் சுந்தரக் கடலோரக் காட்சி. சாயந்திரம் வண்டியிலிருந்து இறங்கி சிறிய கப்பலில் ஏறி இரண்டு மணி நேரம் பிரயாணம் செய்தபின் இலங்கைக் கரை யிலுள்ள தலைமன்னார் சேர்ந்தேன். தனுஷ்கோடியின்கிட்ட கடல் ஆழமில்லாமல் தண்ணீரின் கீழுள்ள கற்களைப் பார்க்க லாம். பண்டைக்காலத்தில் இலங்கைத்தீவு பெரும் பூமியாகிய நமது இந்தியா தேசத்தோடு சேர்ந்து சமுத்திரம் பிரிக்காது ஏக பூமியாகவே இருந்ததென்று சாஸ்திரிகள் ஊகிக்கிறார்கள். தமிழ் மன்னர்களுக்கும் இலங்கையின் பூர்வீக அரசர்களுக்கும் போக்குவரத்து அரசியல் சம்மந்தங்களைக்குறித்து சரித்திரத்தில்

வேண்டிய ஆதாரவுகள் இருக்கின்றன. இலங்கையோடு இந்தியாவிற்கு தொன்றுதொட்டு வியாபார சம்பந்தமுண்டு. வடபாகம் தமிழ்மக்கள் வசிக்கும் யாழ்ப்பாணம். மத்திய பாகங்களிலும், தெற்கேயும் புத்தசமயத்தினரான சிங்களவர். நிலவளம் நீர்வளம் பொருந்திய அழகிய தீவு. குன்றுகள், நீர்வீழ்ச்சிகள், பசும்புல்தரைகள், தென்னந் தோப்புகள் அமைந்த கடல்கரைகள் முதலிய காட்சிகள் கண்ணைக்கவரும். மலைகளின் மேலுள்ள தேயிலைத்தோட்டங்களிலும், கீழ் நாடுகளில் ரப்பர் தோட்டங்களிலும் தமிழ்நாட்டிலிருந்து போயிருக்கும் ஏராளமான தமிழ்மக்கள் வேலை செய்கிறார்கள். 1911 முதல் 1914 வரை மூன்று வருஷம் நான் இலங்கையில் சர்க்கார் வைத்திய உத்தியோகத்திலிருந்தபோது, பல இடங்களுக்கும் போயிருந்ததால் இலங்கையை ஒருவாறு நன்கு அறிவேன்.

இலங்கை சேர்ந்து நான் கப்பலைவிட்டு இறங்குமுன் பிரயாண அநுமதிப்பத்திரம் பரிசோதிக்கிறவர்களும், போலீஸ் உத்தியோகஸ்தர்களும் எனக்கு மிகத் தொந்தரவு கொடுத்தார்கள். என் பேச்சை நம்பாதவர்கள்போல என்னை மிக நுட்பமாய் பரிசோதித்தார்கள். நான் ஒரு வைத்தியன் (டாக்டர்) என்று சொன்னபோது சிரித்துச் சந்தேகப் பட்டார்கள். நான் சாதாரண கதர் உடை தரித்திருந்தது அவர்களுக்கு சந்தேகமுண்டாக்கியிருக்கலாம். வெகு நேரம் என்னை நிற்கவைத்து பின்புதான் போகவிட்டார்கள். சாதாரண இந்தியமக்கள் பற்பல இடங்களில் அநுபவிக்கும்

பல இகழ்ச்சி, இன்னல்களை நினைக்கும்போது அவர்கள்போல் இருக்கும்படி நான் தரித்திருந்த உடையின் நிமித்தம் கொஞ்சம் பாடனுபவிப்பது பெரிய காரியமா? பின்பு 7—4—1934 இரவு வண்டியேறி 8—4—1934 காலை இலங்கையின் பிரதம நகரமாகிய கொழும்பு சேர்ந்தேன். அங்கு தன் சொந்தத்திலே வைத்தியவேலை செய்யும் என் மைத்துனர் டாக்டர் தாவீது அவர்கள் புகைவண்டி ஸ்தானத்தில் என்னைச் சந்தித்து தன் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போனார்கள். அவர்கள் குடும்பத்தோடு சந்தோஷமாக சாயந்திரமட்டு மிருந்தேன். இவர்களின் முதல் தாரம் எனக்கு நேரே இளைய தங்கை. நான் வைத்தியப் படிப்புத் தொடங்கிய வருஷத்தில் என் தகப்பனார் இறந்துவிட்டதால் என் படிப்பிற்கு பல கஷ்டங்கள் நேர்ந்தன. அக்காலத்தில் இந்த என் தங்கையின் மனத்தைரியமும், யுக்தியும், விடாப் பிரயாசமும் உதவியும்தான் என்னை ஆதரித்தது. அச்சமயத்தில் விவாகஞ் செய்யாத பெண்ணைப் பாளையங்கோட்டையில் என் தாயாரோடிருந்த இத்தங்கை குடும்ப காரியங்களை வெகு சாமர்த்தியமாய் நடத்தி சென்னையில் படித்துக்கொண்டிருந்த எனக்குப் பணம் அனுப்புவாள். நான் இலங்கையில் பிற்காலத்தில் சர்க்கார் உத்தியோகம் பார்க்க நேரிட்டதும் இந்தத் தங்கையின் ஆலோசனைப்படியே. ஷை தங்கை 1919-ம் வருஷம் காலஞ் சென்றுவிட்டாள்.

சாயந்திரம் பிள்ளைகளை வழிவிட்டனுப்பியபின் டாக்டர் தாவீது அவர்களும் அம்மாளும் கப்பலிருக்கும் துறைமுகம்

வரைவந்து என்னை வழிவிட்டனுப்பிக்கொண்டார்கள். ஆங்கில கப்பல். 12000 டன் நிறை. பெரியது. நீராவியந்திரத்தால் ஓடுவது. இந்தயந்திரம் கப்பலின் கீழ் பாகத்தில் தண்ணீருக் குள்ளிருக்கும் இரும்புத் தண்டுகளாகிய தள்ளு கருவியை விரைவாய் சுழலச்செய்யும். கப்பல்கள் இரும்புத் தகடுகளால் செய்யப்பட்டவை. பற்பல மச்சுகள்போல் மரப்பலகைகளால் செய்யப்பட்ட பல அடுக்குகளுண்டு. கீழே படுக்கப் பல சிறிய அறைகள், குளிக்குமறைகள், மேலே பொதுச் சாலைகள், விராந்தாபோன்ற திறப்பான மாடங்கள் முதலிய சவுகரியங் களுமுண்டு. நீந்திக்குளிக்க சிறிய குளம் போன்ற தொட்டியு முண்டு. ஐரோப்பியவிதமாய் சமைக்கப்பட்ட மாம்ச ஆகாரம் தான் அதிகம். ஆனால் பழவர்க்கம் கொடுப்பார்கள். சோறும் கறியும் கொடுக்கிறார்கள். ஆனால் இதைச் சரியாய் சமைக்கிற தில்லை. மூன்று வகுப்புப் பிரயாணிகளுண்டு. என் அறையில் கூடவிருந்த உடன் பிரயாணி டாக்டர் கனகசபை யென்ற யாழ்ப்பாணத் தமிழர். மிக நல்லொழுக்கமுள்ள நல்ல கன வான். மலேயாவில் சர்க்கார் வைத்திய உத்தியோகம் செய்பவர். விடுமுறைக்கு யாழ்ப்பாணம் போய்த் தங்கி தன் குடும்பத்தை யாழ்ப்பாணத்தில் விட்டுவிட்டுத் திரும்ப மலேயா தேசம் போகிறவர்.

மாலை கொழும்பிலிருந்து புறப்பட்டு இந்துமகா சமுத்திரம் மார்க்கமாய் கிழக்கு திசையாக கப்பல் பிரயாணம் செய்தோம். கடல் கொந்தளிப்பில்லாமல் மிக அமைதியாயிருந்ததால் கப்பல் அதிகமாய் அசையவில்லை. சுகமே பிரயாணம் செய்தோம்.

கூடப் பிரயாணம் செய்தவர்கள் நூற்றுக்கணக்கானவர்கள். அநேகமாய் ஆங்கிலர்.

ஒரு பிரயாணி குடி வெறியோடு போஜன சாலை வந்து ஒரு இரவு மிகக் கூச்சல் செய்துகொண்டிருந்தான். அவனைத் தடுப்பாருமில்லை. கீழ் திசையாக நாலு நாள் பிரயாணம் செய்தபின் மலேயா நாட்டிலுள்ள பினாங்கு சேர்ந்தோம். கனகசபை டாக்டரும் நானும் கரை சென்றோம். நான் சீன தேசம் போவதால் இங்கிருந்த சீனப்பிரதிநிதியின் உத்தரவு கையொப்பம் பணம் கட்டி வாங்கிக் கொண்டேன். கனகசபை அவர்கள் என்னை மோட்டாரில் ஊர்சுற்றிப்பார்க்க அழைத்துக் கொண்டு போனார். பினாங்கு செழிப்பான இடமாகத்தோன்றியது. பல தோட்டங்கள், பசும்புல்தரைகள் காணப்பட்டன. அழகிய அருவியுள்ள ஒரு பூங்காவனம் பார்த்தோம். பினாங்கு மலேயாதேச ஓரத்தில் ஒரு தீவு. ஜனங்களில் மூன்றிலொருபாகம் தமிழ் மக்கள்தான். மீதி சீனர். நமது தமிழ் நாட்டில் தரித்திரத்தால் வருந்தும் அநேகர் பிழைப்பிற்காகப் போகுமிடம் பினாங்கல்லவோ? தரித்திரத்திரள் நிறைந்த நமது நாட்டிலிருந்து இடவிசாலமும் ஜனக்குறைவுமுள்ள ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா தேசங்களுக்கு நமது ஜனங்கள் குடியேறிப்போக விடுவார்களானால் எவ்வளவோ உதவியாயிருக்கும். ஆனால் இந்த தேசங்களை தங்களுக்குக் கீழ்ப்படுத்தி ஆளும் மேல் நாட்டாரோ நமது தேசத்தினர் கருப்பு மனிதரென்றிகழ்ந்து அங்கு நாம் செல்ல இடம் கொடுக்காது தடுக்கிறார்கள். நான் பிரயாணம் செய்யும்



கிறிஸ்துகுல ஆசிரம ஜெபாலயப் பூந்தோட்டம்,
திருப்பத்தூர்.



கிறிஸ்துகுல ஆசிரமத்தின் சமீபத்திலுள்ள ஒரு பெரிய
ஆலமரத்தடியில் ஆசிரமத் தொண்டர் நிற்பது.



திருப்பத்தூர் (வட ஆற்காடு) தெப்பக்குளம்.



கிறிஸ்துகுல ஆசிரம விவசாயவேலை — திருப்பத்தூர்.

கப்பல்கள் நிரம்ப மேல்நாட்டார் தங்கள் பிழைப்பிற்காகவும், பணம் சேர்ப்பதற்காகவும் தங்களுக்குக் கீழ்ப்படுத்திக் கொண்ட கீழ்நாடுகளுக்கும், மற்றும் அயல்நாடுகளுக்கும் செல்லுகிறார்கள். தங்கள் தங்கள் சொந்தக் கப்பல்களும் வைத்துப் பணம் சேர்க்கிறார்கள். பண்டையகாலத்தில் தமிழ் மக்கள் கப்பல்கள், கடல் வியாபாரங்கள், இராஜேந்திரமன்னன் காலத்தில் (மார்க்கப்போலோ வருணித்திருக்கிறபடி) வனத்தின் விருக்ஷங்கள்போல் திரண்டிருந்த கப்பல்படைகளின்மாண் பெல்லாம் ஐயோ எங்கே? திரைகடலோடித் திரவியம் தேடு என்று பாடிய நாடு எது? தமிழ் மக்களை தற்காலத்தில் பிடித்திருக்கும் அசமந்தமாகிய தூக்கநோய்க்குக் காரணமென்ன? பண்டையகால மாண்பை மாத்திரம் நினைத்து பெருமூச்சு விடுவது போதாது. பகவானருளால் நமக்கு முன்னிருக்கும் சுதந்திர பாக்கியங்களுக்கு நாம் ஆளாகும்படி நம்பிக்கையாகிய ஊன்றுகோலை கைதளராது பிடித்து, பயத்தையும் அதனால் சுரக்கும் கோழைத்தனத்தையும் களைந்துவிட்டு நம் மக்களின் நலத்திற்காக நம்மைத் தியாகம் செய்ய முன்செல்வோம். இது நிற்க மதியத்திற்குமேல் புறப்பட்டு மறுநாள் (13-4-1934) முற்பகல் 11-மணிக்கு சிங்கப்பூர் சேர்ந்தோம். சிங்கப்பூர் திசையாக தெற்கே கப்பல் ஓடியபோது இடது புறத்தில் மலேயாவும் வலதுபக்கமாக சுமாத்திரா, அதற்கடுத்த ஜாவா என்ற யவனகரம் தீவுகளும் இருக்கின்றன. யவனம், பாலி என்ற தீவுகளில் இந்து நாகரீக கோவில்கள், சிலாசாசனங்கள் முதலிய சிற்பவேலைகளையும், பாலிஜனங்களுக்குள் இந்து மார்க்கம் போன்ற ஆசாரங்களையும் இந்நாள்மட்டும் பார்க்க

லாமாம். தமிழ் மக்கள் பண்டைய காலத்தில் இந்நாடுகள் மட்டும் சென்று வியாபாரம் செய்து குடியேறி வந்தார்கள் என்பதற்கு போதுமான ஆதாரங்களுண்டு. பாரதியாரும் இதைக்குறித்துப் பாடியிருக்கிறானன்றோ?

சீன மிசிரம் யவனகரம்—இன்னும்
தேசம் பலவும் புகழ்வீசிக்—கலை
ஞானம் படைத்தொழில் வாணிபமும்—மிக
நன்று வளர்த்த தமிழ் நாடு.

இத்தீவுகள் தற்காலத்தில் மேல்நாட்டு டச்சுக்காரர் அதிகாரத்திற்கு கீழ்ப்படுத்தப்பட்டிருக்கின்றன.

வட்டவடிவமான இப்பூகோளத்தின் நட்டநடுவில் சுற்றளவாக ஒரு வரி வரைந்தால் அதைச் சமவரி என்றழைக்கலாம். சிங்கப்பூர் இந்தச் சமவரி இலாக்காவிற் கருகிலிருக்கிறது. இது உலகத்தில் வெகு உஷ்ணமான பாகம். சிங்கப்பூர் மலேயா தேசத் தென்கரையிலுள்ள ஒரு தீவு. நாலரை லக்ஷம் ஜனங்கள் உள்ளது. அநேகமாக சீன தேசத்தார்தான். தமிழ் மக்களுமுண்டு. கனகசபை டாக்டர் என்னை ஊருக்குள் கூட்டிக் கொண்டு போனார். பெருங்கடைவீதிகளிருந்தன. சில தமிழ் வியாபாரிகளோடுபேசினேன். என்னோடு சந்தோஷமாய் தமிழ் பேசினார்கள். மலேயாநாட்டு சுதேசிகளோ உள் நாடுகளில் தான் அநேகமாய் வசிக்கிறார்கள். கனகசபை டாக்டருக்கு அறிமுகமான சில நண்பர்கள் வீட்டிற்குப்போனோம். அங்கு எங்களுக்கு விருந்தளித்தார்கள். டாக்டர் இங்கு இறங்கி

விட்டதால் இதன் பின் நான் மாத்திரம்தான் கப்பலில் என் அறையிலிருந்தேன். ஒரு அமெரிக்கப் பாதிரியாரும் இரண்டு சீன வாலிபரும் இதன்பின் எனக்குத் தோழராயிருந்தார்கள். மறுநாள் மதியம் சனிக்கிழமை 14—4—1934 கப்பல் புறப்பட்டது. இந்துமகா சமுத்திரம் இதோடுமுடிய, கிழக்கே சீனக்கடல் சேர்ந்தோம். இந்துமகா சமுத்திரத்தோடு அமைதியும் போயிற்று. கடல் கொந்தளிப்பும், அலைகள் மோதக் கப்பல் புரளுவதுமாயிற்று. தலைச்சுற்றும், மயக்கமும், வாந்தியுமாக என் காரியம் படுக்கையாயிற்று. இதற்குத்தான் "கடல் நோய்" என்று சொல்லுவார்கள். இதின் நிர்ப் பாக்கியம் அநுபவித்தால்தான் அறியலாம். நான்கு நாள் இந்த மகத்துவத்தில் சென்றபின் ஹாங்காங்கு தீவு சேர்ந்தோம். இது சீனதேச ஓரம். கன்ரேன் நகர சமீபம். ஜனங்கள் சீனர்தான், ஆனால் தீவோ ஆங்கில ஆதீனத்திலிருக்கிறது. ஜனத்தொகை ஆறேமுக்கால் லக்ஷம். ஆங்கில இராணுவ உத்தியோகஸ்தர்கள் முதலியவர் தீவின் குன்றுச்சிகளில் வசிக்கிறார்கள். இங்கு நான் கப்பலைவிட்டு இறங்கிவிட்டேன். 'ஊ' என்ற ஒரு சீன டாக்டர் எனக்கு மிக உதவியாயிருந்தார். இத்தீவில் அவர் பிரபலமான வைத்தியர். அவருக்கு வேலை அதிகமிருந்தபடியால் தனக்கு உதவின டாக்டரா ரோஸா வென்பவரை பற்பல இடங்களைக் காட்டும்படி என்னுடனனுப் பினார். ஹாங்காங்கு சர்வகலாசாலை, வைத்தியசாலை, இவற்றை முதலாவது பார்த்தேன். மூக்கினுள் விஷச்சதை வளரும் நூதன வியாதி இங்கு பிரபலம். இதன்பின் சீனர் நடத்தி வருகிற "துங்கோ" என்ற பெயருள்ள ஒரு பெரிய வைத்திய

சாலையைப் பார்த்தேன். ஏராளமான வியாதியஸ்தர் வைத்திய சாலையின் அறைகள், வெளிவிராந்தாக்கள் எல்லாம் நிரம்பக் கிடந்தார்கள். தீராப் பிணியுள்ளவர்கள் பலர். மிகத் தரித்திரர். கட்டில்களில் மாத்திரமல்ல தரைகளிலும் பிணியாளிகள் கிடந்தார்கள். சிலர் மரணத்தருவாயிலிருந்தார்கள். பிரேதக் கிடங்கும் பார்த்தேன். பல பிணங்களை மரத்தூர்களுக்கொப்பான பிரேதப் பெட்டிகளில் அடைத்து வைத்திருந்தார்கள். எந்த வியாதியஸ்தர் எத்துணை பயங்கர மரணத்தருவாயிலிருந்தாலும், நம்பிக்கையற்ற பிணியாளுனும் எவரையும் இங்கு ஏற்றுக்கொள்ளவேண்டுமாம். இல்லாவிட்டால் சீனப் பொது ஜனங்கள் இதற்கு பண உதவி செய்யமாட்டார்களென்று எங்களுக்கு வைத்தியசாலையைக் காட்டிய சீன டாக்டர் சொன்னார். நெருக்கமான, கூட்டத்திற்கும், பலர் மரிப்பதற்கும் காரணம் இதுவே.

இந்தச் சீன வைத்திய சாலையில் தற்கால சாஸ்திர வைத்திய முறைகளோடு பூர்வீக சீன சுதேச முறைகளும் கையாடப்படுகின்றன. இருவிதமான வைத்தியர்களும் தனித்தனியே தங்கள் தங்கள் வைத்தியத்திற்கு வரும் பிணியாளிகளுக்கு தங்கள் முறைப்படி பரிகாரம் செய்கிறார்கள்.

இரவில் டாக்டர் ஊ என்னைச்சந்திக்க பல சீன டாக்டர்களையும் அழைத்து விருந்து செய்தார். பின் 10 மணிக்கு சீனாவில் பெயர் பெற்ற நகரமாகிய கன்ரோன் நகரம் சென்றேன். நதிமார்க்கமாய் கப்பலேறிப்போனேன். பல பல வென்று விடியக் கன்ரோன் சேர்ந்தேன். இங்குள்ள ஒரு கிறிஸ்தவப்

பாதிரியார் உதவியினால் ஒரு மாணவன் எனக்குப் பல இடங்களையும் காட்டக் கிடைத்தார். இவரிருக்கும் இடம் செல்ல முதலாவது வழிகாட்டியுடன் தோணியில் கன்ரோன்நதியின் அக்கரை போகவேண்டியதிருந்தது. தோணியைத் தண்டு வலித்து ஓட்டியவர்கள் பெண்கள். இப்படிக் கஷ்ட ஜீவனம் செய்து அவர்கள் பிழைக்கவேண்டியதிருக்கிறதேயென்று நான் அநுதாபம் காட்டிப்பேசியபோது அவர்கள்சிரித்தார்கள். இவர்கள் புருஷர்கள் நகரத்தில் ரிக்ஷாவென்ற கைவண்டியிழுத்துப்பிழைக்கிறார்கள். தோணிதான் இவர்கள் வீடு. தோணி சுத்தமாயும், ஆகாரப் பாத்திரங்கள்முதலியன கூரையில் ஒழுங்காகத் தூக்கப்பட்டுமிருந்தன.

சீனதேசத்துச் சிலதுறைமுகங்களில் சிறியதொரு பாகங்களை பிரெஞ்சு நாட்டாரும், ஆங்கிலரும் தங்கள் அதிகாரத்திற்குள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இப்பாகங்களுக்கு "கொடுக்கப்பட்டவை" என்று பெயர். ஆனால் "பிடுங்கப்பட்டவை" என்ற அமங்கலப்பதமே இதற்கு தகுந்தபெயராகும். இங்கு இப்பாகங்களையும் பார்த்தேன். நகரத்தின் பாகமாக இவை நதியோரமேயிருக்கின்றன. கன்ரோன் நகரில்தான் உலகில் கீர்த்திபெற்ற சீன தேசபக்தனாகிய சுன் யாத் ஸென் டாக்டர் தமது அரசியல் சீர்திருத்தப் புரட்சிவேலை தொடங்கியது. இவர் காலத்தின்முன் சீனதேசம் வாழ்வடையத் தடையாயிருந்து அதைக் கீழாக்கிய ஏகாதிபத்தியம் தேசத்தை அமிழ்த்திக்கொண்டிருந்தது. மேல் நாடுகள்போல் சீனாவும் சுதந்தரமடைந்து வாழச் செய்யவேண்டுமென்ற

அவா இவரைப்பிடித்து நெருக்கி எவிற்று. தேசாபிமான மாகிய அனல் இவர் அகத்தில் மூண்டது. தமது உயிரையும் பொருட்டாகப் பார்க்காமல் தேசம்புத்துயிரடையத் தம்மை தியாகிக்கத் தீர்மானித்தார். 72 சீன வாலிபரும் இவரைப் பின்பற்றித்தேசத்திற்காக தங்களைத் தியாகம் செய்யத் தீர் மானித்தார்கள். பல கஷ்டங்கள் துன்பங்கள் நேர்ந்தன. இவ் வெழுபத்திரண்டு வாலிபரும் உயிர் துறந்தார்கள். ஆனுலும் சுன் யாத் ஸென் அதைரியப்படாமல் தான்கொண்ட நோக்கத்தை நிறைவேற்றி புரட்சி சித்திபெறவும் ஏகாதி பத்தியம் ஒழியவும் செய்து சீனுவில் குடியரசை நாட்டினுர்.

கன்ரேன் நகரம் மேல்நாட்டுப் பெரு நகரங்கள்போல் வெகு விசாலமும் மின்சார வெளிச்சங்கள் போட்ட பெரும் வீதிகளும், மச்சு மாடங்களுள்ள உயர்ந்த கட்டடங்களு முள்ளதும், பின்னும் தற்கால பல சவுகரியங்கள் பொருந்திய நகரமாகவும் துலங்கியது. நதியின்மேல் பெரும்பாலம். பெருங்கப்பல்கள் தடையின்றிச்செல்ல இப்பாலம் நடுவில் இரண்டாய்ப்பிரிந்து விரிந்து மேலெழும்பி நின்று இடம் கொடுக்கும். டாக்டர். சுன் யாத் ஸென் ஞாபக மண்டபம் பார்த்தேன். அழகியதும், விசாலமுள்ளதும், வட்டவடி வுள்ளதுமான பெருங்கட்டடம். சிற்பச்சிறப்புள்ளது. உள்ளே நடுவில் சாலேயும், அதைச்சுற்றிமேலே அடுக்கடுக்காக ஒன்றின் மேலொன்ருக அமைக்கப்பட்ட ஆசனப்பீடங்களும் கண் கவரும் காட்சி. எதிரே உயர்ந்த பீடத்தில் தேசபக்தன் படம். அதின் கீழ் அவர் கடைசியாக எழுதிவைத்துப்போன

மரணசாசனம். இது சீனபாஷையிலிருக்கிறது. இதன் மொழிபெயர்ப்பாவது :—

டாக்டர் சுன் யாத் ஸேன் மரணசாசனம்.

“ஒரேநோக்கத்தோடு 40 வருஷம் மக்களின்புரட்சிக்காக நான் என் ஆயுளைமுற்றிலும் செலவிட்டு வந்திருக்கிறேன். சீனதேசம் இப்பூலோக தேசங்களுக்குள் சுதந்தரமடைந்ததும், சுயாதீனமடைந்த தேசங்களுக்கு சமானமுள்ளதுமாக அதை உயர்த்தி முன்னுக்குக் கொண்டுவந்து விடவேண்டுமென்பதே அந்த என் நோக்கம். இந்த நோக்கம் சித்திபெற நமது ஜனங்களுக்குள் பரிபூரணக்கிளர்ச்சி உண்டாகச் செய்ய வேண்டும். நம்மை தங்களுக்குச் சமானமாகப்பாவித்து நடந்துகொள்ளும் தேசத்தினரோடு நாம் உடன்படிக்கை செய்து நம்முடைய நோக்கம் நிறைவேற அவர்களும் நாமுமாகக்கலந்து ஒருமித்துப்போராடவேண்டும். இவ்விதமாகத்தான் நான் குறிப்பிட்ட நோக்கமாகிய தேச மேன்மையின் எல்லை கிட்டுவோம்.

புரட்சியின் வேலை இன்னும் முற்ற முடிய நடந்தேறவில்லை. நான் தேசீயச்சீரமைப்பிற்காக செய்திருக்கிற ஒழுங்குகளையும், தேசீயச்சீரமைப்பிற்கான மூலப்பிரமாணங்கள் என்று குறிப்பிட்டவைகளையும், மக்களின் முப்பிரமாணங்களையும், நமது அரசியல் கட்சியாரால் முதல் தேசிய மகா நாட்டில் வெளிப்படுத்தப்பட்ட விளம்பர அறிவிப்பையும் என்தோழர்களெல்லாரும் அநுசரித்துப் பின்பற்றுவார்களாக. இவை நிறைவேற ஊக்கமுடன்பிரயாசித்து பாடுபடுவார்களாக.

எல்லாவற்றிற்கும் மேலாக நாம் சிறிது நாட்களுக்குமுன் வெளியிட்ட தீர்மானங்களின்படி தேசிய மகாநாடு கூடிய சீக்கிரம் நடத்தவும், நமக்கு பிரதிகூலமானதும், பலவந்தத்தினல் நம்மைச் சம்மதிக்கச்செய்து கையொப்பமிடச்செய்து அந்நிய நாட்டார் நம்மோடு செய்த அநியாயமானதுமான "உடன் படிக்கைகளை" தாமதமில்லாமல் ரத்துசெய்யவும் முயற்சி செய்யவேண்டும். இதுவே நான் உங்களுக்கு இடும் என்மன மார்ந்த கட்டளை."

(ஒப்பம்) சுன் ஸேன்.

மக்களின் முப்பிரமாணங்கள் என்று மேலே குறிப்பிடப்பட்ட வைகள் இவைகளே :—

1. பொது ஜன அரசியல்.
2. தரித்திரர் முன்னேற்றம்.
3. சீனதேசத்தார் தங்களைப்போல் கீழாக்கப்பட்ட "பலவீன" தேசத்தாரோடு கூட்டுறவாக ஒத்து உழைத்து அவர்களும் தாங்களும் இப்பூலோகத்தில் சுதந்திரமடைந்து வாழும் இதர தேசங்கள்போல் அவர்களுக்குச் சரிசமானமாகிவிட முயற்சி செய்ய வேண்டும்.

கன்ரூன் நகரமிருக்கும் குவாண்டங்கு சீன மாகாணத் தார் இந்தியருக்கு சாதாரணமாகச் சிநேகம் பாராட்டுகிறுர் களென்று கன்ரூனில் வசிக்கும் ஒரு இந்திய வியாபாரி



கிறிஸ்துகுல ஆசிரம பள்ளிக்கூட பிள்ளைகளும் உபாத்திமாரும் வனபோஜனத்திற்கு புறப்படுதல்.

திருப்பத்தூர் ஆசிரம தோட்டத்தில் தொண்டர்கள் சிற்றுண்டி அருந்தல்.



பவானி ஊர் பக்கத்தில் (கோயம்பத்தூர் ஜில்லா)
ஓடும் காவேரி ஆற்றை "பரிசல்" என்ற
ஒருவித சிறு தோணியில் கடப்பது.



இலங்கையில் ஒரு கடல் கரை காட்சி.

என்னிடம் சொன்னர். டாக்டர் சுன் யாத் ஸென் மாண சாசனமும் அவர் ஆலோசனையும் இதற்கு ஒரு முக்கிய காரணம். சுன் யாத் ஸென் கிறிஸ்து சமயத்தினர். இவர் முதலில் வைத்தியம் கற்ற கிறிஸ்தவ வைத்தியசாலையையும் போய்ப்பார்த்தேன். சீனதேசத்தில் கிறிஸ்தவர்கள் சொற்பத் தொகையினரே. சீனுவில் 45 கோடி ஜனங்களில் புத்த சமயத்தினரே ஏராளமானவர்கள். மகம்மதியருமுண்டு. எனினும் சீனுவில் சமயப்பிரிவினை பாராட்டாமல் எச்சமயத் தினரும் தேசமுன்னேற்றத்தைப் பிரதானமாகக் கருதி தேசாபிமானிகளாக ஒத்துழைக்கிருர்கள். நமது தேசத்தில் தானே சமயப்பெயரைச் சொல்லிக்கொண்டு ஒரு சமயத்தினர் மேல் இன்னொரு சமயத்தார் சந்தேகப்பட்டுப் பிரிவினைசெய்து ஒத்துழைப்பில்லாமல் தேசத்தை பாழாக்குகிறேம். மெய்யான கடவுள் பக்தி தேசபக்தியையுண்டுபண்ணி ஒற்றுமையையும், தேச நன்மைக்காகத் தியாக சிந்தையையும் அகத்தில் மூட்டும். சந்தேகத்தை ஒழிப்போம். ஒருவரை யொருவர் நம்பி ஒத்துழைப்போம். அவரவர் மனச்சாட்சியின்படி மக்கள் கடவுளைவழிபட சந்தோஷமாய் இடம் கொடுப்போம். நமது தேசம் வாழவேண்டுமாஞல் நமக்குள் ஒற்றுமை இன்றியமையா அவசியம். தேசம் வாழ்ந்தால் நமது தனி வாழ்வும் அதோடு கூடிவரும். தேசம் தாழ்வடைந்தால் நமது தனிவாழ்வும் குறுகியே போகும்.

ஒன்றுபட்டா லுண்டு வாழ்வே — நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே. (பாரதி)

தேசத்திற்காக உயிர் துறந்த 72 சீன வாலிபர்களின் ஞாபக மண்டபங்களைப் பார்க்கப்போனேன். இவர்கள் பெயர்கள் கற்களில் வெட்டப்பட்டிருக்கின்றன. இவர்கள் சமாதிகள் இங்குதான். பின்னாலே உயர்ந்த மதில் போல் அடுக்கடுக்காக 72 சதுரக்கற்கள் வரிக்குமேல் வரி குறைந்த நீளத்தில் கட்டப்பட்டிருக்கின்றன. இதன்பின் நகரத்தின் வேறொரு இடத்தில் ஒரு குன்றின்மேல் கோபுரம்போல் கட்டப்பட்டிருக்கும் சுன் யாத் ஸென் ஞாபக ஸ்தம்பம் பார்த்தேன். குன்றின்மேல் இருந்து பார்க்க நகரக் காட்சி நன்றாயிருந்தது.

நான் கன்ரோனிலிருந்த நாளில் மழையும் மேகமுமா யிருந்தது. குளிருமிருந்தது.

பின்பு புஷ்பாலயம் என்ற ஒரு புத்த கோவிலைப் பார்த்தேன். எனக்கு வழிகாட்டியாய் கூடவந்த சீனவாலிபர் இக்கோயில் கொஞ்சம் குறைய 1000-வருஷத்திற்குமுன் போல் கட்டப்பட்டதாகச் சொன்னார். பீடத்தின் மேல் மூன்று பெரிய புத்தசமய விக்கிரகங்களிருந்தன. மத்தியிலிருந்தது யோகநிலையில் ஒருவிரல் மேல் உயர்த்திய நிலையிலிருந்தது. பீடத்தின் இருபுறமும் வழிபடும் பக்தர் சிலைகளிருந்தன. கோயிலுக்குமேல் உயர்ந்த வட்டகோபுரம். சிலைகள் இந்திய ரூபம் அமைந்தனவாய்த் தோன்றியதைக் கவனித்தேன்.

சுன் யாத் ஸென் பெயர்கொண்ட சீன கலாசாலையைப் போய்ப் பார்த்தேன். சீனாவில் எல்லா உயர்கல்வியும் தாய்

பாஷையாகிய சீனபாஷையிலேயே கற்றுக்கொடுக்கிறார்கள். சாயந்திரமானபின் ஒரு கிறிஸ்தவப்பாதிரியார் வீட்டில் தேயிலைப் பானம் அருந்தினேன். இவர் உள்நாட்டிலுள்ள சீன கிராமங்களில்போய் தொண்டு செய்துவிட்டு அப்போது தான் திரும்பியிருந்தார். சீன கிராமங்களில் தரித்திரம் அதிக மென்று சொல்லி அவர்களுக்காக வருந்தினர். கொடும் தரித் திரத்தினல் பலர் திருடிப்பிழைக்க நாடுவது ஆச்சரியமல்ல வென்றார். மறுநாள் காலை நானிருந்த அறைச் ஜன்னல் வழியாக தெருவில் கூச்சல் கேட்டதால் உற்றுப்பார்த்தேன். சிப்பாய்கள் பாடி ஓடிக்கொண்டு காலைத் தேகாப்பியாசம் செய்துகொண்டிருந்தார்கள்.

கன்ரேன் நகரம் சீனவின்தென்மாகாணமாகிய குவாண் டங்கு மாகாணப் பிரதமநகரம். இம்மாகாணத்தார் பேச்சு சீனவின்வடபாகத்தாருக்கு அர்த்தமாகாது. சீனதேச முழு வதற்கும் "மங்கரீன்" என்ற பெயருள்ள ஒரேவிதமான அக்ஷரங்களிருந்தாலும் எழுதப்பட்ட ஒரே வார்த்தைக்கு வட நாட்டார் உச்சரிப்பு ஒருவிதம், தென் நாட்டார் உச்சரிப்பு வேறு. சுத்த வித்தியாசமானதுதான். இதனல் தென்னட்டார் பேச்சு வடநாட்டாருக்கு அந்நிய பாஷைபோலவேயிருக்கும். கன்ரேன் பாகத்தார் மற்ற மாகாணத்தார் தங்கள் ஆலோசனை யைக் கேட்டாலும் கேட்காவிட்டாலும் அதைச் சட்டை பண்ணமல் முன்னேற்றத்தொண்டில் மற்ற மாகாணங்கள் பின் தாங்கினலும் தாங்கள் முன்னேறி தங்கள் மாகாணத்தை அதிக நல்வாழ்விற்கு கொண்டுவந்திருக்கிறார்கள். சீனவில்

மத்தியசர்க்கார் என்ற பிரதம அரசியலதிகாரிகள் சீனபிரதம நகரமாகிய நான்கிங்கு நகரிலிருந்து அரசியல் நடத்துகிறார்கள். கன்ரூேன் மாகாணத்தார் இவர்களை அதிகமாய்ச் சட்டை பண்ணுகிறதில்லை. இந்த மாகாணம் தன் அரசியல் காரியத்தைத்தானே பார்த்துக்கொள்ளுகிறது. சொந்த நாணயங்கள், தாங்களே தெரிந்துகொண்ட மாகாண அதிபதி (கவர்னர்), சொந்த சட்டசபை, பட்டாளங்கள், நாணய விஷயங்கள் முதலியன இவர்கள் கைக்குள்ளேயே. நான்கிங்கிலிருந்து ஆளும் மத்தியசர்க்கார் சுன் யாத் ஸென் மரணப்பிரமாணத்தில் விரும்பி கட்டளை கொடுத்ததின்படி நடந்துகொள்ளுகிறதில்லை யென்று கன்ரூேன் மாகாணத்தார் அவர்களைக் குறித்து கூறுகிறார்கள். ஆனாலும் கன்ரூேன் ஜனங்கள் இதர சீன மாகாணத்தாரை விட்டு தங்களைமுழுவதும் பிரித்துக்கொள்ள வில்லை. கொள்ளைக்காரரை அடக்குவதிலும், தபால் விஷயங்களிலும் மத்தியசர்க்காரோடு ஒத்துழைக்கிறார்கள். இப்போது 7-வருஷங்களாக மத்தியசர்க்கார் மாருமல் ஒரே நிலையாய் ஸ்திரமாக அரசியல் நடத்தி பல முன்னேற்றத் தொழில் புரிந்து வருவதால் கன்ரூேன் மாகாணத்தாரும் இனி மத்திய சர்க்காரின் அதிகாரத்தை ஏற்றுக்கொள்வார்களென்று எண்ண இடமுண்டு.

ஏன் இவ்வளவு விவரமாக எல்லாம் இவ்வாறு எடுத்துரைத்தேன்? நமக்கு இங்கே நல்ல பாடமுண்டு. நமது இந்தியா தேசமும் பாஷை மாகாணங்களாகப் பிரிக்கப்பட வேண்டும். அதாவது தென்னிந்தியா தமிழ், தெலுங்கு,

கன்னடம், மலையாளமென நான்கு மாகாணங்களாகவேண்டும். ஒருமாகாணம் முன்னேற இன்னொரு மாகாணம் தடையாயிருக்கக்கூடாது. தமிழ் நாட்டிற்கு அரசியல் பாஷையும் உயர் கல்விப்பாஷையும் தமிழ்ப் பாஷையில் தானிருக்கவேண்டும். தமிழர் முன்னேற்றத்திற்கு தமிழ்மக்கள் ஒற்றுமையாகப் பாடுபட்டுத்தொண்டு புரியவேண்டும். இதர மாகாணங்கள் நல்மாதிரியைமாத்திரம் பின்பற்றி அந்தமாகாணங்கள் தங்கள் அசமந்தம்,முயற்சியின்மை, மூடத்தனம், பிரிவினைகள் முதலியவற்றால் முன்னேற்றமடையாதபடி பின்தாங்கினால் அதினால் தமிழ்நாட்டிற்கு இடையூறு வாராதபடி கவனித்து, தங்கள்மட்டுமாவது முன்னேற்றமடைந்து நல்மாதிரி காட்டவேண்டும். இப்படிச்செய்வதால்தான் 200-லக்ஷத்திற்கு அதிகமான தமிழ் மக்கள் விசேஷமாக கிராமத்தினர் முன்னேற்றமடைந்துவாழ ஏதுவாகும். மற்ற இந்திய மாகாணங்களுக்கு எவ்வித இடையூறுமின்றி ஒற்றுமைச் சிந்தையோடு இப்படியே இந்தியாவின் பல பாஷை மாகாணத்தாரும் நடந்துகொண்டால் இந்தியாமுழுவதும் ஏகமாய் வாழ்வடையும். இவ்விதம் செய்துகொள்வதால் மாகாணப் பிரிவினைச் சச்சரவுகள் ஏற்படாதாவென்று சிலர் ஆக்ஷேபிக்கலாம். இந்தியாவில் நம்மை இணைக்க மத்திய அரசியல் வேண்டாமென்று நான் சொல்லவில்லையே. மத்திய அரசியல் பாஷையாக ஹிந்தி பாஷையும், இதரதேசங்களோடு வியாபாரம் முதலிய சம்பந்த நன்மைக்காக ஆங்கிலமும் வேண்டியவர்கள் பாஷையாக மாத்திரம் கற்றுக்கொள்ளலாமே. இந்தியா பிரிவினைப்படாதபடி ஒற்றுமைக்கு வேண்டிய சாதனங்களைக் கையாடிக்

கொள்ளலாம். ஆனால் ஒவ்வொரு பாஷை மாகாணங்களினு முள்ளலக்ஷக்கணக்கான பாமரமக்களின் முன்னேற்றத்தையே பிரதானமாகக் கையாடாத அரசியலால் என்ன பிரயோஜனம்?

காலை போஜனத்திற்குப்பின் புகைவண்டி மார்க்கமாய் கன்றூனை விட்டுப் புறப்பட்டேன். வழியில் பல நெல்கழனி களிருந்தன. ஸோயா அவரைப்பயிருமுண்டு. நிலவளம் நீர் வளம் பொருந்திய நாடாகத் தோன்றியது. பெண்கள் ஒரே எருமை பூட்டிய ஏர் ஓட்டுவதைப் பார்த்தேன். நதி யோர மாக புகைவண்டியோடிற்று. மதியம் கவுலூன் ஊர் சேர்ந்து தோணியில் அக்கரையிலுள்ள ஹாங்காங் தீவு சேர்ந்தேன். முந்தி எனக்குதவியாயிருந்த டாக்டர் ஊ தமது மோட்டாரில் ஊர் சுற்றிப் பார்க்க என்னை டாக்டர் ரோஸாவுடனனுப்பினர். குன்றின்மேல் போய் சுற்றுக்காட்சி பார்த்தோம். மழை மேகம் சற்று நீங்க சூரியன் பிரகாசிக்க ஆரம்பித்தது. எதிரே சிறிய கடல் குடாக்களும் அதற்கப்பால் சமுத்திரக் காட்சியும் சுந்தரமாயிருந்தன. சனிக்கிழமை ஒரு பெரிய அமெரிக்காதேச கப்பலில் புறப்பட்டேன். சகலவித சவுகரியங்களும் உள்ள நல்ல கப்பல். நல்ல சிநேகிதரும் கிடைத்தார்கள். கப்பல் மாலுமி ஸ்வீடிஷ் தேசத்தவர். நல்ல சாதுவான மனுஷர். கப்பல் யந்திரங்களை எனக்கு விவரித்துக் காட்டினர். கப்பலில் கம்பியில்லாது தந்தி சமாச்சாரமனுப்பும் யந்திரமுண்டு. அமெரிக்கர்தான்கப்பல் அதிகாரிகள். ஆனால் பந்திபரிமாறுவது சீன வேலையாட்கள். கடல் பிரயாணஞ் செய்வதில் மாம்சம் புசியாத சைவர்களுக்கு கஷ்டம்தான். ஆனால் பல பழவர்க்கங்

கள் கொடுப்பார்கள். இந்தியா சுதந்தரமடைந்து இந்திய கப்பல்கள் திரைகடலோடும்போதுதான் சைவர்களின் சௌகரியங்களும் கவனிக்கப்படும் என்போமா? நமது கப்பல்கள் ஓடுவது என்று? கப்பல் வடதிசையாக ஷாங்காய் நகரம் நோக்கிச் சென்றது. கடலமர்ந்திருக்க சுகமாய் யாத்திரை செய்தோம்.

திங்கள் 23—4—1934 ஷாங்காய் நதி முகத்துவாரம் சேர்ந்தோம். மிகுந்த மூடுபனியினால் நதிக்குள் கப்பல் பிரவேசித்துச் செல்லத்தடைப்பட்டு மதியத்திற்குமேல் 2 மணி வரை காத்திருந்தோம். பின் நதியாத்திரை செய்து இரவு எட்டரைமணிபோல் ஷாங்காய் நகரம் சேர்ந்தோம். சீன உத்தியோகஸ்தர் எங்கள் பிரயாண அநுமதிப் பத்திரப் பரீட்சை செய்து இறங்க உத்தரவு கொடுக்க இரவு ஒன்பதே முக்கால் மணியாயிற்று. அப்பால் சாமான்களைப் பரிசோதனை செய்யும் சுங்க அதிகாரிகளைக் குறித்தென்னென்பேன்! நடு இரவுமட்டும் காக்கவைத்தார்கள். என்னை வரவேற்றுக் கொள்ள என் சீன நண்பரை எங்கே காணலாமென்று ஆவலாய் இங்குமங்கும் நோக்கிப் பார்த்தேன். சுங்க அதிகாரிகளோ வெளியிலிருந்து ஒருவரும் நாங்களிருந்த இடம் வராதபடி தடுத்துவிட்டார்கள். அவரை நான் கண்டு பிடிக்கமுடியவில்லை. பாஷையோ எனக்கொன்றும் தெரியாது. நடு இரவில் முற்றும் அந்நியனாகிய நான் என்ன செய்யக்கூடும்? மிகுந்த கஷ்டத்தோடு இரண்டொரு ஆங்கில வார்த்தை தெரிந்த ஒரு மோட்டார் வண்டிக்காரனுக்கு என் சீன நண்பர்

விலாசத்தைத் தெரியப்படுத்தி அவன் வண்டியில் நண்பர் வீடு சேர்ந்து வெளிவாசல் காவல்காரனை எழுப்பி வீடு எங்கென்று விசாரித்தோம். நடுஇரவு கடந்து அப்பொழுது 1-மணி. ஷென் என்ற என் சீன நண்பர் மனைவி விழித்துக் காத்துக் கொண்டிருந்தார்கள். கதவைத்தட்டவும் அம்மாள் மச்சிலிருந்து ஓடி இறங்கிவந்து கதவைத்திறந்து என்னை வரவேற்றுக்கொண்டார்கள். தங்கள் கணவன் என்னைச் சந்திக்க துறைமுகத்தில் காத்துக்கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். ஷென் நண்பரும் என்னைத் துறைமுகத்தில் காணாததினால் வீடுவந்துசேர்ந்தார். என்னைக்கண்டு சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டார். அவர் ஒரு கல்லூரித்தலைமை ஆசிரியராக உத்தியோகம் செய்துவருகிறார். இவர் திருப்பத்தூர் ஆசிரமத்திற்கு 1928-ம் வருஷம் வந்திருந்து ஊரில் சீனாவைப்பற்றி உபந்நியாசமும் செய்தார்.

மறுநாள் திரு. ஷென் வாலிபர் கிறிஸ்தவசங்கக் காரியாலயத்திற்கு என்னை அழைத்துக்கொண்டு போனார். இச்சங்க காரியதரிசி ஒருவராகிய திரு. "வூ" என்பவரைச் சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தேன். இவர் அஹிம்ஸை விசுவாசமுள்ளவர். மகாத்துமா காந்தியைப்பற்றி வெகுமதிப்புடன் பாராட்டுபவர். அவரெழுதிய சத்தியசோதனை என்ற புத்தகத்தை சீன பாஷையில் மொழிபெயர்த்திருக்கிறார். சீனாவில் உயர்கல்விகற்றவர்கள் மேல்நாட்டு ஆடைதரித்துக் கொள்வதுபோல் இவர் உடுத்தாமல் தேசீய சீன ஆடை தரித்திருந்தார். (சீன நகரவாசிகளானவர்களில் பல வாலிப

பெண்களும் ஆண்களும் சிகரெட் பிடிக்கவும் ஆரம்பித்து விட்டார்கள் !) இந்தியாவின் விஷயங்களில் திரு. வூ அவர்களுக்கு அக்கரையுண்டு. அவற்றைப்பற்றி என்னிடம் ஆவலாய் விசாரித்தார்.

ஷாங்காய் நகரம் சீனதேச தற்கால நகரங்களில் பெரிய தொன்று. நதியோரம். வெகு விஸ்தீரணமானது. இதைச் சுற்றி இதிலும் பெரிய மகாஷாங்காய் என்ற பெருநகரமுண்டாக்க சீனதேசத்தினர் ஆலோசனை செய்கிறார்கள். அநேகமாக மட்டமான பூமி. பல பெரும்வீதிகளும், கடைத்தெருவுகளும், பெருங்கட்டடங்களுமுண்டு. மோட்டார்வண்டிகள் இங்குமங்கும் பறந்துக்கொண்டிருந்தன. எங்கும் ஜனக் கூட்டம். இந்த நகரத்திலும் ஜப்பானியரும், பிரஞ்சு, ஆங்கில நாட்டாரும் சிற்சிலபாகங்களை தங்கள் தங்கள் ஆதீனத்திற்குள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். சுன் யாத் ஸென் மரண சாசனத்தில் (கட்டாய) "அநியாய உடன்படிக்கை" என்பது இதுபற்றித்தான். ஆனால் இவைகளும் நகரத்தினுள்ளேயே தானே சீன பாகங்களுக்குத் தொடர்ச்சியாய் இருப்பதால் அந்நிய நாட்டாரின் பாகங்களுக்கும் சீன பாகங்களுக்கும் நகரத்தில் பலதேசப் போலீசார் நிற்பது தவிற வேறு வித்தியாசம் கண்டுபிடிப்பது கஷ்டமே. நகரத்தின் ஆங்கிலபாகத்தில் இந்தியாவிலிருந்து கொண்டுபோகப்பட்ட சீக்கிய சிப்பாய்கள் போலீஸ் வேலைசெய்கிறார்கள். நான் ஹாங்காங்கிலிருந்த போதும் இவர்களை அங்குபார்த்தேன். என்னிடம் இந்துஸ்தானிபாஷைபேச ஆசைப்பட்டார்கள். சீனரை அடக்கியாள

நம்மவரை அங்குகொண்டுபோய் உபயோகிப்பது சரியோ? இந்நகரத்தில் மேல்நாட்டாரும் ஜப்பானியரும் தமதாக்கிக் கொண்ட பாகங்களைத் திரும்பவும் சீன அரட்சாட்சிக்குக் கொண்டுவர சில வருஷங்களுக்குமுன்னே சீனர் பிரயாசித்து அந்நிய நாட்டினரோடு போராடினார்கள். இதன்பயனாக தற்காலத்தில் இந்த நகரம் அந்நிய பிரதிநிதிகளும், சீனர்களும் கலந்த நகர (முனிசிபல்) அரசியலுக்குள்ளிருக்கிறது.

மத்தியானம் திரு. பொன் என்ற பெரியாருடன் விருந்துண்டேன். வேறு சில நண்பரையும் என்னைச்சந்திக்க விருந்துக்கழைத்திருந்தார். பின்பு ஊர் சுற்றிப்பார்க்க என்னை அழைத்துக் கொண்டுபோனார். பழைய ஷாங்காய் நகரம் என்ற பாகம் பார்த்தோம். ஓட்டுக்கூரையுள்ள பண்டைய கட்டடங்கள் பலவிருந்தன. கூரையோரங்கள் சுருண்டு மேலே நோக்கியனவாயிருந்தன. பூர்வீககால பிரபு ஒருவர் மாளிகையைப்பார்த்தேன். உள்ளே பலசித்திரவேலைகளும். சிறிய பூங்காவனமுமிருந்தன. நெருங்கிய ஜனக்கூட்டங்கள் கடைத்தெருவில் கூடியிருந்தன. ஈயநிறமானதும் வட்டத் துண்டுகளாக கத்தரிக்கப்பட்டதுமான காகிதத்துண்டுகளாகிய 'காகிதப்பணம்' விற்கிற கடைகளையும் பார்த்தேன். சீனதேசத்தில் புத்தகோயில்களில் காசுகளைப் பீடங்களில் காணிக்கைப் பலியாகத் தகனிப்பதுண்டாம். ஏழை ஜனங்களுக்கு இப்படிச் செய்யப் பணமில்லாததால் இவ்வகைக் காகிதப் பணங்களை பலர் வாங்கிக் காணிக்கையாகக் கோவில்களில் எரிப்பார்களாம்! ஏராளமாக எரித்தால் புண்ணியம்

போதும்! சீனாவில் நாணயமாக செம்பு, வெள்ளிக்காசுகளும், காகிதநோட்டுகளும் உபயோகிக்கிறார்கள். காகிதநோட்டு களுக்குத்தான் மதிப்பு அதிகம். வெள்ளிமுழுநாணயத்திற்கு டாலர் என்று பெயர். சீன டாலர் நமது ரூபாய்ஒன்றுக்கு சற்றுகுறைந்த மதிப்புள்ளதுதான். செம்புத்துட்டுக்கு மதிப் புக்கிடையாது. ஒருடாலருக்கு 330 செம்புக்காசுகள். ஆனால் கிராமாந்திரங்களில் இவற்றிற்கு மதிப்புண்டாம். ஒரு ஏழை மனுஷன் சில செம்புத்துட்டுக்கு காய்ந்த தோசைவடிவான ஒரு ரொட்டிவாங்குவதைப் பார்த்தேன். இந்தியாவைப் போலவே சீனாவிலும் கிராமத்தினருக்கும், நகரவாசிகளுக் கும் பெரும் வித்தியாச மேற்பட்டிருக்கிறது. கல்வியிலும், வீடு வாசல், ஆடை ஆபரணங்கள், ஜீவன சவுகரியங்கள் முதலிய பலவற்றிலும் வித்தியாசமுண்டு. கிராமங்களை உறிஞ்சி, தோலுரித்து இவ்விதமாக கிராமம் பாழாவதினால் நகரங்கள் பெருகுகின்றனவென்று நண்பர் பொன் என்னிடம் சொன்னார். நகரங்களில் தங்கி கலாசாலைகளில் உயர் கல்வி கற்றுப் பட்டம் வாங்கின தற்கால சீன மாணவர் கிராமாந் திரங்களில்போய்த் தொண்டு செய்து தம் ஜனங்களுக்காக தியாகசிந்தை காட்ட விரும்புகிறதில்லை. ஆனால் பொதுக் கூட்டங்களில் மாத்திரம் கிராம சீரமைப்பின் பெரும் அவசி யத்தைக் குறித்து சாதுரியமாய் உபந்நியாசிக்க உற்சாக மாயெழுந்து நின்று சொற்பொழிவு செய்து விடுவார்களாம்.

ஆஹா! சபாஷ்! நமது நாட்டு வாலிப சாதுரியப்பயில் வான்களும் இவ்வாலிபரும் எத்துணை சரிசமானம்! கல்வி

கற்ற சீனரும் நாமும் நமது குறைகுற்றங்களிலாவது ஒத்திருக்கிறோமல்லவா?

சாயந்திரம் ஒரு வைத்தியசாலையைப் பார்க்க திரு. பொன் என்னை அழைத்துக்கொண்டு போனார். பெரிய வைத்தியசாலை. ஒரு டாக்டரம்மாள் எங்களுக்கு எல்லா இடங்களையும் காட்டினார்கள். ஒரு பாகத்தில் சில நூதன வியாதிகளைக் குறித்து நுட்பமாய் ஆராய்ச்சி செய்யும் வேலை நடந்துவருகிறது. பெரிய சமையலறையுமிருக்கிறது. இடம் வெகு சுத்தமாய் வைக்கப்பட்டிருந்தது. தற்கால சாஸ்திர முறைப்படி அமைக்கப்பட்ட இரும்பு அடுப்புக் கணங்களின்மேல் வைக்கப்பட்ட பெரும் சமையல் பாத்திரங்களில் சமையல் நடந்தன. பசும்பாலுக்குப் பதிலாக ஸோயா அவரை விதைகளினின்று பாலெடுத்து உபயோகிக்கிறார்கள். இது பசும் பால் போலவே தோன்றுகிறது. அதில் ஆகாரசக்தியுமுண்டென்று எனக்குச் சொன்னார்கள்.

இந்த நாளில் எனக்கு இவ்வளவு உதவியாயிருந்த திரு. பொன் நல்ல தனவான். உயர் கல்விகற்று மேல்நாடுகளில் பிரயாணஞ் செய்த பல அநுபவமும் உள்ளவர். வயது 50 போலிருக்கலாம். வெகு குசாலாய்ப் பேசுவார். சுறுசுறுப்பும் உற்சாகமுமுள்ளவர். தற்கால நாகரீக அறிவெல்லாமுண்டு. எனினும் விவாகமில்லாத பிரம்மச்சாரியாக தன் ஆயுளையும் பணத்தையும் தமது ஜனத்தின் நன்மைக்காகச் செலவழிக்கிறார். சீன உடைதானணிவார். அந்நியனாகிய எனக்கு மிக உதவி செய்து உபசரித்தார்.

இரவு நண்பர் ஷென் வீட்டில் பல சீன நண்பர்களுடன் கூட எனக்கு விருந்தளித்தார்கள். நாம் கையினுல் சாப்பிடுகிறேம். மேல் நாட்டார் கரண்டி பிடித்துண்பார்கள். சீனரும் ஜப்பான் தேசத்தினருமோ இரண்டு குச்சிகள் பிடித்துப் புசிப்பார்கள். ஆகாரவஸ்துக்களை நான் குச்சிகளில் பொறுக்க ஆரம்பிக்கவும் வேடிக்கை ஆரம்பித்தது! குச்சிகளுக் கெட்டியவை பிடிப்பிற்கெட்டவில்லை. பிடிப்பிற்கெட்டியவை வாய்க்கெட்டவில்லை. இங்குமங்கும் கறிபதார்த்தங்கள் சிதற ஆரம்பித்தன. இந்தத்தகாறில் என் வயிறு நிரம்புவதெங்ஙனம்? எனினும் என்னருகிலிருந்த சீன மாதர்கள் தங்கள் குச்சிகளினு லெனக்குதவிசெய்து என் பசியாற்றினுர்கள். ஏனைய கனவான் களும் தேசீய பந்தி ஆசார முறைமைகளில் நான் செய்த தவறுகளைப் பாராட்டாது பெருந்தன்மையாய் நடந்துகொண் டார்கள். சோறு, சீன பாக சாஸ்திர முறைப்படி ஆக்கப்பட்ட பலவித கறி பதார்த்தங்கள், பலகாரங்கள் அளவற்றிருந்தன. முடிவுதானுண்டோ வென்றென் மனதிற் சந்தேக மேற் பட்டது! ஆனுல் எனக்கு மதிப்புக்காட்ட இவ்வளவு ஏராள மாய் பதார்த்தங்கள் ஆயத்தம் செய்திருந்ததாகவறிந்தேன். வழக்கமாய் இவ்வளவு அதிகம் கிடையாதாம்.

நானிருந்த நாட்களில் சீனுவில் அதிக மழை பெய்து கொண்டிருந்தது. குளிராயுமிருந்தது. சூரியப் பிரகாசம் அதிகமில்லை. ஆனுல் வழக்கமாக ஏப்பிரல்மாதமிப்படியிராதாம்.

புதன்கிழமை (25—4—1934) நண்பர் ஷென் தலைமை ஆசிரியராயிருக்கும் கல்லூரியைப் பார்த்தேன். 200 பையன்

கள் சமய ஜாதி பேதமின்றி ஒன்ருய்ச்சாப்பிட்டுத் தங்கிப் படிக்கும் பாடசாலை. பையன்கள் நல்ல பருமனும் உயரமுமுள்ளவர்கள். சீனவாலிபர் போஜனத்திற்கஞ்சுகிற வர்களல்ல! பையன்கள் நல்ல பலசாலிகளாகத் தோன்றினுர் கள். சீனுவில் கட்டாயப்படிப்பு. எல்லா பாலிய ஆண்களும், பெண்களும் பள்ளிக்கூடம் போய்ப் படிக்கவேண்டும். கல்வி தாய்ப் பாஷையாகிய சீன பாஷையில்தான். கட்டாயப் படிப்புச் சட்டம் சீனுவில் எழுத்தறிவு நன்ருகப் பாமர மக்க ளுக்குள் பரவிவரச்செய்கிறது. எல்லா மாணவர்களும் ஒரே விதமாக ஜாதி, சமய, சம்பத்து யாதொரு பேதமுமில்லாமல் சம ஆடை தரித்திருக்கிருர்கள். கால்சருய், சொக்காய், சப்பாத்தும், தலைக்குல்லாவும், பார்க்கச் சிறிய சிப்பாய்கள் மாதிரி எனக்குத்தோன்றிற்று! எனினும்பேதாபேதமில்லாமல் பையன்களுக்குள் ஒற்றுமைக்குதவியாக இவ்வாறு ஒரே உடை தரிப்பது நன்றே. இதை நம் நாட்டுக் கல்வித் தலைமையதிகாரி களும் கவனிப்பது நன்று. படிக்கும் இளைஞருக்குள் பெருமை யின்மை, ஐக்கிய சிந்தை, நல்லொழுக்கம், சுயகண்டனம் மிக அவசியம். பள்ளிக்கூடத்தில் வாலிபர் படுக்கும் அறைகளையும் பார்த்தேன். இரண்டல்லது மூன்று பெயர் ஒரு அறைக்கு. கட்டில்கள் இருந்தன. நமது நாட்டுப் புகை வண்டிகளினும், பெருங் கப்பல்களினு மிருக்குமாப்போல் இரண்டு கட்டில்கள் ஒன்றின்மேலொன்று. ஒரு பொதுச் சாலையில் தேசபக்தன் சுன் யாத் ஸென் படம் சுவரில் தூக்கியிருக்கிறது. இதன் கீழ் அவர் மரண சாசனம், மேலே தேசியக்கொடி. ஒவ்வொரு புதனும் எல்லாப் பையன்களும் இந்தச் சாலையில்கூடி தேசியப்

பாட்டுப்பாடி படத்தின்முன் தலைவணங்கிச் செல்வார்கள். இப்படி ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் செய்தால்தான் சர்க்கார் பண உதவி செய்வார்கள். இது தேச சட்டம்.

பள்ளிக்கூடங்களில் ஒரு சமயத்தினர்க்கு இன்னொரு சமயத்தினர் தங்கள் மார்க்க போதனைகளைக் கட்டாயப் படுத்திக் கற்றுக் கொடுக்கக்கூடாது. பொது சன்மார்க்கப் பிரமாணங்கள் மாத்திரம் கற்றுக்கொடுக்கலாம். பையன்கள் தங்கள் மனச்சாட்சியின்படி நடந்துகொள்ளலாம்.

இதன்பின் ஒரு பெரிய வைத்திய ஆராய்ச்சிசாலை, வைத்தியகலாசாலை முதலியன பார்க்கப்போனேன். நம் தேசம்போன்ற கீழ்நாடாகிய சீனதேசத்தில் நம் நாட்டிற்குப் பின்னாகவே தற்கால சாஸ்திர முறைப்படி வைத்தியம் கற்றுக் கொடுக்கிற கலாசாலைகள் முதலியன தொடங்கியிருந்தாலும் சகல சாஸ்திரங்களையும் சீனபாஷையில் மொழிபெயர்த்து தாய் பாஷையிலேயே எல்லா உயர் கல்வியும் கற்றுக்கொடுக்கிறார்கள். இது நமது தேசத்திற்கும் எவ்வளவு அவசியம். சீனாவில் பொதுக்கல்விச்சாலை, வைத்தியக் கல்லூரி, சட்டம் படிக்கும் வக்கீல்கள் கல்லூரி அல்லது சிற்ப யந்திர சாஸ்திரக் கல்லூரி ஆக குறைந்தபக்ஷம் இவ்வாறு மூன்று கல்லூரிகளாவது ஒரு இடத்தில் இருந்தால் அவற்றை சர்வகலாசாலையாக்கி பட்டங்கள் கொடுக்கும் அதிகாரம் சர்க்காரிடம் பெற்றுக் கொள்ளலாம். தற்காலத்தில் கலாசாலை மாணவர்களுக்குள் ஆத்மீகவிஷயத்தில் அசட்டையேற்பட்டிருப்பதாக சீனப்

பெரியார் சிலர் என்னிடம் சொன்னார்கள். இது நமக்கோர் எச்சரிப்பு.

வியாழக்கிழமை 26-ம் தேதி இரவு 11-மணிக்குப் புறப்பட்டு மறுநாள் விடிய நாங்கிங்கு நகரம் சேர்ந்தேன். இது தற்சமயம் சீனதேச மத்திய சர்க்காரின் பிரதான நகரம். சீன பட்டாளங்கள், கப்பல் படைகள், கல்வி, சுகாதாரம், சட்டங்கள் இவ்விவற்றின் தலைமை மந்திரிகளின் காரியாலயங்களெல்லாம் ஓர் பிரதான பெரும் வீதியின் இருபக்கங்களிலுமிருக்கின்றன. நகரம் வெகு கவனம் சிரத்தையோடு அமைக்கப்பட்டிருக்கிறது. விசாலமான — நன்றாய் போடப்பட்ட ரஸ்தாக்கள், சிற்ப ஒழுங்குடன் கட்டப்பட்ட கட்டடங்கள் முதலியவைகளைப் பார்க்கலாம். பெரும் வீதிகள் போட இடையூறாக எந்தப் பழைய வீடுகளாவது குறுக்கே சற்றாகிலும் வந்தால் அவற்றை இடித்து ரஸ்தாக்களை செவ்வனே நேரொழுங்கும் விசாலமுமுள்ளவைகளாகச் செய்திருக்கிறார்கள். நமது ஊர்கள் முன்னேற்றமடைய வியாபாரம் போக்குவரத்து விருத்தியடைய நமக்கும் இந்தப் பெரும் புத்தி வரவேண்டும். நகரத்தைச் சுற்றி தூரத்தில் பல மைல் சுற்றளவுள்ள பண்டைய கோட்டை மதில்கள் இருக்கின்றன. இங்கு ஒரு சிறிய குன்றிருக்கிறது. பழையகாலத்தில் இதின் மேலிருந்து நகாரா அடிப்பார்களாம். இந்நகரத்தில் இரண்டு பெரிய வைத்தியசாலைகளும், ஒரு சர்வகலாசாலையுமிருக்கின்றன. நகரத்திற்கு சற்று தூரத்திலே டாக்டர் சுன் யாத் ஸென் சமாதி ஒரு மலைச்சார்பிலிருக்கிறது. வெகு தூரமாகக் கீழேயிருந்து சமாதியிருக்கிற மலைமட்டும் படிகள்மேல் படி



இலங்கையில் புத்தமதக் குருக்கள்.



சீன தேசத்தில் ஷாங்காய் நகரம் — நிற்பவர் ஒரு சீன உபாத்தியாயர். (விவரம் 25-ம் பக்கம் பார்க்கவும்.)



சீனதேசப் பிரதம நகராகிய நாங்கிங்கு நகரத்தில்
டாக்டர் சுன்யாத்ஸென் பெரியாரின் சமாதி.
(விவரம் 32, 33-ம் பக்கங்கள் பார்க்கவும்.)



ஜப்பானியருக்கு அருமையான "செரி" புஷ்பங்கள்
நிறைந்த மரம். (48-ம் பக்கம் பார்க்கவும்.)

களாக அநேக படிகள் அடுக்கடுக்காய் இருக்கின்றன. மேலே ஏறிப்போகும் வழி நெடுக இருபக்கங்களிலும் அழகிய பூங்காவனங்களும், கல்மண்டபங்களும், ஞாபகக்கல்வெட்டு வசனங்களும் விமரிசையாக அமைக்கப்பட்டிருக்கின்றன. பற்பல ஸ்தானங்களில் சிப்பாய்கள் காவல் காத்து நிற்கிறார்கள். படமெடுக்க அநுமதி கிடையாது. சிப்பாய்களோ ஒருக்காலும் தங்களை படம் பிடிக்க இடம் கொடுக்கமாட்டார்கள். சமாதியின் கிட்ட இருக்கும் கல்மண்டபத்தில் சுன் யாத்ஸென் சிலையிருக்கிறது. சுவர்களில் பல காட்சிகள் சித்திரமாக வரையப்பட்டிருக்கின்றன. இதற்குள் பிரவேசித்தவுடன் "அமர்ந்திரு" "வணங்கு" என்ற இந்த வசனங்கள் எதிரே இருக்கின்றன. உள்ளே பிரவேசிக்கிறவர்கள் ஒரு பெரியாரின் சமாதியினருகில் செல்லுகிறவர்களாக உணர்ந்து வணக்கத்தோடு நடந்துகொள்ள ஒரு விளம்பரமிருக்கிறது. சமாதியோ இதற்குமப்பால் இரும்புக்கம்பிகள் போட்ட பெரும் வாசலின் பின்னேயிருக்கிறது. அதைப்பார்க்க முடியாது.

சீன வஸ்தாதிகள், தேகாப்பியாசம் விளையாட்டுகள் முதலியவற்றில் தேர்ந்த நிபுணர்கள். இவர்கள் தங்கள் சாமர்த்தியங்களைக்காட்டுவதைப்பார்க்க பெரும் ஜனக்கூட்டம் கூடும் தேகாப்பியாசப் பெருஞ்சாலையையும் பார்த்தேன். சுற்றி பல நீண்ட படிகள்மேல் படிபோல் அடுக்கடுக்காக உயர்ந்த ஆசனங்கள் கட்டப்பட்ட கூரையில்லாத பெரிய திறப்புக் கட்டடமாகிய பந்தயசாலையும், நீந்தக்கட்டியிருக்கிற பெரிய குளமுமிருக்கிறது. சங்கராந்தி பொங்கல் பண்டிகையில் மாடு

களை இம்சித்து ஓட்டி மகிழாமல் தேகாப்பியாசப் பந்தய விளை யாட்டுகள் ஓட்டம் முதலியன வைத்து மகிழ்வது அதிக மெய்ச்சந்தோஷமல்லவா ! தேகாப்பியாசத்தின் அவசியத்தை உணர்ந்து தமிழ் மக்களும் இதைக்கையாடவேண்டும். முற் காலங்களில் தமிழ் மக்கள் தேகாப்பியாசம் செய்து வஸ்தாதி களாயிருக்க வில்லையா ?

மதியத்திற்குமேல் சீனக்கிராமங்களில் விவசாய விர்த்திக் காக நுட்பமான ஆராய்ச்சிசெய்யும்படி ஏற்படுத்தியிருக்கும் மத்தியவிவசாய ஆராய்ச்சிசாலையைப் பார்க்கப்போயிருந்தேன். சீன தேசத்தை இதற்காக விவசாய மாகாணங்களாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்திற்கும் விசாரித்தறியும் உத்தியோகஸ்தர்களை அனுப்புகிறார்கள். நூற்றிற்கு எத்தனை கிராமத்தார் நெற்பயிர் அல்லது வேறு பயிர் செய்கிறார்கள், இவற்றில் எவ்வளவு பாகம் விற்றுவிடுகிறார்கள், எம்மட்டும் தாங்களே புசிக்கிறார் கள், விவசாயப் பொருட்களை விற்க சந்தை முதலிய என் னென்ன செளகர்யங்கள் கிராம சமீபத்திலிருக்கின்றன, எவ் வளவு தூரம் இவை விலையாகின்றன, இந்த விவசாயிகளின் பிள்ளைகள் படிக்கச் சமீபத்தில் பள்ளிக்கூட வசதிகளுண்டா வென்றிப்படி கிராம முன்னேற்றத்திற்கு அவசியமான பின்னும் பல காரியங்களையும் நுட்பமாய் ஆராய்ந்தறிந்து கணக்கிடுகிறார்கள். இவற்றையெல்லாம் அச்சிட்டுப் பிரசாரம் செய்கிறார்கள். இதினால் தெளிவாகும் விஷயங்கள் சர்க்கார் கிராம சீரமைப்பின் வேலையை சரிவரச் செய்து கிராமங்களை முன்னுக்குக் கொண்டுவர அவர்களுக்குப் பெரும் உதவியா யிருக்கும் என்று கருதப்படுகிறது.

நாங்கிங்கிலிருந்து திரும்பி ஷாங்காய் மார்க்கமாய் அதற்கு தெற்கேயிருக்கும் ஹாங்சேள நகரத்திற்கு (எப்ரில் 27உ) போனேன். நகர நடுவில் விசாலமான பெரிய ஏரியும் வளைந்து ஓடும் அழகிய ஆறும், சுற்றியிருக்கும் மலைகளும் கண் கவரும் சுந்தரக்காட்சி. பாஷை தெரியா அந்நியனும், எவருக்கும் அறிமுகமில்லாதவனுமாகிய எனக்கெவர் உதவி இங்கு கிடைக்குமென்ற சந்தேகம் என்னை சற்று திகைக்கச் செய்தது. கடவுளைப் பிரார்த்தித்து நகரத்திற்கு சற்று தூரத்திலிருந்த ஓர் கிறிஸ்தவ கல்லூரி திசையாக சென்றேன்.

இங்கு சாஸ்திரியாயிருந்த ஒரு பெரியார் பெயரை நாங்கிங்கில் ஒருவர் சொல்லியிருந்தார். சில மைல் தூரம் மோட்டார்பஸ் வண்டியில் சென்று பின்பு இறங்கி நடந்தேன். மலையோரம், மாணவன்போல் தோன்றின ஒரு சீன வாலிபன் ஓட்டமாய்ப் போய்க்கொண்டிருந்தான். கல்லூரியில் ஏதோ வகுப்பிற்குப் பிந்திவிட்டானுக்கும்! நானும் வித்தை கண்டு பிடித்தவன் போல் அவன் பின்னேடினேன். இதேமலைச் சார்பிலிருந்து உவாங் சாஸ்திரி இறங்கி வந்தார். என்னைக் கண்டு வெகு முகமலர்வோடு வரவேற்றுக்கொண்டார். பிரார்த்தனை கேட்டுதவும் கடவுளின் திருக்கடாக்ஷமே இது என்று நன்குணர்ந்தேன். கல்லூரிக்கென்னை உவாங் சாஸ்திரி அழைத்துக்கொண்டு போனுர். எல்லாம் சுற்றிக் காட்டினுர். கல்லூரி மலைமேல். அதின் மேலிருந்து பார்க்க சுற்றி வளைந்தோடும் பாம்பாறும் (இதுதான் அதின் சீனப்பெயரினர்த்தம்), அக்கரையிலுள்ள குன்றுகளும் அழகிய இயற்கைக் காட்சி

யளித்தன. கல்லூரியில் படித்துக்கொடுக்கும் ஏனைய சாஸ்திரிகளுக்கும் உவாங் சாஸ்திரி என்னைப் பழக்கிவிட்டார். அன்றைய தினம் கல்லூரி மாணவர்களுக்காக ஒரு விசேஷித்த (சீனக்கல்லூரிகளின்) சாதுரிய பந்தய மஹாநாடு நடந்துகொண்டிருந்தது. இதா நகரக் கல்லூரிகளிலிருந்தும் பிரதிநிதிகளாகவும் மற்ற நகரங்களிலிருந்தும் மாணவர்கள் வந்திருந்தார்கள். ஐந்து இளைஞர்கள் பேசினார்கள். இதில் சீனப் பெண்மணியும் ஒருவர். சீனப் பெண்மணிக்கும் பின்னும் இரண்டு இளைஞருக்கும் சாமர்த்தியப் பரிசுகள் கிடைத்தன. ஒரு இளைஞன் மிக நன்றாய்ப் பேசினான். சீன தேச இளைஞர் தங்கள் தேசத்திற்கு எவ்விதம் சேவை செய்யவேண்டுமென்பது அவனுக்குப் பேசும்படி கொடுக்கப்பட்ட பொருள். "தங்கள் வாயை மூடிக் கையினால் வேலைசெய்வதே, இளைஞர் தாய் நாட்டிற்குச் செய்ய வேண்டிய மெய்த் தொண்டு என்றான்". இச்சத்தியமறிவது சீன வாலிபர் மாத்திரமல்ல மற்ற நாட்டின் இளைஞருமறிவது இன்றியமையா அவசியமென்பதை நான் வற்புறுத்தவேண்டுமோ!

இந்தியாவைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லும்படி என்னையும் கேட்டுக்கொண்டபடியால் இளைஞர் பேசி முடித்த பின் நானும் கூட்டத்தில் பேசினேன்.

மறுநாள் உவாங் சாஸ்திரியினுடன் "ஆவி மறைந்திருக்கும் ஆலயம்" என்ற அர்த்தங்கொள்ளும் பெயருடைய புத்த சமயக் கோயில் பார்த்தேன். குன்றுகள், அருவிகள், சிற்றாறுகள், மாச்சோலைகள் மத்தியில் கோவிலிருக்கிறது. திருவிழாச்

சமயமானதால் பெருங் கூட்டம். ஏராளமான கிராம வாசிகள் கூடியிருந்தார்கள். பாதையில் கிராமங்களிலிருந்து கால் நடையாக வந்துகொண்டிருந்த ஏராளமான யாத்திரிகர்களைப் பார்த்தேன். கலாசாலை மாணவர்களுக்குள் மார்க்க அசட்டையிருந்தாலும் கிராம ஜனங்கள் இவ்விஷயத்தில் மிக்க வைராக்கியம் காட்டுகிறார்கள். புத்த சந்நியாசிகளும், கன்னியா ஸ்திரீகளும் கூட்டத்திலிருந்தார்கள். திபேத்து தேச லாமா தான் புத்த மார்க்க ஜகத்குரு போன்ற தலைவர். ஆலய மூலஸ்தானத்தில் பிரமாண்டமான புத்த விக்கிரகங்கள் நிற்கும் பீடத்தினடியில் லாமா உட்கார்ந்து பூசை செய்து கொண்டிருந்தார். காலஞ் சென்றுபோன பெரியார்களின் ஆவிகளுக்காக மந்திரங்கள் ஓதிக்கொண்டிருந்தார். இவர் எதிரே இரு பக்கங்களிலும் அவருடன் சேர்ந்த திபேத்து தேசக்குருக்கள் அவர் செய்வதுபோல் கரங்களை பலவிதமாகக் கூப்பித் திருப்பி, தேகங்களை அசைத்து மந்திரங்கள் ஓதி, வாத்தியங்களும் வாசித்தார்கள். எக்காளம் ஊதுவதும், தாளங்கள் கொட்டுவதும் கலந்திருந்தன. ஜகத் குருவாகிய லாமாவும், உதவி குருக்களும் காவி வஸ்திரம் அணிந்திருந்தார்கள். காகிதங்களில் வரையப்பட்ட முன்னோர்கள் பெயர்களும் ஆலயச் சுவர்களில் பல இடங்களில் ஒட்டப்பட்டிருந்தன.

கடவுள் அநுக்கிரகத்தால் எனக்கு இங்கு கொடுக்கப்பட்ட ஊவாங் நண்பரைப்பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். புத்த சமயத்தினராகப் பிறந்தவர். ஆனால் இவர் 18

வயதாயிருக்கும்போது கிறிஸ்துநாதனின் பக்தனுனர். அதன் பின்னர் ஓர் தீவிலிருக்கும் புத்தமடத்தில் புத்தசன்னியாசி களோடு கூடித்தங்கி தாம் கி றி ஸ் து ப க் த னு க வே ஜெப தியானத்தில் சிறிதுகாலம் செலவிட்டுவந்தார். தற்சமயம் இந்தக் கல்லூரியில் மாணவர்களுக்கு தத்துவ ஞானமார்க்க விஷயங்களைக் குறித்து உபந்நியாசம் செய்கிறார். இவர் கிறிஸ்தவ சாஸ்திரியாயிருந்தாலும் இவர் உபந்நியாசம் கேட்க இக்கல்லூரியில்படிக்கும் புத்தசமயமாணவர் கட்டாயமொன்று மில்லாமலே சந்தோஷமாக வந்து கேட்பதாக என்னிடம் சொன்னார். இவர் மிகச் சாதுகுணம் பொருந்தியவரும் அன்பு நற்சுபாவமும் நிறைந்தவர். சீனுவிலும் ஜப்பானிலும் சமய பேதம் பாராட்டிப் பிரிவினைசெய்யாமல் ஒத்து வாழ்வதை சுருக்கிப்பின்னுலே சற்று விவரமாக பேசுகிறேன். நான் ஷாங்காய் திரும்பியபின் இரவில் ஷென் நண்பர் வீட்டில் பல சீன நண்பருடன் விருந்துண்டேன். பின்பு ஷென் நண்பர் விரும்பி என்னைக் கட்டாயப்படுத்தினதின்பேரில் சீனுவில் நான் செலவிட்டது சொற்பகாலமேயாயினும் என் அநுபவங் களைக்குறித்துப் பேசினேன். அந்நியர்களுக்குபசாரம்செய்து கபட நெஞ்சமில்லாமல் வேண்டிய உதவிசெய்வதில் சீன தேசத்தினரின் சிறப்பைக்கண்டேன். இ தி னு ல் த ா ன் தன்னயக்காரரான நேர்மையற்ற சில அ ந் நி ய நா ட் டா ர் இவர்களுக்கு மோசஞ்செய்துவிடுகிறார்களோ?

நகரங்கள் மிதமிஞ்சி மேல்நாட்டார் நாகரீகங்களின் சௌகர்யங்களெல்லாம் பொருந்தியிருக்க, சீனகிராமங்கள் பின்

தாங்கி தரித்திரமனுபவிக்கின்றன. நகரத்திலிருக்கும் படித்த வாலிபப் பெண்களும் ஆண்களும் மேல்நாட்டு நடையுடை பாவனைகளை நாடுவதும், சிகரெட் பிடித்துக்கொண்டு திரிவதும் போன்ற சில காரியங்களை நான் கவனித்தது, சீனு தன் தேசிய சுதந்தர நாகரீக கலைகளை முற்றிலும் இழந்துபோகநேரிடும் நிலையைக் கையாடப்போகிறதோ வென்றென்னைச் சந்தேகிக்கச்செய்தது. "இந்தியா ஒரே ஒரு அன்னிய ஏகாதிபத்தியத்தினுல் வரும் கேடுகளுக்கு எதிர்க்கவேண்டியிருந்தாலும் சீனுவோ பல ஏகாதிபத்தியங்களோடு போராடவேண்டியதிருக்கிறது'' என்று ஷென் நண்பர் என்னிடம் சொன்னுர்.

ஆகிலும் இந்தியராகிய நாம் சீன தேசத்தாரிடமிருந்து கற்கவேண்டிய சில நல்ல காரியங்களுண்டு.

நம்தேசம்போலவே சீனுதேசமும் ஆசியாக்கண்டத்திலிருக்கும் கீழ்நாடு. கிழக்கு நாட்டார்களாகிய அவர்களுக்கும் நமக்கும் பல விஷயங்களில் ஒற்றுமையுண்டு. விசேஷமாக கிராமாந்திர விஷயங்களில் நம்முடைய நாடுபோலவே பல கஷ்டம் தரித்திரம் முதலியன இருக்கின்றன. சீனதேசத்தார்கள் வழிபடும் புத்த மார்க்கமும் நமது தேசத்திலிருந்தே அவர்களுக்குச் சென்றதென்பதை நாம் மறக்கக்கூடாது. கொஞ்சங்குறைய 1500-வருஷங்களுக்கு முன் ஒரு சீன புத்தசமயபக்தன் நமது தமிழ்நாட்டில் வெகுசிறப்பாக அரசு புரிந்துக் கொண்டிருந்த பல்லவமன்னர்களின் பிரதமநகரமும், தமிழ்க் கலைக்கு மத்தியஸ்தானமும், க்ஷேத்திர ஸ்தலமுமாகிய காஞ்சீபுரமட்டும் சீனுவிலிருந்து யாத்திரிகனுக வந்துபோனதை

சரித்திரம் கூறுகிறது. தமது இந்திய யாத்திரையைப்பற்றி அந்தச் சீன யாத்திரிகர் தமது பாஷையிலெழுதியிருக்கிறார். புத்தகுரு பிறந்து வளர்ந்து தமது சிறந்த போதகங்களைப் போதித்த தேசம் நமது இந்தியாதானல்லவோ? கிறிஸ்து சகாப்தம் ஆரம்பகாலங்களில் நமது தமிழ்முன்னோர்களும் புத்த சமயத்தினராகவே இருந்தார்கள். மணிமேகலை, சிலப்பதிகாரம் என்ற ஆதித் தமிழ் நூல்களும் இதற்கு ஆதாரமே. நமது கோபுரச்சிற்பங்களிலும் (விசேஷமாகச் சாலை கோபுறச் சிற்ப ஒழுங்கிலே) புத்தசமய மடம் ஜெபசாலை இவற்றின் சிற்பப் போங்குகளைப்பார்க்கலாம். இதுநிற்க.

சீனாவின் பாடம் இதுவே. சீனர் கட்டாயக் கல்வி, விவசாய விர்த்தி, வியாபார தேர்ச்சி, கைத்தொழில் அபிவிர்த்தி இக்காரியங்களில் பெரும் பிரயாசம் எடுத்து தங்கள் கிராமங்கள் சீரடைந்து முன்னேற்றத்திற்கு வரவேண்டிய முயற்சி செய்கிறார்கள். சீன மக்கள் தற்கால சாஸ்திர முறையின்படி முன்னேறியிருக்கிற அமெரிக்காமுதலிய தேசங்கள் சென்று மேல்நாட்டார்போல் யந்திர வேலைகள், ஆகாய விமானக் கப்பல்கள் ஓட்டுவது, புகைவண்டி யந்திர வித்தைகள் முதலியன கற்று தங்கள் தேசம் திரும்பி சீனரும் இவற்றில் முன்னேறும்படி செய்கிறார்கள். தேசத்தில் நன்றாகவும் விசாலமாகவும் புதுப்புது ரஸ்தாக்கள் போடுகிறார்கள். இரண்டு புதுவித இயக்கங்களிருக்கின்றன. 1. சீனதேச பொருள் விர்த்தி செய்து அந்நிய நாட்டுச் சமான்களையல்ல சீனதேசப் பொருள்களையே ஜனங்கள் வாங்கும்படி செய்யும் சங்கம்.

அதாவது சீனசுதேசி சங்கம். 2. இளைஞருக்கு சுயகண்டனம் படித்துக் கொடுக்கும் புத்தாவிச் சங்கம்.

இந்தியாவிற்கும் சீனுவிற்கும் வித்தியாசம் என்னவென்றால், சீனதேசம் சுதந்தரமுடையதாதலால் பொதுவாகச் சொன்னுல் அந்நியரின் இடையூறு இக்கட்டு நிர்ப்பந்தமில்லாமல் தன் தேச முன்னேற்றத்தைத் தானே பார்த்துக்கொள்ளுகிறது. நாமோ அந்நிய அரசாட்சிக்குள் மாட்டிக்கொண்டு திகைக்கிறேம். தேசம் வாழ சுதந்திர சுயாதீனம் வெகு அவசியம்.

மேலும் தாங்கள் எம்மதத்தினராயினும் சமயப் பெயரால் போராடாமலிருந்து யாதொரு ஜாதி பேதம் பாராட்டாமல் ஒற்றுமையாய்த் தேசமுன்னேற்றத்திற்காக சீனர் தொண்டு செய்கிறுர்கள். நாமோ ஜாதி சமயப்பேதங்கள் பாராட்டி நம்மைப் பிரித்துத் தேசம் சுதந்திரமடைந்து வாழாதபடி இடையூறு செய்கிறேம். என் நேசரும் சொந்தமுமானவர்களே! இப்படிச் செய்யவேண்டாம்.

எப்பிரல்மீ 29-ம்வ காலே ஷாங்காய் விட்டு ஜப்பான் தேசக் கப்பலேறிப் புறப்பட்டேன். வடகிழக்காய் ஓடி மறுநாள் மதியம் கப்பல் ஜப்பான்தேச முதல் துறைமுகம் நாகஸாகி சேர்ந்தது. கரைபோய் ஊரைச்சுற்றிப் பார்த்துக் கப்பல் திரும்பினேன். திரும்பிப் புறப்பட்டோம். ஜப்பான்தேச வடபாகமாகிய பெரும் பாகத்திற்கும் தென் தீவுகளுக்கும் இடையில் உள்நாட்டுக்கடல் என்றழைக்கப்படும் பெரும் ஏரி

போன்ற அழகிய கடலிருக்கிறது. இதில் சிற்சில தீவுகளு முண்டு. இக் கடல் மார்க்கமாய் மே மாதம் முதல் தேதி செவ்வாய் கப்பல் சென்றுகொண்டிருந்தது. ஜப்பான்தேச முழுவதுமே ஒரு பெரிய தீவுதான். மதியத்திற்குமேல் மூன்று மணிபோல் கோபே நகரம் சேர்ந்தோம். இங்கு நானிறங்கி நேரே வாலிப கிறிஸ்தவ சங்க விடுதி போய்த் தங்கினேன். இரவு இச்சங்கக் காரியதரிசி ஒக்கியுமூரா என்ற ஜப்பானிய நண்பர் ஊர் காட்ட என்னை அழைத்துக்கொண்டு போனார். மோட்டிமாட்சி என்ற பெரும் வீதியில் ஏராளமான ஜனங்கள் உலாவிக் கொண்டிருந்தார்கள். மின்சார வெளிச் சங்கள் தக தகவென்று வீதிகளில் பிரகாசித்தன. பலசாக்கு வியாபார பெரும் கடைவீதி.

மறுநாள் திரு. சகாய் என்ற ஒரு இந்திய வியாபாரி எனக்கு மிகச் சகாயராயிருந்தார். நற்சுபாவமுள்ள கனவான். என்னைப்போல் ஊர் பார்க்க வந்திருந்த வேறு இரண்டு இந்திய கனவான்களையும் என்னையும் இவர் மிக உபசாரத்துடன் ஏற்றுக்கொண்டு விருந்தளித்து, சில முக்கிய கைத்தொழில் சாலைகளுக்கு அழைத்துக்கொண்டு போனார். முதல் நெருப்புக் குச்சிகள், பெட்டிகள் செய்யும் சாலையைப் பார்த்தோம். அநேக பெண்களும் ஆண்களும் இங்கு வேலை செய்து கொண்டிருந்தார்கள். எல்லாம் யந்திரங்களால்தான். ஒரு நிமிஷம்கூட நிற்காமல் வெகு தீவிரமாக யந்திரங்கள் மூலமாய் ஆயிரக்கணக்கான நெருப்புப் பெட்டிகள் செய்துகொண்டிருந் தார்கள். இரண்டு பெண்கள் யந்திர மூலமாய் ஒரே நாளில்

20000 நெருப்புப் பெட்டிகள் செய்துவிடுவார்களாம். இப் பெட்டிகளின் மேல் சீட்டுகள் ஒட்டுவது வேறு யந்திரம். நெருப்புக் குச்சிகளை மாத்துண்டுகளிலிருந்து யந்திரங்களாலேயே சிறுசிறு குச்சிகளாய் கத்தரிப் பதையும் பார்த்தோம். இக்குச்சிகளை தட்டுகளிலடுக்கி, எரியும் தன்மையுள்ள சில ரசாயன வஸ்துக்களில் இவற்றின் நுனி களை முக்கி எடுப்பதெல்லாம் யந்திர மூலமே. பின்பு இரும்பு வேலைகள் செய்யும் யந்திரசாலை பார்க்கப் போனோம். கேணிகளிலிருந்து கொண்டு வரப்பட்ட சுத்தமில்லாத இரும்பு லோக வஸ்துக்களை வெகு பலமான எரிபந்தமுள்ள அக்கினிச் சுவாலை அடுப்புக்களில் மெதுவாக உருகச்செய்து தண்ணீர் போல் வார்த்து பலவிதப் பாளங்களாகச் செய்கிறார்கள். தகடுகள், தண்டவாளங்கள், இரும்பு உத்தரங்கள், கம்பிகள் முதலியன இவ்விரும்பினால் செய்யப்படுகின்றன. ஜப்பான் தேச யுத்தக் கப்பல்களுக்கும், வியாபாரக் கப்பல்களுக்கும், பலவித இரும்புத்தொட்டி முதலியனவற்றிற்கும் வேண்டிய இரும்புத் தகடுகள் மற்றும் சாமான்களெல்லாம் இங்குதான் செய்யப்படுகின்றன. பிரமாண்டமான யந்திரங்கள் இங்கு உப யோகிக்கப்படுகின்றன. ஜப்பான் தேசத்தார் மேல்நாடுகளின் யந்திர வேலைகளை தாங்கள் அப்படியே வெறுமனே பார்த்து அதேபடி மாத்திரம் செய்கிறவர்களாய் மாத்திரமிருக்கவில்லை. அதற்குமேல் சாமர்த்தியம் காட்டி யந்திர வேலையில் பின்னும் முன்னேறப் பார்க்கிறார்கள். தாங்கள் அதை உணராவிட்டா லும் இதர நாட்டுத் தொழிலாட்களுடன் இப்படி போட்டி செய்து ஜப்பானிய யந்திரத் தொழிலாட்கள் தாங்களும் அவர்

களைப் பார்க்கிலும் துரிதமாய் யந்திரமத்தியில் வேலைசெய்வதை நான் பார்த்தபோது இவர்களும் மனுஷீகமுறை யிழந்து யந்திரங்கள் போலவே ஆகிவிடுவார்களோ வென்ற எண்ணங்கள் என் மனதில் எழும்பின. ஆனாலும் இந்திய மக்களாகிய நாமோ இதற்கு முற்றிலும் மாருக கைத்தொழில் யந்திர வேலைகளில் மிகப் பின்வாங்கி நிற்கிறோம். நம் சொந்த நாட்டில் விளையும் பஞ்சு, கடலைக்காய் முதலியனவற்றைக்கூட அவசியமான பொருட்களாய் (யந்திர வேலையால் மாற்ற) தூரத்திலுள்ள அந்நிய நாடுகளுக்கு அனுப்பி நமது பிழைப்பைக் கெடுத்துக்கொள்ளுகிறோம். நம்முடைய பாடுகளால் விளைந்த இந்த இரண்டு விவசாயப் பொருட்களும் உடுத்தத் துணியாகவும், சவுக்காரம், நில எரு, மோட்டார் எண்ணெய் முதலியனவாகவும் நம்முடைய நாட்டிற்குத் திரும்பிக் கொண்டுவரப்பட்டு நமக்கே விலையாகின்றன. நாமே இக்கைத்தொழில்களில் பழகிவிடுவோமானல் எவ்வளவு ஏழை ஜனங்களுக்குப் பிழைப்பிற்கிடமாகும். ஜப்பான் தன் ஜனங்களுக்குப் பிழைப்புண்டாக்க எவ்வளவு பிரயாசம் எடுக்கிறது! கொஞ்சங்குறைய 50 வருஷங்களுக்கு முன்னமே நம்மைப்போலவே கீழ்நாட்டாராகிய ஜப்பான் தேசத்தாரும் நம் ஸ்திதியில்தான் யந்திர முதலிய கைத்தொழில்கள் அறியாது பின் தங்கியிருந்தார்கள். ஆனல் அவர்கள் கண் திறக்கப்பட்டு சீக்கிரம் எவ்வளவு அதிகமாக நமக்கு முன் சென்றுவிட்டார்கள். நம்மால் இதெல்லாம் எப்படி முடியுமென்று கைவிரித்து நம்பிக்கை விடவில்லை. அவர்களுக்கு கூடியது நமக்கும் கூடும். உற்சாகமும்,

நம்மேலேயே நல் நம்பிக்கையும்தான் வேண்டும். "தன் கை தனக்குத் துணை".

ஜப்பானில் சர்க்காரும் ஜனங்களைச் சொந்த பிள்ளைகளாகப் பாவித்து இப்படிப்பட்ட எல்லா விஷயங்களிலும் பொதுஜன நன்மையைப் பிரதானமாகக் கருதுகிறார்கள்.

இரவு கோபே நகரம் விட்டுப் புகைவண்டி மார்க்கம் சற்று கிழக்கேயிருக்கும் ஒஸாக்கா நகரம் சேர்ந்தேன்: துறைமுகமான இதுவும் ஒரு பெரும் நகரம். சிநேக சுபாவமுள்ள ஒரு ஜப்பானிய வாலிபன் என்னை அழைத்துக்கொண்டுபோய் நகரத்தைச் சுற்றிக் காட்டினான்.

மறுநாள் ஒஸாக்காவின் வடக்கிலிருக்கும் கியட்டோ நகரம் போனேன். வாலிபசங்க காரியதரிசி சுக்கோனி என்ற ஜப்பானிய நண்பர் எனக்கு ஊர் காட்டினார். பூர்வகாலத்தில் கியட்டோதான் ஜப்பானிய சக்ரவர்த்தியின் பிரதம ராஜஸ்தானம். அக்காலத்தில் சக்கரவர்த்தியின்கீழ் அவருக்கு கப்பம் கட்டும் ஜமீன்தார்கள் போன்ற பல பிரபுக்கள் இருந்தார்கள். இவர்களுக்கு ஷோகன் மார் என்று பெயர். ஷோகன்களின் கைக்குள் யுத்தாபிமானமுள்ள வீரியரான பல சேனைத் தலைவர்களிருந்தார்கள். இவர்களுக்கு ஷாமுராய் என்று பெயர். சக்கிரவர்த்தி பேர் சொல்லி இந்த ஷாமுராய்கள் ஒருவரோடு ஒருவர் போராடிச் சண்டைசெய்து நாட்டைப் பாழாக்கிக் கொண்டிருந்தார்கள். தற்காலத்தில் இதெல்லாம் ஒழிந்து ஒரே ஏகாதிபதியாகிய ஜப்பானிய சக்கிரவர்த்தியின் அதிகாரத்தி

னுள் பொதுஜன சட்டசபை, மந்திரிகள் முதலிய அதிபதிகள் அரசியல் நடத்திவருகிறார்கள். ஜப்பான் தேசத்தினருக்கு தங்கள் தேசத்தின்மேல் மிக அபிமானமுண்டு. தங்கள் தேசமென்றால் அதின் நன்மை, சுதந்திரத்திற்காக இத்தீவில் இருக்கும் 600 லக்ஷம் ஜப்பானியரும் ஏகமாய்நின்று உயிரைப் பெரிதென்றெண்ணாமல் தங்களைத் தியாகம்செய்ய ஆயத்தமா யிருப்பார்கள்.

இந்த கியட்டோ நகரம் கி. பி. 794 முதல் 1868 மட்டும் ராஜஸ்தானமாயிருந்தது. தற்காலம் தொக்கியோ நகரம்தான் ராஜஸ்தானம். எனினும் சக்கிரவர்த்தியின் மகுடாபிஷேகம் இந்நாளிலும்கூட கியட்டோவில்தான். ஜனத்தொகை 75,000. ஜப்பானியப் பண்டைக் கலைவித்தையின் சிறப்பை இங்கு காணலாம். சித்திர வேலைகளும், சிற்பமகிமை பொருந்திய ஆலயங்களும், பூங்காவனத் தோட்டங்களும், தடாகங்களும், குன்றுகளும் கண்ணாரும் காட்சி. மிக அழகாய் சித்திர வேலைகள் வரைந்துசெய்யப்பட்ட லாக்குவர் தாம்பாளங்கள், மேஜைகள், பெட்டிகள் முதலியன விற்கும் ஒரு கைத்தொழில் சாலையும் சுற்றிப் பார்த்தேன். இந்த லாக்குவர் ஒருவித மரத்திலுண்டாகும் மெழுகுபோன்ற வஸ்து.

ஹொங்கான்ஜி என்ற பெயருள்ள ஒரு புத்த ஆலயம் பார்த்தேன். பொதுச்சிற்ப ஒழுங்குகளை மாத்திரம் கவனித்தால் ஜப்பானின் புத்த ஆலயங்களுக்கும் நமது நாட்டு இந்து ஆலயங்களுக்கும் சில ஒற்றுமையுண்டு. முகத்துவாரமண்டபம், பிராகாரம், அதில் தோட்டம், மூலஸ்தானம் இப்படி நம் தேச

ஆலயப்பாகங்கள் போலவே பொது ஒழுங்குகளிருக்கின்றன. ஆனல் இவ்வாலயங்களில் மரவேலைகள் தானதிகம். கம்பங்கள், உத்திரங்கள், போதிகைகள் முதலியன மரச்சாமான்களே. கூரையும் ஒடு. கூரை ஓரங்கள் சீனவிற்போல் சுருண்டுமேலே பார்க்கத் திருப்பியிருக்கும். இந்த ஆலய மரத்தூண்கள், போதிகைகள் முதலியன மிகச் சித்திரத்தொழில் பொருந்திய வன. தூண்கள் பிரமாண்டமானவைகள். இக்கோவில் கட்டிய சிற்பிகள் வெகு பளுவான இக்கம்பங்களைத் தூக்கி நிறுத்த சாதாரண வடங்கள் போதாது, மனுஷர்களின் ரோமத்தால் திரிக்கப்பட்ட மனுஷ ரோம வடம்தானவசியம் என்று கேட்டார்களாம். ஜப்பானியப் பெண்மணிகள் தங்கள் தலைமயிரை நீளமாய் வளர்த்து, அழகாய் கொண்டை போட்டுக் கொள்வார்கள். தங்கள் கூந்தலே அவர்கள் பெருமை. எனினும் சிற்பிகள் இப்படிக் கேட்கவே மார்க்காபிமானமுள்ள இம் மாதுக்கள் தங்களுக்கு மகிமையான கூந்தலையும் பெரிதென் றெண்ணமலும், தங்கள் சரீர அழகுகுன்றி விகாரமாகிவிடு மென்றுகூட கிஞ்சித்தும் யோசியாமலும் கூந்தல்களைசந்தோஷ மாகக் கத்தரித்து ஆலயவேலைக்குக் கொடுத்துவிட்டார்கள்! இந்தப் பெண்மணிகளின் கூந்தல்களால் செய்யப்பட்ட மயிர் வடங்கள் கண்ணடி மூடிகளுள்ள பெரும் பெட்டிகளில் ஆலயத் தின் ஒருபாகத்தில் வைக்கப்பட்டிருந்ததைப் பார்த்தேன். இவர் களின் அபிமானத்தைப் பார்த்தீர்களா? நமது தமிழ் நாட்டுப் பெண்மணிகள் முன் காலங்களில் காட்டிய வீரச் செயல்களைச் சரித்திரத்தில் வாசித்திருக்கிறேன். (உ-ம்) தமிழ் நாட்டில் திருநெல்வேலி ஜில்லா பாஞ்சாலக் குரிச்சிப் பெண்மணிகளின்

வீரியம் சரித்திரம் படித்தால் தெரியும். தமிழ் மாதுக்களே! ஜப்பானின் மகிமை ஜப்பானின் பெண்மணிகளின் தியாக சிந்தையாலே யல்லவா? பெண்களே! இவ்விதம் நீங்களும் வீரியம்காட்டும்போது ஆண்கள் பின் தாங்குவார்களோ? தாயின் வீரியம் பிள்ளைக்கு வாராமல் போகுமோ? மனைவியின் தைரியத் தியாக சிந்தை கணவனையும் தள்ளி ஏவித்தூண்டுமல்லவா?. சகோதரியின் முன் மாதிரியை உடன் பிறந்தவன் பின்பற்ருதிருப்பானே? தேச வாழ்விற்காக வீரியத் தியாக சிந்தையை அணியுங்கள்.

ஆலயத்தின் ஒரு பாகத்தில் ஒரு புத்த சமய பூசாரி ஓம நெருப்பு வளர்த்துப் பூசை செய்துகொண்டிருந்தார்.

ஹொங்காஞ்சி ஆலயத்தோப்பில் "சேரி" புஷ்பங்கள் நிரம் பப்பூத்த அநேக மரங்களிருக்கின்றன. நமக்கு தாமரை மலர் எவ்வளவு அருமையோ அவ்வளவு அருமை பெருமையுடன் ஜப்பான் தேசத்தார் இப்புஷ்பங்களை பாராட்டுகிருர்கள். கொய்யா போல் மரங்களிருந்தாலும் பூக்கள் சிறு ரோஜா புஷ்பம் அளவு மரம் நிறையவிருக்கும். பூங்காவன மத்தியில் ஒரு நல்ல தடாகமிருக்கிறது. இதில் அநேக மீன்கள் துள்ளி விளையாடுங் காட்சி பார்க்க மிக்க களிப்பாய் இருந்தது. ஏதாவது ஆகாராதிகளைத் தண்ணீரில் வீசினல் இம்மீன்கள் ஒன்றின்மேலொன்ருக பல துள்ளிக் குதித்து ஆகாராதிகளைத் திறந்த தம் வாய்களினல் கவ்வித் தின்பதை நோக்குவது வெகு இன்பமான காட்சி. தமிழ் நாட்டில் திருநெல்வேலி ஜில்லா பாபநாசம் பேருவி சமீபத்திலோடும்



தொக்கியோ நகரத்தில் (ஜப்பான்) ஒரு உயர்தர பாடசாலை
மாணவர் காலை தேகாப்பியாசம் செய்வது.



ஜப்பானில் காமக்குரா ஊரில் 45 அடி
உயரமான ஒரு பெரிய புத்த விக்கிரகம்.



ஜப்பான் தேசத்தில் நிக்கோ என்ற க்ஷேத்திர ஸ்தலத்திலுள்ள புத்த ஆலயம் — சித்திரமாண்புள்ள பெரும் வாசல். (விவரம் 66-ம் பக்கம் பார்க்கவும்.)



மேற்படி நிக்கோ புத்த ஆலயத்தில் மூன்று குரங்குகளின் சித்திரம். (66-ம் பக்கம் பார்க்கவும்.)

தாம்பிரபருணி நதியிலும் இவ்வாறு கூடும் மீன் பட்டாளங்களைப் பார்த்திருக்கும் காட்சி என் மனதிற்கு வந்தது. பண்டைய காலங்களில் இந்த ஹொங்காஞ்சி ஆலயத் தடாக ஓரத்தில் ஜப்பானிய கவிராயர்கள் வீற்றிருந்து தாங்களியற்றிய கவிகளுள்ள ஏடுகளைத் தண்ணீரில் மிதக்க விடுவார்களாம். மதுரைச் சங்க கவிராயர்களும் பண்டைய காலத்தில் தடாகத்தில் தோணியிலிருந்துக்கொண்டு தங்களிடத்தில் கொண்டு வரப்பட்ட திருக்குறளை பரீட்சித்தது நமது ஞாபகத்திற்கு வரலாம்.

நான் இக்கோயிலைப் பார்த்துக் கொண்டிருந்தபோது பல ஜப்பானிய பள்ளிக்கூடங்களில் படிக்கும் பாலியர் தங்கள் உபாத்திமாருடன் கோயில் பார்க்க வந்தார்கள். வெறும் ஏட்டுப்படிப்பு மாத்திரம் ஜப்பானில் கற்றுக்கொடுக்கிறதில்லை. சிறியோரென்றாலும் வாலிபப் பிராய மடைந்தவர்களென்றாலும் எல்லா மாணவர்களும் தங்கள் உபாத்திமாருடன் ஜப்பானின் பற்பல விசேஷித்த ஆலயங்கள், கலைநிலயங்கள் முதலிய இடங்களுக்குப் பிரயாணம் செய்து செயற்கையாகப் படிக்கிறார்கள். தங்கள் தேச முன்னோர்களின் அருமை பெருமை, சிற்ப வேலைகள் முதலிய அரும் பெருங் காரியங்கள் இவைகளையெல்லாம் கண்ணாலே பார்த்துப் படிக்க கல்வி அதிகாரிகள் சர்க்கார் செலவிலே இந்த ஒழுங்குகள் செய்திருக்கிறார்கள். மாணவர்கள்கூடப் போகிற உபாத்திமார் இக்கட்டடங்களின் ஆரம்பம், பூர்வீக ஜப்பானிய சரித்திரம் முதலியனவற்றை போகிற இடங்களில் மாணவர்களுக்குத் தெளிவாக விவரிக்

கிறார்கள். ஜப்பானில் கீழ்தரப் பள்ளிக்கூடங்களிலிருந்து உயர் கல்லூரிகள்வரை வைத்தியம் சிற்ப யந்திர சாஸ்திரங்கள் எவையானாலும் தாய்ப் பாஷையாகிய ஜப்பான் பாஷையிலேயே கற்றுக் கொடுக்கிறார்கள். எல்லா இளைஞரும் 6 வயது முதல் 14 வயது மட்டும் ஆண்களானாலும் பெண்களானாலும் கட்டாயம் பள்ளிக்கூடம் போய்ப் படிக்க வேண்டும். அதன் பின் பணமில்லாதவர்கள் வேலை பார்த்துக்கொண்டு இராப் பள்ளிக்கூடங்களில் உயர் கல்வி படித்து முன்னுக்கு வரலாம். கட்டாயப் படிப்பு மாத்திரமல்ல. பள்ளிக்கூடங்களில் சம்பளம் கிடையாது. பிள்ளைகள் சும்மா படிக்கிறார்கள். ஜாதி பேதம் இல்லாமல் பிள்ளைகளெல்லாம் ஒன்றாகப் படிக்கிறார்கள். இதனால் எல்லா ஜப்பானியரும் கல்வியில் முன்னுக்கு வந்து மேல் நாடுகளைவிட ஜப்பான் கல்வியில் சிறந்து விட்டது. இராப் பள்ளிக்கூடங்களில் பகலில் தங்கள் பிழைப்பிற்காக வேலை செய்யும் அநேக வாலிபர் படிக்கிறார்கள். இப்படி 300 வாலிபர் கூடிய ஒரு கூட்டத்தில் திருப்பத்தூர் கிறிஸ்துகுல ஆசிரமத்தைப் பற்றிப் என்னைப் பேசச் சொன்னார்கள். நான் சொன்னவைகளை ஆங்கிலமறிந்த ஒரு ஜப்பானிய உபாத்தியாயர் அவர்கள் பாஷையில் மொழி பெயர்த்தார். கூடியிருந்த வாலிபர்கள் வெகு கவனமாய் நான் பேசினதிற்கு செவி கொடுத்து மிக உபசாரத்துடன் வழிவிட்டு அனுப்பினார்கள்.

கியட்டோ நகரிலுள்ள ஒரு கியோன் என்னும் பெயர் உள்ள ஷீன்டோ ஆலயமும் பார்த்தேன். ஷீன்டோ என்னும் பெரியார் பூர்வீக காலத்து ஜப்பானிய ஞானி. இவர் பெயர்

தரித்திருக்கும் கோவில்கள் அநேகமாக காலஞ்சென்றுபோன பெரியோரான முன்னோர்கள் ஆவிகளுக்கு வணக்கஞ் செய்யுமிடம். புத்த கோயில்களுக்கும் இக் கோயில்களுக்கும் வித்தியாசமுண்டு. மூலஸ்தானத்தில் விக்கிரகங்கள் ஒன்றும் கிடையாது. வெறும் பீடம்தான். இதற்கு எதிரே ஜப்பானியர் எம்மதத்தினராலும் தலை குனிந்து வணக்கம் செய்கிறார்கள். எல்லா மாணவரும் இக்கோயில்களில் இப்படி முன்னோர் ஆவி முன் வணக்கம் செய்ய வேண்டுமென்று சர்க்கார் கட்டளையாம். கிறிஸ்தவ மாணவர்கள் இப்படிச் செய்வது சரியாகுமா வென்று சில கிறிஸ்தவ நண்பர்களைக் கேட்டபோது இக்கோயில்கள் எவ்வித மார்க்க சம்பந்தமுமுள்ளவையல்ல, இங்கு தலை குனிவது எங்கள் முன்னோர்களாகிய பெரியோருக்கு நாங்கள் காட்டும் மரியாதை அடையாளமட்டுமாகுமென்று பதில் சொன்னார்கள். இக்கோயில்கள் முக்கியமாக ஜப்பானை ஆண்ட மன்னர்கள் ஞாபக மண்டபங்களே. காலஞ்சென்ற மூதோர்களின் ஆவிகள் தங்களோடு உயிருள்ளோர் போலவே எப்போதும் இருக்கின்றன என்பது ஜப்பானியர் நம்பிக்கை. தேசாபிமானத்தில் இது பலமாய் கலந்திருக்கிறது.

இங்கு ஒரு பூங்காவனத்தில் நான் போய்க் கொண்டிருக்கையில் என்னைக்கண்டதும் சில வாலிபர்கள் "காந்தி! காந்தி!!" என்று சத்தமிட்டார்கள். ஆம் நான் மகாத்துமா காந்தியவர்கள் தேசத்தான் தானென்று நான் பதில் கூறினதை சுக்கோனி நண்பர் அவர்களுக்கு மொழி பெயர்த்தார்.

ஜப்பானில் ஆலயங்களின் பிராகாரங்கள் வெகு சுத்தமாக வும் சுகாதார விஷயங்களுக்கு கவனம் செலுத்தி சுற்றுத் தோட்டங்களெல்லாம் எவரும் அசுத்தப் படுத்தாமல் பாது காக்கப்பட்டவைகளுமாயிருக்கின்றன. நமது தேச கோயில் களின் சுற்றுப் பாகங்களில் நாம் எவ்விதம் அசுத்தம் செய்து துர்ப்பிரயோகம் செய்துவிடுகிறோமென்பதை என் சுய ஜனத் தாரே நான் உங்களுக்கு ஞாபகப்படுத்தி விவரிக்க அவசியம் உண்டோ? நமது பொது நிலயங்கள் சுத்தமாயிருக்கப் பார்த்துக் கொள்ளுவோம். ஒரு தடவை அந்நிய தேசப் பெரியோரொருவரை நமது கோயிலொன்று காட்டக் கூட்டிக் கொண்டு போனபோது கோயில் பிராகாரத்திலிருந்த அசுத்தம் என்னை அவர் முன்பாக வெட்கச் செய்தது.

மே மாதம் 4-ம் தேதி காலை புகைவண்டி மார்க்கமாய் கியட்டோவுக்கு வடகிழக்காயிருக்கும் தொக்கியோ நகரம் சேர்ந்தேன். 1928-ம் வருஷம் திருப்பத்தூர் வந்து, ஆசிரமம் தங்கி, ஊரிலொரு உபந்நியாசமும் செய்த ஜப்பானிய மாது வாகிய யோஷீஹாரா அம்மாளும், நண்பர் காக்கிஹியும் புகை வண்டி ஸ்தானத்தில் என்னை வரவேற்றுக்கொண்டார்கள். தொக்கியோ நகரம்தான் நான் முன் சொன்னபடி இப்போது ஜப்பானின் ராஜஸ்தானமாகிய பிரதம நகரம். ஜனத்தொகை யில் இவ்வுலகில் இது அமெரிக்காவிலுள்ள நியூ யார்க்கு நகரத்திற்கு இரண்டாவதாகப் பெரிய நகரமென்று ஜப்பானியர் கூறுகிறார்கள். சில வருஷங்களுக்கு முன் பயங்கர பூமி அதிர்ச்சி வந்து இந் நகருக்கு மிக்க அழிவு வந்தது. ஆனல்

ஜப்பானிய தேசத்தினர் திரும்பவும் பூமி அதிர்ச்சியினால் சேதமடையாதபடி பலவித யூகங்கள் யோசனைகள் செய்து பல பெரிய கட்டடங்கள் முதலியன கட்டி நகரத்தை முன் இருந்ததற்கும் பெரியதாகவும் விசாலமுள்ளதாகவும் ஆக்கி விட்டார்கள். புகைவண்டிகள், மின்சார வண்டிகள், மோட்டார்கள் முதலிய தற்கால துரிதப் போக்குவரத்துக்கு அநுகூலமான பல சௌகர்யங்களுமுண்டு. இதனால் பல தனவான்கள் நகரத்தின் வெளிப் பாகங்களில் வீடுகள் கட்டிக்கொண்டு வசிக்கிறார்கள். நகரத்தின் மத்தியிலிருக்கும் வாலிப சங்க விடுதியில் நான் தங்கியிருந்தேன். நான் ஜப்பானிலிருந்த சமயத்தில் "பையன்கள் பண்டிகை" என்ற உற்சவம் கொண்டாடிக் கொண்டு இருந்தார்கள். ஜப்பானில் ஒரு வீட்டில் ஆண் பிள்ளை பிறந்தால் வீட்டின்மேல் கார்ப்பு என்ற மீன் போல் செய்யப்பட்ட மீன் கொடி பறக்க விடுவார்களாம். கார்ப்புவென்ற மீன் ஒரு நீர்வீழ்ச்சியிலிருந்து விழுந்து பலமாய் ஓடும் ஆற்றுத் தண்ணீருக்கும் எதிராக பலம் காட்டி நீந்துமாம். இதனால் இந்த கார்ப்பு மீன் பலத்திற்கும், தைரியத்திற்கும், விடாமுயற்சிக்கும் அடையாளமாக ஜப்பானியர் பாராட்டுகிறார்கள். துணியினால் மீன் உருவாகச் செய்திருந்த இவ்விதமான பல கொடிகள் பல பொதுசாலைகள் நிலையங்கள் மேலும், வீடுகள் மேலும் பறக்கிறதை நான் பார்த்தேன். பைபோல் மீன் உருவமாகத் தைக்கப்பட்ட இத்துணி மீன்களின் வாய்வழியாய் காற்று உட்பிரவேசிக்கவும் இவை விம்மிப்புடைத்து நன்றாகப் பறக்கின்றன. தமிழ் நாட்டில் பாண்டிய மன்னர்களின் கொடியும் மீன் கொடிதானல்லவா?

மே மாதம் 5-ம் தேதி காகவாப் பெரியாரைப் பார்க்கப் போயிருந்தேன். இவர் பல தேசங்களிலும் நன்கு மதிக்கப் பட்ட ஒரு ஜப்பானிய கிறிஸ்தவ பக்தர். ஜப்பானில் ஏழைக் கைத்தொழிலாளிகளின் முன்னேற்றத்திற்காக மிக பாடு பட்டுழைக்கிறவர். இத்தொழிலாளிகள் ஆண்களும் பெண் களும் நாள் முழுவதும் பிழைப்பிற்காக வேலை செய்யப் போயிருக்கும் சமயத்தில் அவர்கள் குழந்தைகளை சுத்தமாகக் கவனித்து ஆகாரம் கொடுத்து தொண்டு செய்யப் பல இடங் களில் நல்ல ஸ்தலங்களை நாட்டியிருக்கிறார். இப்படிப்பட்ட நிலயம் ஒன்றை நான் ஒஸாக்கா நகரத்திலிருந்தபோது பார்த்தேன். பாலியருக்கு இங்கு பாட்டுகளும் படிப்பும் கற்றுக் கொடுக்கிறார்கள். வேலையினிமித்தம் வீட்டில் விட்டுப் போக வேண்டியிருக்கிற பிள்ளைகளைப் பற்றியுள்ள கவலை கஷ்டம் தொழிலாளர்களுக்கில்லாமல் அவர்கள் தங்கள் பிழைப்பைத்தேட வசதி ஏற்படுகிறது. இப் பெரியார் ஜனங்களுக்குள் ஆத்மீக பக்திக்கேதுவான காரியங்களையும் செய்து வருகிறார். கடவுள் பக்தி விஷயமாகப் பல நூல்கள் எழுதியிருக்கிறார். "கடவுளின் ராஜ்ய இயக்கம்" என்ற பெரிய இயக்கத்தையும் ஸ்தாபனம் செய்திருக்கிறார்.

தொழிலாளிகள் ஏழைகள் உரிமைக்காக அஞ்சா நெஞ் சுடன் பாடுபடுகிறவர். இதினிமித்தம் சர்க்காரையும் எதிர்க்க நேரிட்டதால் ஒருதடவை சிறைச்சாலை புகுந்தார். தொக் கியோ நகரத்திற்கு வெளியே தாம் கடவுள் பணிசெய்யும் ஒரு ஆலய சமீபத்தில் தன் குடும்பத்தோடு வசிக்கிறார். பல

அந்நிய நாடுகளுக்கும் போய் உபந்நியாசம் செய்து திரும்பி யிருக்கிறார். ஒரு மணி நேரம்போல் அவருடன் பேசிக் கொண்டிருந்தேன். தாம் சீனாவிற்கருகிலிருக்கும் ஹாங்காங்கு தீவில் ஒரு கூட்டத்தில் செய்த உபந்நியாசத்தைப்பற்றி எனக்குச் சொன்னார். அத்தீவின் ஆங்கில கவர்னர், பல ஆங்கில உத்தியோகஸ்தர் இவர் உபந்நியாசம் கேட்க அக் கூட்டத்துக்கு வந்திருந்தார்களாம். இங்கிலாந்து தேசம் நமது இந்தியாவிற்கு சுதந்திரம் கொடுக்க வேண்டும் என்று இவர் பேசினதால் அங்கிருந்த ஆங்கில அதிபதிகளுக்கு இவர்மேல் கோபம் மூண்டு விட்டதாம். ஜப்பானின் புத்த சமயம் இந்தியாவிலிருந்துதான் ஜப்பானுக்குப் போனதால் மார்க்க விஷயத்தில் இந்தியா ஜப்பானுக்குத் தாய் நாடு என்று என்னிடம் சொன்னார். இந்தியாவில் காகாவாப் பெரியாரை நம்முடைய மகாத்துமா காந்தியவர்களுக்கு ஒப்பிடுவதுண்டு. இதை நானவரிடம் சொன்னபோது "நான் ஒரு தாழ்மையான பிரசங்கிமட்டும்தான்" என்றார்.

நமது நாட்டில் பிள்ளைகளை குடிசைகளில் விட்டுவிட்டு பிழைப்பிற்காக பகல் முழுவதும் வெளி வேலைக்குப் போய் விடும் ஏழைத் தொழிலாளிகளுக்காக நாமும் அவர்கள் குழந்தைகளை கவனித்துப் பார்த்துக்கொள்ள இவ்வித ஏற்பாடு செய்வது எவ்வளவு அவசியம். காகாவாப் பெரியார் தொழி லாளிகள் பிள்ளைகளுக்காக ஸ்தாபித்திருக்கிற நிலயங்கள் எல்லாம் பொது ஜனங்கள் பரோபகாரச் சிந்தையுடன் கொடுக்கும் பண உதவியால் நடந்து வருகிறது. இப்படிப்

பட்ட பாலியர் தானே பின் காலத்தில் நமது தேசப் பெரி யோராய் தேச நன்மைக்கான காரியங்களை நடத்தும் தலைவர் களாக வேண்டியவர்கள். இதினால் அவர்கள் இளம் பிராயத்தில் அவர்களை வெகுகவனத்தோடு பேணிப் பராமரித்து சரீர சுக பெலத்திலும் கல்வியிலும் ஆத்மீக ஞானத்திலும் வளர்க்கவேண்டிய ஒழுங்குகள் செய்ய வேண்டியது நம் மேல் விழுந்த பாரமல்லவா? தமிழ் மக்களே, ஏழைகளின் சிசுக்களைப் பராமரியுங்கள்!

மாணவர்கள் மகாநாடொன்றுக்கு என்னை அழைத்தார் கள். காங்கனை என்ற இடத்தில் இது கூடியது. அங்கு போயிருந்தேன். தேசாபிமானத்திற்கும் ஆத்மீக காரியங் களுக்கும் என்ன சம்பந்தம் என்னும் பொருள்பற்றி உபந் நியாசங்களும், கலந்து பேசிக்கொள்ளுதலும் நடந்தேறின. ஒரு மனுஷன் இவ்வுலகிலிருக்கையில் தன் சரீர காரியங்களையும் ஆத்மீக காரியங்களையும் வெவ்வேறாகப் பிரித்து இரண்டாக்கிக் கொள்ளமுடியாது, அதுபோலவே தன் தேசிய காரியங்களை யும் ஆத்மீக காரியங்களையும் ஒரு மனுஷன் ஜீவியத்தில் இரண் டாகப் பிரித்துவிட முடியாது என்பதுதான் இம்மகாநாட்டின் பொது அபிப்பிராயம். ஞாயிறு முற்பகலில் (6—5—1934) என்னைக் கேட்டுக் கொண்டபடியால் கிறிஸ்துகுல ஆசிரமத் தைப்பற்றி மாணவர் மகாநாட்டில் பேசினேன். ஆங்கிலம் அறிந்த ஒரு ஜப்பானிய நண்பர் அவர்கள் பாஷையில் மொழி பெயர்த்தார். மாணவர்கள் எனக்கு உற்சாகமாய்ச் செவி கொடுத்தார்கள். கூட்டங்களின்பின் சற்று சும்மாயிருக்கும்

வேளைகளில் மாணவர்கள் என்னைச் சூழ்ந்து பாஷை தெரியாக் கஷ்டத்தையும் பார்க்காமல் சிநேகம் பாராட்டி என்னோடு உலாவிக்கொண்டிருந்தார்கள். ஆனால் இவர்கள் ஒரு நிமிஷம் கூட வீணாய்க் கழியாமல் வெகு சுறுசுறுப்பாயிருந்தார்கள். தொக்கியோவில் நானிருந்தபோது அங்குள்ள பெரும் வைத்தியசாலைகள், வைத்திய சாஸ்திர நுட்ப ஆராய்ச்சி செய்யும் நிலையங்கள், கலாசாலைகள் முதலியன பார்க்கப் போனேன். வைத்திய ஆராய்ச்சி நிலயத்தில் இதில் வெகு பாண்டித்தியமுடையவரும் உலகில் பெயர்பெற்றவருமான ஷீகா சாஸ்திரி என்னை வரவேற்று, நடக்கும் வேலைகளை விவரித்துக் காட்டினார். குஷ்ட நோயுண்டாக்கும் கிருமியைக் குறித்து இவர் நுட்பமாய் ஆராய்ச்சிசெய்து வருகிறார். மூஞ்சுறுகளுக்குள் இக்கிறுமிகள் கலந்த ஒருவித கஷாயத்தை ஊசிகுற்றியேற்றி அவைகளுக்குள் குஷ்டவியாதி யுண்டான பின் அவைகளின் இரத்தத்திலிருந்து ஒரு மருந்துண்டாக்கு கிறார். இம்மருந்தை குஷ்டம் பிடித்த மூஞ்சுறுக்களின் மூன்றும் தலைமுறைப் பேரப்பிள்ளைகளுக்குள் ஊசியேற்றினால் அவைகளுக்குள்ளிருக்கும் குஷ்டக்கிறுமிகளெல்லாம் செத்துப் போகின்றன. இந்த ஆராய்ச்சி சித்திபெற்றால் நமது தேசத்தில் அநேகருக்கு உண்டாயிருக்கும் பயங்கர குஷ்டரோகம் பரவாது தடுக்க ஒரு நல்ல வழி உண்டாகலாம். இன்னொரு ஆராய்ச்சி சாலையில் வைசூரி (பெரிய அம்மை) தடுக்கும்படி நல்ல ஊசிமருந்து கண்டுபிடிக்க குரங்குகளை ஆராய்ச்சிக்கு உபயோகித்து பரீக்ஷை செய்து வருகிறார்கள். நான் முன் கூறியபடி சகல உயர் கல்வியும் ஜப்பானில் தாய் பாஷையாகிய

ஜப்பானியப் பாஷையில்தான். மற்ற நாட்டுப் பாஷையில் எது நன்மையாயிருக்குமோ அவற்றை தங்கள் தாய் பாஷையில் மொழி பெயர்த்துக் கொள்ளுகிறார்கள். வேண்டிய பதங்கள் இல்லாமலிருந்தால் அந்நிய பாஷையிலுள்ள அப் பதங்களை அப்படியே தங்கள் அக்ஷரத்தில் எழுதிக்கொள்ளுகிறார்கள். இதனால்தான் பொதுக்கல்வி விர்த்தியடைந்து ஜப்பான் இவ்வளவு முன்னேற்றமடைய எதுவுண்டாயிருக்கிறது. நம்முடைய தமிழ் மக்கள் முன்னேற்றமடையவும் தமிழ் நாட்டில் அரசியல் பாஷையும் உயர் கல்விப் பாஷையும் தமிழாகவேயாகிவிட நாம் விடா முயற்சி யெடுத்து இப்படியாகுமட்டும் ஓயக்கூடாது.

தற்கால சிறப்பிற்கு ஜப்பான் வருவதற்கு முக்கிய காரணராயிருந்து காலஞ்சென்ற மேஜிக்கிரவர்த்தியின் ஆவிக்கு வணக்கம் செலுத்தும் ஒரு ஷிண்டோ ஆலயமும் பார்த்தேன். மரணம் எல்லாவற்றையும் முடித்துப் போடாது. சரீரத்தைக் களைந்துவிட்டாலும் நமது ஆவி (ஆத்துமா) உயிருள்ளதாக ஆத்மீக ஸ்திதியில் தொடர்ச்சியாக ஜீவனோடேயே யிருக்கிற தென்பதை பல தேச சமயங்களும் போதிக்கின்றதல்லவா? பெரியோராகிய பக்தரின் ஆவிகள் வெகு தூரமான ஏதோ இதர உலகத்திலல்ல, நம்மைச் சுற்றியேயிருக்கின்றனவென்று சில பக்தரும் போதித்திருக்கிறார்கள். ஆனால் மரித்துப்போன பக்தர்களின் ஆவி நமக்குப் பயமுண்டாக்கித் தீமை செய்ய அல்ல, நம்மை உற்சாகப்படுத்தி நாமும் அவர்கள் நல்ல முன்மாதிரியைப் பின்பற்ற ஏவித்தூண்டவே இப்படி திரள்

சாட்சிகளாக நம்மைச் சூழ்ந்திருக்கின்றதென்று ஒரு பெரும் பக்தன் எழுதியிருக்கிறார்.

மே மாதம் 9-ம் தேதி அஸோ என்ற ஒரு ஜப்பானிய மாணவன் தொக்கியோவுக்கு சற்று தூரத்திலே கடலோரத்தி லிருக்கும் காமக்குராவென்ற தமது ஊருக்குக் கூட்டிக் கொண்டு போனார். இங்கு மலைகள் மத்தியில் பல புத்த ஆலயங்களிருக்கின்றன. மலைச் சோலைகள் நிரம்பிய இடம். சுற்றுக் காட்சி அரியது. நாங்கள் நின்றது ஒரு மலைமேல். சற்று தூரத்தில் காண்பது கடல் காட்சி. கோயில்கள் பார்க்க வந்த இளைஞர் உபாத்திமார் கூட்டங்கள் இங்குமங்கும் பார்க்க லாம். ஒரு கோயில் வெளியே 45 அடி உயரமுள்ள பிரமாண்ட மான புத்தசிலை உருவத்தின் உள்ளே படிகள் வைத்திருக்கிற படியால் அதினுள்ளும் பிரவேசித்துப் படியேறிப் பார்க்கலாம். மலைமேல் ஒரு பெரிய மணி வைக்கப்பட்டிருக்கிறது. அது பக்கத்திலிருக்கும் ஒரு மா உத்திரம் போன்ற தடியை இழுத் தால் மணி டமார் என்று முழங்குகிறது. இன்னொரு ஆலயத்தில் புத்த சந்நியாசிகள் மௌன தியானத்திலிருந்தார் கள். புத்த மார்க்கம் தியானத்தை மிகவும் பாராட்டுகிறது.

பொழுது சாயுமட்டும் பல இடங்களும் சுற்றிப் பார்த்த பின் அஸோ தமதுவீட்டிற்கு கடல்கரை வழியாய் அழைத்துக் கொண்டு போனார். வெண்மையான கடல் மணல் நிரம்பிய இந்த விசாலமான கடலோரத்தில் பலத்த காற்று வீசி மாரி போல் மணலை எங்கள் மேல் தூவிற்று. நண்பர் அஸோ வீடு, இயற்கைக் காட்சியழகு பொருந்திய சிறு குன்றின் சார்பி

விருந்தது. வீட்டைச் சுற்றி நல்ல பூந்தோட்டம். பூமி அதிர்ச்சியினுலுண்டாகக் கூடிய சேதத்தை உணர்ந்து ஜப்பானில் சாதாரணமாய் வீடுகள் மரச்சாமான்களினுல்தான் கட்டப்பட்டிருக்கின்றன. வெளிச் சுவர்கள் மரத்தினுலும், உள் சுவர்கள் மரச்சட்டங்களில் ஒட்டப்பட்ட திண்ணமான (சித்திரங்கள் வரைந்த) நல்ல காகிதங்களினுலுமே செய்யப் பட்டிருக்கின்றன. காகிதத்தின்மேல் மறதியாக ஒருவர் சாய்ந்துவிட்டால் பொத்திடும். பூமிக்குள்ளே ஆழமாகப் புதைத்து நிறுத்தப்பட்ட கம்பங்களின் மேல் மர வீடுகளை வேறு எதும் அஸ்திபாரமில்லாமல் கட்டுகிருர்கள். உள்ளேயும் மரத் தரைதான். அம்மரத் தரைமேல் சுத்தமானதும் பட்டுப் போல் மிருதுவானதுமான பாய் அறை முழுவதும் விரித் திருக்கும். வீடு முழுவதும் வெகு சுத்தமாயிருக்கும். வீட்டிற்குள் பிரவேசிக்கு முன் சப்பாத்துகளைக் களைந்துவிட வேண்டும். ஒருவித மெல்லிய பாதரக்ஷை தருவார்கள். அவற்றை பாதங்களில் மாட்டிக் கொண்டு உட் பிரவேசிக்க வீட்டுப் பெரியார் ஆண்களும் பெண்களும் தலை தரையில் பட மும்முறை குனிந்து பல உபசார வரவேற்பு மொழிகள் கூறி வந்த விருந்தாளியை ஏற்றுக்கொள்ள, அவரும் அவ்வாறு வணக்கம் காட்டி பதிலுபசார வந்தன மொழிகள் கூறுவார். இவ்விதமான உபசரணைகளுடனேதான் நண்பர் அஸோவின் தாயாரும் சகோதரியும் என்னை வரவேற்றுக்கொண்டார்கள். சிரம் குவித்து நமஸ்காரம் மட்டுமிட்டு வாழ்த்திக்கொள்ளும் தமிழ் மகனுகிய எனக்கு இவ்வித விமரிசைகளுடன் ஜப்பானிய ஆசாரங்களை அநுசரித்து நடந்துகொள்ள ஏற்பட்ட மனே

சலன குழப்பங்களை என் உடன் நாட்டாருக்கு விவரிக்க அவசியமில்லை. நீண்ட என் கால் கரங்களும், வளைந்து பணிய வழக்கமில்லாத சரீரமும் இப்பேர்ப்பட்ட நல்லுபசார முன் மாதிரியைக் கண்டு பின்பற்ற முயற்சி செய்தும் எத்துணை சித்தி எனக்குக் கைகூடியதோ யானறியேன்! ஜப்பான் தேசத்தினர் சாதாரணமாகக் குள்ளமானவர்கள். “எங்கள் இல்லத்திற்கு தாங்கள் எழுந்தருளியது எங்களுக்கு மிக ஆனந்தம். ஒரு இந்திய விருந்தாளி எங்கள் வீட்டிற்கு வந்தது இதுதான் முதற் தடவை” என்று இவ்வித பல நல்லுப சார வார்த்தைகள் சொல்லித் திரும்பத் திரும்பத் தரைமட்டும் பணிந்துகொண்டார்கள். சுத்தமானதும் மெதுவானதுமான பாய் பரவப்பட்டிருந்த தரையின்மேல் உட்கார ஆளுக்கொரு சிறிய பட்டுத்திண்டுகள் போட்டிருந்தன. வட்டமாக இதின் மேல் நாங்கள் முட்டிபோட்டு உட்கார்ந்தோம். தாழ்ந்த (குட்டையான) ஒரு சிறு வட்ட மேஜை எங்கள் நடுவில் வைக்கப்பட்டது. ஜப்பான் முறைப்படி சமைக்கப்பட்ட சோறு, கறி பதார்த்தங்களைக் கொண்டு வந்து பெண்மணிகள் இம்மேஜையின் மேல் வைத்தார்கள். சீனுவில் போலவே இரு குச்சிகளைப் பிடித்துக்கொண்டு ஆகாரப் பண்டங்களை குச்சி களில் கவ்விப் பொறுக்கி வாய்க்குச் சேர்க்க முயன்றேன். இந்த வித்தை சித்தி பெற பாத்திரங்களை வாய்க்கருகே ஏந்திக் கொள்வதற்கு யாதொரு ஆக்ஷேபனையுமில்லை. பின்பு பழங் கள், இனிய மிட்டாய்கள் பரிமாறினார்கள்.

நண்பர் அஸோவின் தகப்பனார் வியாபாரத் தொழிலில் அமைந்தவர். இவரும், அஸோவின் தாயாரும், சகோதரியும்

மிக வைராக்கியாபிமானமுள்ள புத்தசமயத்தினர். அவர்கள் மகன் அஸோ நண்பர் சிறிதுகாலத்திற்குமுன் கிறிஸ்தவ ஞனவர். இவ்வித சமயவித்தியாசம் பெற்ரூேருக்கும் அவர்கள் ஒரே புத்திரனுகிய அஸோவிற்குமிருந்தாலும் பெற்ரூேருக்கும் மகனுக்குமுள்ள அன்பு கிஞ்சித்தேனும் அளவு குன்றவில்லை. தாயும் மகனும் ஒருவரோடொருவர் அன்புபொங்கி நடந்துகொள்வதைப்பார்த்தது எனக்கு மிக ஆனந்தமாய் இருந்தது. மகன் புதிதாய் தானடைந்திருக்கும் கிறிஸ்து பக்தியில் இன்னும் நன்கு தேரவேண்டுமென்றே தன் பெற்ரூேர்கள் ஆசிப்பதாக அஸோ என்னிடம் சொன்ஞர். மகனும் தனது பழைய சமயமாகிய புத்தமார்க்கத்தைப் பற்றி நன்கு மதிப்புள்ளவராகவே யிருக்கிருர். சீனுவைப்பற்றி நானெழுதியிருக்கிறதில் உவாங் சாஸ்திரி தான் கிறிஸ்து சமயத்தைத் தழுவியிருந்தும் புத்தமார்க்க சந்நியாசிகளுடன் தியான நிஷ்டையில் சிலகாலம் செலவிட்டதைப்பற்றி முன்னமே குறிப்பிட்டிருக்கிறேன். புத்தராயிருந்து கிறிஸ்து சமயத்தைத் தழுவியிருக்கும் ஒயிக்காவா என்கிற இன்னெரு ஜப்பானிய நண்பரும் புத்தமார்க்க தியான நிஷ்டை அநுபவங்களினுல் தாம் கிறிஸ்தவஞனபின் மிக நன்மைபெற்றதாக எனக்குச் சொல்லியிருக்கிருர். நமது நாட்டில் சில கிறிஸ்து சமய பிரசங்கிகள் மூடத்தனமாய் இந்துமார்க்கத்தை பழித்திகழ்வதுபோல ஜப்பானில் கிறிஸ்து சமயத்தைத் தழுவிய புத்தர்கள் செய்கிறதில்லை. தங்கள் முன்ஞேர்களின் புத்த சமயத்தில் நன்மை உண்மையானதும் பக்திக்கனுகூலமானதுமான எவற்றையும் நன்கு மதித்து அநுசரிக்கிருர்கள்.

புத்த சமயத்தினரும் தங்கள் குடும்பத்திலொருவர் கிறிஸ்தவரானால் அவரைக் குடும்பத்தைவிட்டுத் தள்ளிவிடுகிற தில்லை. கிறிஸ்தவரான அவரும் தன் இனஜனத்துடனேயே கூடி சந்தோஷமாக வாழ்கிறார். இதினால் ஒரே வீட்டில் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த பல சமயத்தினர் இருக்கலாம். ஏனிப்படி இருக்கக்கூடாது? ஒருவன் தன் மனச்சாட்சியின்படி தெய்வபக்தியடைந்து கடவுளை வழிபடுவது என் குடும்பம் பிரிந்து தாய் பிள்ளை வித்தியாசம் சண்டை சச்சரவிற்குக் காரணமாயிருக்கவேண்டும்? ஐயோ நமது நாட்டில் சமய பேதத்தை அரசியல் முதலிய பொது விஷயங்களிலும் பாராட்டிப்போராடி தேசத்தைப் பாழாக்குகிறார்களே! கடவுள் நமக்கிரங்கி குறுகியதும் தன்னயம் பாராட்டுவதும் இடுக்க நெஞ்சமுள்ளதுமான இந்த அற்பப் புத்தியிலிருந்து நம்மை விடுவிப்பாராக! பாரசிந்தையும், ஒருவர் மனச்சாட்சியை ஒருவர் மதித்து அன்போடு ஒற்றுமைகாட்டி தேச முன்னேற்றத்திற்கு பாடுபட்டுழைக்கும் விசால மனதும் நமக்குண்டாக இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

மேமீ 10-ம் தேதி பெண்கள் படிக்கும் ஒரு உயர்தரப் பள்ளிக்கூடம் பார்க்கப் போயிருந்தேன். ஜப்பானில் எல்லாப் பெண்களுக்கும் ஆண்கள்போலவே 6 வயதிலிருந்து 14 வயதுமட்டுமாவது கட்டாயம் படிக்கவேண்டுமென்பது சர்க்கார் கட்டளை. இந்தப் பள்ளிக்கூடம் ஒரு ஜப்பானிய மாது ஸ்தாபித்தது. புத்தகக்கல்வியோடு தோட்ட வேலையும் கற்றுக்கொடுக்கிறார்கள். பெண்களுக்கு சில புத்திமதிசொல்ல

என்னைக் கேட்டுக்கொண்டதால் சில வார்த்தைகள் பேசினேன். மாணவிகள் என்னைச் சூழ்ந்துக்கொண்டு தங்கள் புஸ்தகங்களில் என் கையொப்பமிட வேண்டிக்கொண்டென்னை விடவில்லை. நான் புறப்படுகையில் வெளிப்பாதையில் நெடுக வரிசையாய் நின்றுக் கைகளைவீசிப் பயண உபசார மொழிகள்கூறி வழிவிட்டனுப்பினார்கள். பெண்கள் வைத்தியத்தொழில் கற்கும் கல்லூரியும் பார்த்தேன்.

11-ம் தேதி ஜப்பானியர் கூடிய ஒரு கூட்டத்தில் இந்தியாவைப்பற்றிய ஒரு உபந்நியாசம் செய்தேன். சில கேள்விகளுக்கு உத்தரமும் சொன்னேன். நமது தேசத்தில் மகாத்துமா காந்தியவர்களைக் குறித்து மதிப்பு இப்போது குறைந்துவிட்டதென்ற தந்திரமான பிரசாரம் அந்நிய நாட்டில் சிலர் செய்வதாக அவர்கள் கேள்விகளினால் எனக்குப் புலப்பட்டது. இது தவறென்று நான் விவரித்துக்காட்டினேன். நமது நாட்டிற்குப் பிரதிகூலமாக இவ்வாறுசெய்யப்படும் இந்த துர்ப்பிரசாரம் மிகவும் கண்டிக்கப்படத்தக்கது. நமது நாட்டின் நற்காரியங்களையல்ல நமது தீண்டாமை, ஜாதிசமயபேதம், கல்வியின்மை முதலிய குறைகளை பெருமடங்காகப் பாராட்டி நம்மை அநாகரீகமுள்ள ஜனங்களாகவும், சுயராஜ்ஜியத்திற்கு தகுதியில்லாதவர்களாகவும் வருணித்து புஸ்தகம், பத்திரிகைகள், உபந்நியாசங்கள் இவற்றின் மூலமாக நமது தேசத்தைக் குறித்து அந்நிய நாட்டில் குறைகூறி பிரசுரம் செய்கிற இவர்களால் நமது நாட்டின்பெயர் கீழாகி, நாம் அந்நியரால் இகழப்பட ஏதுவாயிற்று. அந்நிய நாடுகளில் நமது பெயர் கெடச்செய்யும் இவர்களைக் குறித்து எச்சரிக்கையாயிருப்போம்.



கலாசாலை உயர் கல்வி பெற்ற மூன்று ஜப்பானிய பெண்மணிகள். வலதுபக்கத்தில் கடைசியில் நிற்பவர்கள் திருப்பத்தூர் ஆசிரமம் வந்துபோன யோஷிஹாரா அம்மாள்.



சீனு, ஜப்பான், இந்தியாவின் பரஸ்பர ஐக்கியம். இடது பக்கம் சீன மாணவர், நடுவில் இந்தியன், வலது பக்கம் ஜப்பான் மாணவர் அஸோ. மூன்று கீழ் நாடுகளுக்கும் இது ஒரு ஐக்கிய அடையாளம்.

(விவரம் 59-ம் பக்கம் பார்க்கவும்.)



அமரிக்காவில் காலிபோர்னியா மாஹாணத்தின்
பெரும் ஆரஞ்சுப்பழத் தோட்டங்கள்.
(விவரம் 79-ம் பக்கம் பார்க்கவும்.)



அமரிக்காவில் குதிரைகள்வைத்து ஏர் ஓட்டி உழவு செய்தல்.

11-ம் தேதி இரவு ஜப்பானின் வடபாகங்களிலுள்ள சில நாட்டுப்புற இடங்களைப்பார்க்கப் புறப்பட்டேன். வட பாகத்தில் தொண்டுபுரியும் கன்னடா தேசத்தினரான ஒரு நண்பர் மிக உதவியாயிருந்தார். அதிகாலை கனிஸாவா என்ற ஊர்சேர்ந்து ஜப்பானிய விடுதியில் தங்கி சற்று களைப்பாறினேன். இங்கு லோகவஸ்துக்கள் கலந்த சுடுதண்ணீர் ஊற்றுயிருந்தது. அதில் ஸ்நானம்செய்வது தேகத்திற்கு ஆரோக்கியமானது. இதில் குளித்தேன். என் விரலில் இதுமட்டும் முற்றிலும் ஆறுமல் இன்னும் சற்று புண்ணாயிருந்த சிறிய நகச் சுற்றுப் புண் இதற்குப்பின் சீக்கிரம் காய்ந்து குணமாகிவிட்டதைக்கவனித்தேன். இப்பாகங்களில் அக்கினி மலைகளுண்டு. இதினால்தான் இப்படிப்பட்ட சுடுதண்ணீர் ஊற்றுகளும் சமீபத்திலிருக்கின்றன. ஈஞ, ஈடாவென்ற ஊர்களுக்கு என் நண்பர் என்னை அழைத்துக்கொண்டு போனார். திருப்பத்தூர் ஆசிரமத்தைக்குறித்துப்பேசக் கேட்டுக்கொண்டபடியால் சில ஜப்பான் கிறிஸ்தவ ஜனங்கள்கூடிய சில கூட்டங்களில் பேசினேன். பட்டுப்பூச்சிகள் வளர்த்து இப்பாகங்களில் பட்டு நூற்கும் தொழில் செய்கிறார்கள். ஒரு குடியானவர் வீட்டில் காகிதங்களில் பாவியொட்டப்பட்ட பட்டுப்பூச்சி முட்டைகளை வாங்கி அதற்கென்று ஆயத்தம் செய்யப்பட்ட அறைகளில் அம்முட்டைகளைப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். குஞ்சுகள் பொரித்தபின் அவற்றிற்கு (மல்பரி) முசுக்கட்டை இலைத்துளிர்கள் போட்டு வெகுகவனமாய் வளர்க்கிறார்கள். இப்பூச்சிகள் வளர்ந்து தாங்களே பட்டுநூல்செய்ய ஆரம்பித்து விடுகின்றன. நான் போயிருந்த சமயத்தில் இந்த பட்டு

நூல் தொழில் தாழ்வடைந்து தொழிலாளிகளுக்குக் கஷ்டம் ஏற்பட்டிருப்பதாகச் சொன்னார்கள்.

சற்று சம்பத்துள்ள ஒரு விவசாயி வீட்டிற்கும் போய்ப் பார்த்தேன். மாவரைக்கிற கல் திரிகை பிடிகட்டைக்கு ஒரு நீளக் கம்பைக்கட்டி அதைப் பிடித்துக்கொண்டு திரிகையைச் சுற்றுகிறார்கள். நானும் கைகொடுத்து இரண்டு மூன்று தடவைச் சுற்றிப்பார்த்தேன். ஸோயா அவரைவிதையி லிருந்து ஒருவித கறி ஆகாரவஸ்து செய்யும் செக்கையும் பார்த்தேன். இங்கு நானிருந்தபோது "ஜப்பானிய படுக்கைகளில்" இரவு தூங்கினேன். ஒரு மெத்தை தரையிலே, இன்னொன்று தேகத்தின்மேல் குளிருக்கு மூடிக்கொள்வது.

வடபாகத்திலிருந்த இந்த ஊர்கள் ஜப்பானில் நாட்டுப் புறம்தானாகிலும் வீடுவாசல் சம்பத்து, கல்வி நாகரீகம் இவற்றில் முன்னேற்றமடைந்திருந்தன.

தொக்கியோ நகரத்திற்கு சற்று வடகிழக்கேயிருக்கும் ஜப்பானிய க்ஷேத்திர ஸ்தலமாகிய நிக்கோவுக்கும் போயிருந்தேன். மலைச்சோலைகள் மத்தியில் பண்டைய ஆலயங்களிருக்கின்றன. ஆலய பெருவாசலொன்று வெகு சிங்காரமாக சித்திரவேலைகளமைந்ததாயிருந்தது. இன்னொரு ஆலயச் சுவர்மேல் மூன்று குரங்குகள் ரூபம். ஒரு குரங்கின் கைகள் வாயை மூடிக்கொண்டும், இன்னொன்று தன் கண்களை மூடிக்கொண்டும், மற்றொன்று கைகளால் தன் காதுகளை மூடிக்கொண்டுமிருந்தன. தீமையைப் பேசாதே, பார்க்காதே,

கேட்காதே என்பது இதன் கருத்து. நிக்கோவின் சிற்ருறு மேல் லாக்குவர் பூசிய பாலமொன்றுமிருக்கிறது.

ஒரு மலைமேல் அழகிய ஏரிக் காட்சி பார்த்துவிட்டு அதின் செங்குத்தான ஒரு பாகத்திலிருந்து நேரே கீழே ஓடி வரும் மின்சார வண்டியில் நான் கீழே வந்தபோது உடம்பு சிலிர்க்கத்தக்கதாகவிருந்தது.

தொக்கியோவில் பல கூட்டங்களில் நான் பேசும்படி கேட்கப்பட்டபடியால் எனக்கு வேலையும் போதுமானபடி யிருந்தது. ஜப்பானில் சில வருஷங்களுக்கு முன்னே பூமி யதிர்ச்சி உண்டாகி மிகச்சேதமுண்டாக்கிற்றென்று முன்னே சொல்லியிருக்கிறேன். ஜனங்கள் இதன் கோரத்தை நினைக் கும்படி யோககாமா என்ற இடத்தில் ஒரு பூகம்ப காட்சிசாலை வைத்திருக்கிருர்கள். அழிக்கப்பட்ட சாமான்கள், பின்வந்த நெருப்பினல் எரிந்துமெரியாமலும் கெட்டவைகள், உடைந்து தவிர்ந்த மின்சார வண்டிகள் முதலியன, அச்சமயத்தில் குடும்பங்களில் தாய் பிள்ளைகளுக்கு நேரிட்ட துயா ஆபத்துக் களை காட்டக்கூடிய ஞாபக சின்னங்கள் இப்படி பலபல காட்சிகள் இங்கு பார்க்கலாம்.

யோககாமாதான் தொக்கியோ நகரத்தருகாமையான ஜப் பான் தேசப் பெருந்துறைமுகம். இதிலிருந்துதான் நான் மே மாதம் 17-ம் தேதி ஒரு ஜப்பானிய கப்பலில் அமெரிக்கா தேசத்திற்குப் புறப்பட்டேன்.

ஆனால் இந்தப் பிரயாணத்தைக் குறித்துப் பேசுமுன் ஜப்பான் தேசம் நமக்குப் படித்துக்கொடுக்கிறவைகள் என்ன வென்று நாம் சற்று கவனிப்பது நலம்.

ஜப்பானில் அளவுக்குமிஞ்சி யந்திரத் தொழில் செய்கிறார்கள். நமது நாட்டிலும் தங்கள் சாமான்களை வெகு குறைந்த விலைக்கு ஜப்பானியர் விற்பதினால் நமது நாட்டுக் கைத் தொழிலும் இதனால் கெட நேரிட்டிருக்கிறதை அறிவோம். யுத்தாயுத கப்பல்களைத் திரட்டுவதிலும் (மேல் நாட்டார்) ஐரோப்பியர்போல் மும்முரமாக இருக்கிறார்கள். இது நன் கன்று. இவர்களுடைய யுத்தாயுதக் கப்பல் படைகள் இவர்களைப்போலவே இராணுவங்களை மிகுதியாய்த் திரட்டி வைத்திருக்கும் மேல்நாட்டார்களுக்கு பொறாமை யுண்டாக்கி அவர்கள் ஜப்பானியரைப் பகைத்துப் பயப்படச் செய்கிறது. ஜப்பானியர் நம்மைப்போலவே ஆசியா கண்டத்து கிழக்கு நாட்டார். பல வழக்கப்பழக்கங்களிலும் நமக்கு ஒப்பான வர்கள்தான். அவர்களும் தமிழ்மக்களாகிய நம்மைப்போல் சோறுதான் பிரதான ஆகாரமாகச் சாப்பிடுபவர்கள். ஏறக் குறைய 50 வருஷங்களுக்கு முன்னமே யந்திர கைத்தொழில்கள், தற்கால வைத்திய முதலிய சாஸ்திரக் கல்வி, புகை வண்டி, மின்சார வேலைகள், கப்பல்கள் முதலிய தற்கால நாகரீகத்தில் நமக்குப் பின்னே தானிருந்தார்கள். நமது நாட்டிலிருந்த சில அரசியல் குழப்பங்களும், பிரிவினைச் சண்டைகள் சச்சரவுகளும் அவர்களுக்குள்ளுமிருந்துதானிருந் தன. எனினும் அவர்கள் இவ்வாறு முன்னுக்கு இவ்வளவு சீக்கிரத்தில் வந்துவிட்டதெப்படி?

அவர்கள் நம்மைப்போல் அந்நிய தேசத்தினருக்கு அடிமையாகி தங்கள் சுதந்தரத்தை இழந்துவிடவில்லை. இது ஒரு பெரிய காரணம். ஆனால் நாம் இப்படி அந்நியருக்கு கீழானதின் காரணமென்ன? நம்மேல் குற்றமில்லையா? முந்தினகாலமெப்படியிருந்தாலும் ஜப்பானில் இப்போது தேசாபிமானமும் அதற்கென்ற தியாக சிந்தையும் ஒற்றுமையும் ஜனங்களுக்குள் பலமாயிருக்கிறது. ஜாதி வித்தியாசம், சமயப் பிரிவினைகள்செய்து அதின்பேரால் கலகம்செய்து போராடுவது கிடையாது. ஒருவர்மேல் ஒருவருக்கு நம்பிக்கை, மரியாதை, நல்லொழுக்கம், சுயகண்டனம், சுறுசுறுப்பு இவை ஜப்பானியரில் காணக்கூடிய நற்குணங்கள். தெருவில் கூச்சலிட்டு வாதாடும் சத்தம், சந்தைகடைகளில் பேரம் பண்ணிக் கூக்குரலிடுதல், வண்டிக்காரன் கொடைக்கூலி விஷயத்தில் வழக்கு விவகாரம் செய்தல் இப்படிப்பட்டவைகளை நான் ஜப்பானில் பார்க்கவில்லை. நமக்கு சுயகண்டனம் வேண்டும். இது நமக்கு உடனேவேண்டிய அவசரமான பெரும் தேவை. நம்மைக் கெடுக்கும் தீண்டாமைப் பேய் போகவேண்டும். நமக்குள் தீண்டாமை யிருக்கிறதென்று நான் முன்சொன்னபடி சில துர்ப்பிரசாரிகள் உலகெல்லாம் அறியும்படி பரவச்செய்து, நாம் சுய அரசாட்சிக்குத் தகுதி யுள்ளவர்களல்ல வென்று உலகத்தார் எண்ணச் செய்து விட்டார்கள். நமக்குள் கட்டாயக் கல்வி அவசியம் வேண்டும். ஜப்பானில் பகலில் இளைஞருக்குக் கட்டாயப் படிப்பிருப்பதுடன், அவர்கள் வாலிபமடைந்து வேலைசெய்யும்போதும் இராப் பள்ளிக்கூடங்கள்போய் கல்வியில் இன்னு

மதிகம் சேற முயல்கிருர்கள். நமக்கு பகலில் வேலேயிருந்தால் ஏன் இரவில் படிக்கக்கூடாது? காலத்தை எவ்விதத்திலும் வீண்போக்காமல் சுறுசுறுப்பாயிருக்கிருர்கள். கைவிரித்துக்கொண்டு, இதெல்லாம் இந்தப்பாழும் நாட்டில் எப்படி வரப்போகிறதென்று மற்றவர்களே மாத்திரம் குற்றம் சொல்லி, அவர்கள்மேல் பழிபோட்டுவிட்டுத், தங்கள்மேல் இனி ஒரு பொறுப்புமில்லே என்றிருப்பவர்கள் தேசத்துரோகிகள் என்றே நான் சொல்லுவேன். நாம் ஒவ்வொருவரும் மற்றவர்கள் தங்கள் கடமைகளேச் செய்தாலும் செய்யாமல் அசட்டையாயிருந்தாலும், நம்மேல் தனித்தனியே விழுந்த நமது நாட்டின் பொறுப்பை அறிந்துணர்ந்து, தேச ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் பாடுபட்டுழைக்கவேண்டும். பிள்ளே அபின் போதை மயக்கத்தினல் தூக்கம்பிடித்துக் கிடந்தால் அப்படியே விட்டுவிடுவோமா? இராவெல்லாம் விழித்து ஓயாத பிரயாசத்துடன் அதை மாண்டுபோகாதபடி எழுப்பித் தட்டி நடக்கவைத்து, உயிரடைந்து தன்புத்திக்கு வருமட்டும் அதை விடமாட்டோமே. என் ஜனமே, விழி, அல்லது இத் தூக்கம் மரணநித்திரையாய் முடிந்துவிடலாம். ஆனல் நமது தாயினினும் மிக்க அன்புள்ள தாயுமானவராகிய கடவுள் நம்மை கைவிடமாட்டார். நம்மை நம் சுதந்திரத்திற்கு கொண்டுவருவார். இதுவே என் நம்பிக்கை.

மே மாதம் 17-ம் தேதி மதியத்திற்குமேல் யோககாமாத் துறைமுகத்திலிருந்து நான் கப்பலேறிப் புறப்பட்டேன். இது ஜப்பான் தேசக் கப்பல். புறப்படுமுன் பல வருணக் காகித

நாடாக்கள்போன்ற நீண்ட காகிதங்களை, ஒரு முனை கரையி லிருப்போர் கைகளிலும், இன்னொருமுனை கப்பலின்மேல் தட்டுகளில் நிற்கும் பிரயாணிகள் கைகளிலுமாகப் பிடித்துக் கொண்டு, ஜனங்கள் கப்பல் புறப்பட்டவுடன் ஜப்பானியா பாஷையில் "பான்சாய், பான்சாய்!" (பதினாயிரம் வருஷம் வாழுங்கள்!) என்று பெரும் கூச்சலிட்டு வழிவிட் டனுப்பினார்கள். பிடித்திருந்த பல வருணக் காகிதங்களும் காற்றில் ஏகமாய் பறந்து கப்பல் தூரச் செல்லச் செல்லக் கிழிய ஆரம்பித்தன. மேளக்காரரும் கரையிலிருந்து மேளம் வாசித்தார்கள். பஸிபிக் மகா சமுத்திரத்தில் அமெரிக்கா போகும் வழியிலிருக்கும் ஹானலூலு தீவு நோக்கி கப்பல் கடலில் மிதந்து ஓட ஆரம்பித்தது. நான் இதுவரை செய்த கப்பல் பிரயாணங்களிலெல்லாம் இது வெகு நீண்ட பிர யாணம். வழியில் துறைமுகங்களும் சொற்பமே. ஒன்றே ஒன்றுதான் (ஹானலூலு). முதல் கிழக்கு திசைதான் போனோம். இவ்வுலகம் வட்டவடிவான கோளமல்லவா? இதினால் கிழக்கே போய்க்கொண்டிருந்த நாங்கள் 180-வது மெரிடியன் என்ற பூகோளசாஸ்திர வரிசேரவும் இப்பூகோள வட்டத்தின் மத்திய எல்லை கடந்து குணகோளார்த்தத்தி லிருந்து குடகோளார்த்தம் பிரவேசித்துவிட்டோம். எங்கள் கடிகாரவேளையும் முற்றிலும் மாற்றவேண்டியதாயிற்று. செவ் வாய்க்கிழமை முடிந்தும் மறுநாளும் செவ்வாயாகவேயிருந் தது. ஆக இந்த வாரத்திற்கு எட்டு நாள். இதெல்லாம் ஏதோ கருகலான மூடப் பேச்சுப்போல் உங்களில் சில ருக்குத் தோன்றலாம்! இது இயற்கையின் சத்தியமேயன்றி

வேறல்ல. பூமிசாஸ்திரம்கற்ற ஒருவரிடத்தில் இதைத் தெளிவாய் உங்களுக்கு விளக்கிக் காட்டச்சொல்லுங்கள். அல்லது திருப்பத்தூர் சமீபமாயிருந்தால் என்னிடம் சந்தோஷமாக வந்து கேட்கலாம். எட்டு நாள் கடலில் பிரயாணம் செய்த பின் ஹானுலூலு தீவு சேர்ந்தோம்.

---

## அமெரிக்கா.

ஹானலூலு—இது பசிபிக் மகாசமுத்திரத்திலுள்ள ஒரு தீவு. ஹவ்வாய்த் தீவுகள் என்ற தீவுகளிலொன்று. முன்னே சுயாதீன சுதந்திரமாக ஹவ்வாய் சுதேச மன்னன் அரசாட்சிக்குள்ளிருந்ததை அமெரிக்கா தேசத்தார் சில வருஷங்களுக்குமுன் தங்கள் ஆதீன பூமியாகத் தங்கள் அரசாட்சிக்குள் சேர்த்துக்கொண்டார்கள். இது தற்காலத்தில் அமெரிக்கா தேசக் கப்பல் படைகளுக்குப் பிரதம ஸ்தானம். இதின் பூர்வீக சுதேச ஜனங்களாகிய ஹவ்வாயர் மலேயாநாட்டு வம்சத்தைச் சேர்ந்தவர்கள் என்று சாஸ்திரிகள் யூகிக்கிறார்கள். ஆனால் தற்காலத்தில் பலமற்ற தேசத்தாருடன் கலந்துவிட்டார்கள். இத்தீவுகளின் ஜனங்களில் பாதிக்குமேல் ஜப்பானியர். இங்குள்ள 368336 அதாவது மூன்றரை லக்ஷத்திற்கு மேலான ஜனங்களுக்குள் ஜப்பானியர் பாதித்தொகைக்கு மேலானவர்கள். மீதிப்பேர் சீனர், பிலிப்பினேத் தீவார், போர்த்துக்கீஸ் தேசத்தினர், அமெரிக்கர் முதலியவர். இவ்விதமாக நானாஜாதி பாஷைக்காரர் கலந்த சிறிய தீவு. இங்குள்ள கலாசாலை நான் பார்க்கப்போயிருந்தபோது பல தேச வம்சக் கலப்பைக்குறித்து விசேஷ ஆராய்ச்சி செய்வது இங்குள்ள சாஸ்திரிகளின் பிரதான வேலையென்று கவனித்தேன்.

இங்குள்ள ஒரு வைத்தியசாலை பார்க்கப்போனேன். புத்திமந்தமுள்ளவர்கள், பயித்தியம் பிடித்தவர்கள் பிள்ளை

பெற்றால் பிள்ளைகளுக்கும் பயித்தியம் வரக்கூடியதாதலால், இப்படிப்பட்டவர்கள் ஆண்களும் பெண்களும் பிள்ளை பெறாது தடுக்க, இங்குள்ள ரணவைத்தியர்கள் இப்படிப்பட்டவர்களுக்கு ஆயுதவேலைசெய்து அவர்களை மலடாக்குகிறார்கள். இங்குள்ள இன்னொரு பெரிய டாக்டர் பெற்றோர்கள் அதிகமாய்ச் சோறு (தங்கள் பிரதான ஆகாரமாக) சாப்பிட்டால் அவர்களுக்கு பிறக்கும் பிள்ளைகளுக்கு பல் தேய்ந்து கெட்டதாகும் என்ற, எனக்கு வேடிக்கையாகத்தோன்றிய, அபிப்பிராயம் சாதித்தார்! இங்கு நான் சுற்றிப் பார்த்துக்கொண்டிருக்கையில் ஒரு அமெரிக்கா தேச பெரியம்மாள் என்னைக் கண்டு உபசாரமாகப் பேசி தன்னுடன் வந்து ஊர் பார்க்க அழைத்தார்கள். இவர்கள் நம் இந்தியா தேசம் வந்திருந்த போது நம்மவர் அவர்களுக்கு உபசாரம் காட்டிய நன்றியைத் தான் மறக்காததினால், இந்தியனாகிய எனக்கு உபசாரம்செய்ய சமயம் கிடைத்தது தனக்கு மிகச் சந்தோஷமென்று என்னிடம் சொன்னார்கள். இவர்கள் தன்னுடைய மோட்டாரில் என்னை அழைத்துக்கொண்டுபோய் ஊரில் பல இடங்களும் காட்டினார்கள். கலாசாலை சாஸ்திரிகளிருவரும், இந்த அம்மாள் சகோதரியும் கூடவந்தார்கள். வைரத்தீவு என்னும் அர்த்தம்கொண்ட பெயருடைய காய்ந்து வறண்ட ஒரு மலை, முன்னே எரிமலையாயிருந்தவிடம். இத்தீவின் இன்னொரு பாகம் ஜனங்கள் குளிக்கும் அழகிய கடல்கரை. ஹானலூலு நமது தேச பம்பாய் நகர் பூகோளத்தின் எந்த சுற்றுவரியிலிருக்கிறதோ அதே சுற்றுவரி ஸ்தானத்திலேயே இருப்பதால் சீதோஷ்ணமும் கொஞ்சம் குறைய நம் தேசம்போலவே

தான். பின்பு சற்று உயரமான பாலி என்ற பெயருள்ள வேறு இடம் போனோம். இங்கிருந்து கீழேயிருந்த மட்டபூமி தூரப்பரவியிருந்த கடல் இவையெல்லாம் கண்கவரும் அரிய காட்சி. பக்கங்களில் அடர்ந்த தோப்புகளிருந்தன. இரவில் நாங்களெல்லோரும் ஒரு தோப்பு விடுதியில் விருந்து சாப்பிட்டோம். என்னே! இந்த அம்மாளின் நற்குண உபசார சிந்தை! அந்நியரை உபசரிக்க நாமும் மறக்காதிருப்போம். மறு நாள் இங்கிருந்த டாக்டரொருவர் அன்னாசிப் பழம், அதின் சாறு இவற்றை தகர டப்பாக்களில் அடைத்துப் பாதுகாக்கும் யந்திர தொழில்சாலைக்கழைத்துக்கொண்டு போனார். வெகு துரிதமாய் யந்திரங்கள் அன்னாசிப்பழத் தோலை உரிப்பதையும், துண்டுதுண்டுகளாக வெட்டுவதையும், இத்துண்டுகளைக் கசக்கிப் பிழிவதையும் பார்த்தேன். பின்பு இப்பழ ரசத்தை யந்திரமூலமே தகரடப்பாக்களில் காற்று உள்ளிருக்காதபடி செய்து, அடைத்து, இன்னொரு யந்திரத்தாலே இந்த டப்பாக்களுக்கு பெயர் முதலிய அச்சிட்ட காகிதங்கள் ஒட்டுகிறார்கள். ஒரே நாளில் ஒன்றேகால் லக்ஷம் அன்னாசிப் பழங்களை இவ்விதம் யந்திரங்களாலே தகர டப்பாக்களிலடைத்து வியாபாரத்திற்கு ஆயத்தமாக்கிவிடக்கூடுமாம். ஒரு யந்திரம் ஒரே நிமிஷத்தில் 785 தகர டப்பாக்கள்மேல் சீட்டு ஒட்டிவிடுகிறதாம்! இதெல்லாம் பார்க்கப் பார்க்க நமது நாட்டார் தங்கள் ஏழைக் கைகளின் வேலையால் எங்ஙனம் இதோடு போட்டிசெய்யமுடியும் என்றுணர்ந்தேன். ஜப்பான் தேச நெருப்புப்பெட்டிகளும், அமெரிக்கர் தகர டப்பாவிலடைத்தனுப்பும் ஆகாராதிகளும், ஆங்கில தேச யந்திர

மூலமாய் செய்யப்படும் துணிகளும் நம்நாட்டிற்குவந்து சகாய மாய் விற்பனையாவதால் கைத்தொழில் வேலையினாலுண்டாகும் நமது பிழைப்பை எவ்வாறு அதமாக்குகின்றனவென்பது இதெல்லாம் பார்த்திருக்குமெனக்கு பட்டப்பகல் வெளிச்சம்போல் தெற்றெனத்தெரிகிறது.

கப்பல் 24 மணி நேரம் இங்கு தங்கியிருந்ததாலும், அமெரிக்க நண்பர்கள் காட்டிய உபசாரம் மோட்டாருதவியாலும், இவ்வளவு நன்றாக இத்தத்தீவின் காட்சிகளைப் பார்க்க எனக்கு சௌகரியங்கள் கிடைத்தன.

மே மாதம் 25-ம் தேதி மத்தியானத்திற்குமேல் கப்பல் திரும்ப வடமேற்குநோக்கி அமெரிக்காதேசம் போகப் புறப்பட்டது. ஹவ்வாய்த்தீவினர் தங்கள் இஷ்டஜன பந்துக்களை வழிவிட்டனுப்புகையில் நமது நாட்டினர்போல் பூமாலைபோட்டனுப்புவார்கள். இந்த அம்மாளும் எனக்கு பூமாலைபோட்டு வழிவிட்டனுப்பினார்கள்.

மே மாதம் 30-ம் தேதி (அதாவது 24 மணி நேரம் வழியில் கூடினதினிமித்தம்) ஜப்பானிலிருந்து புறப்பட்டு 14 நாட்களுக்குப்பின் அமெரிக்கா தேசத்தின் மேற்குக்கரையின் துறைமுகமொன்றாகிய ஸான்பிரான்ஸிஸ்கோ நகரம் சேர்ந்தோம். கடைசி இரண்டு நாள் பிரயாணத்திலும் கடல் அலைகள் பலமாய் மோதிக் கப்பல் புரண்டமையால் எனக்கு வாந்தி மயக்கம் உண்டாகி சற்று கஷ்டப்பட்டேன்.

அமெரிக்கா கண்டம் எலுமிச்சம்பழ உருவம்போல் உருண்டவடிவமான இப்பூகோளத்தின் மேற்குப் பாகத்தி

விருக்கிறது. இக்கண்டத்தில் பூர்வீககாலத்தில் மங்கோலிய வம்சத்தைச்சேர்ந்த ஜனங்கள் வசித்துக்கொண்டிருந்தார்கள். பல நூற்ருண்டுகளுக்குமுன் ஐரோப்பியருக்குள் நமது தேச மாகிய இந்தியா மிக ஐசுவரியமான நாடு என்ற அபிப்பிராய மிருந்ததால் இதனேடு வியாபாரம் செய்து பணம் திரட்டலாம் என்ற பெரும் அவா அவர்களுக்கு உண்டாயிற்று. இந்தியா விற்கு கப்பல்கள்செல்ல புது மார்க்கம் கண்டுபிடிக்கவேண்டு மென்று அவர்களுக்குள் பல கப்பல் மாலுமிகள் முயற்சி செய்ய ஆரம்பித்தார்கள். ஐரோப்பாவில் ஸ்பானியா தேசத்து கப்பல் மாலுமியாகிய கொலம்பஸ் என்பவன் இந்தியாவிற்கு வழி கண்டுபிடிக்கப்போகிறேன் என்று மேற்கு திசையாய்ப் புறப்பட்டான். அமெரிக்கா தேசத்தின் அருகிலிருக்கும் சில தீவுகளைக் கிட்டவும் இந்தியாவைக் கண்டுபிடித்துவிட்ட தாகத் தவருக அவன் எண்ணி அதற்கு இந்தியா என்று பெயர் கொடுத்துவிட்டான். இந்தத் தவருன பெயரினல் தான் இந்நாள்மட்டும் அமெரிக்காவிலுள்ள பூர்வீக ஜனங் களை "இந்தியர்" என்ற தவருன பெயரினுலே அமெரிக்காவில் தற்காலத்தில் இருக்கும் வெள்ளை மனிதர் அழைக்கிருர்கள். கொலம்பஸ் காலத்திற்குப்பின் ஏராளமான வெள்ளை மனிதர் ஐரோப்பாவிலிருந்து அமெரிக்காபோய் அங்கிருந்த பூர்வீக ஜனங்களை அடக்கி அழித்து அல்லது தூர இடங்களுக்கு விரட்டிவிட்டுத் தாங்கள் குடிபுகுந்தார்கள். இதனல் சிற்சில வெகுதூரமான காட்டுப்புற இடங்களில் மிக அற்பசொற்ப தொகையினராகவிருக்கும் இந்தப் பூர்வீக ஜனங்களையன்றி அமெரிக்காவிலிருப்பவர்களெல்லாம் ஐரோப்பாவிலிருந்து குடி

புகுந்த வெள்ளை மனுஷர்களே. அமெரிக்கா மிகப் பெரிய கண்டம். வட அமெரிக்காவும் தென் அமெரிக்காவுமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. வட அமெரிக்காவில் தெற்கே மெக்ஸிக்கோ, நடுவில் அமெரிக்க ஐக்கிய நாடுகள், வடக்கே கானடா என்று மூன்று பாகங்களிருக்கின்றன. நடுவிலிருக்கும் ஐக்கிய நாடுகள்தான் எல்லாவற்றிலும் பெரும்பாகம். இதைத்தான் வழக்கமாக நாம் அமெரிக்கா என்ற பெயரால் அழைக்கிறோம். இந்தப் பெரிய அமெரிக்க நாடாகிய ஐக்கிய நாடுகள் பல வருஷங்களாக இங்கிலாந்து தேச அதிகாரத்தின் கீழிருந்தது. ஆனால் 1783-ம் வருஷம் இது இங்கிலாந்தை எதிர்த்துச் சண்டைசெய்து சுயாதீன சுதந்திரமடைந்து விட்டது. இங்கிலாந்து தேசத்தோடு முதல் சம்பந்தப்பட்டிருந்ததால் ஆங்கிலம்தான் இப்போதும் இங்கு அரசியல் பாஷை. ஆனால் அரசியலோ குடியரசாட்சி முறையானது. இது நிற்க.

ஸான்பிரான்ஸிஸ்கோ நகரில் கப்பல் சேர்ந்தபின் பிரயாண அநுமதிப் பத்திரம் பரிசோதிக்கும் அமெரிக்க உத்தியோகஸ்தன் வந்தான். "உனக்கு இங்கிலீஷ் வாசிக்கத் தெரியுமா? இந்தக் காகிதத்தில் அச்சிட்டிருப்பதை வாசிக்கத் தெரியாவிட்டால் சொல். நீ ஜுலை மாதமுடியுமட்டும்தான் இந்நாட்டிலிருக்கலாம். நான் சொல்லுகிறது புரிகிறதா?" என்றிப்படி சற்று முரட்டுத்தனமாகப் பேசினது எனக்குமிக வேடிக்கையாயிருந்தது. பின்பு சுங்க வரிக்காரர்வந்து சாமான்களைப் பரிசோதனைசெய்ய ஆரம்பித்தார்கள். இந்தத் தகாறுகளெல்லாம் முடிந்து (அன்று முற்பகல்போல் துறைமுகம்

சேர்ந்த நாங்கள்) கப்பலைவிட்டிறங்க சாயந்திரம் 4 மணியாயிற்று. வாலிப சங்க காரியதரிசி ஸ்காட் என்ற அமெரிக்க நண்பர்தன் பிள்ளைகளுடன் கப்பலுக்குவந்து என்னைக் கூட அழைத்துக்கொண்டுபோய் ஊர் காட்டினார். சர்வதேசத்தார் விடுதியொன்றிருந்ததில் நான் தங்கியிருந்தேன். பெரிய ஊர். உயர்ந்த கட்டிடங்கள் இருந்தன. 33 மச்சுள்ள ஒருகட்டிடம் ஒன்றை மின்சாரத் தூக்குவண்டியேறிப் பார்த்தேன். கலாசாலை முதலியன சுற்றிப்பார்த்தேன். மறு நாள் இங்கு தங்கியிருக்கும் ஒரு இந்தியக் குடும்பத்துடன் விருந்துண்டேன். அன்றிரவு புகை வண்டியேறி தெற்கே லாஸ் அஞ்சலீஸ் என்ற நகர் போனேன். எனக்கு மிக சிநேகம்பாராட்டி உதவிசெய்த ஸ்காட் நண்பர் கூடவந்தார்.

காலை இந்த நகரம் சேர்ந்தோம். தமது சொந்த மோட்டாரில் ஊரில் பல இடங்களுக்கும் தமது சிநேகிதரிடத்திலும் என்னை அழைத்துக்கொண்டு போனார். அமெரிக்காவின் இப்பாகங்களுக்கு காலிபோர்னியா என்று பெயர். இங்கு பலவித பழத்தோட்டங்கள் ஏராளமாகயிருக்கின்றன. நூற்றுக்கணக்கான ஏக்கரா நிலங்களில் ஆரஞ்சுத் தோப்புகள் நிரம்ப இருக்கின்றன. பழங்கள் மரங்களில் கொத்துக்கொத்தாகத் தொங்கிக்கொண்டிருந்தன. காலிபோர்னியா என்ற இந்த அமெரிக்க மாகாணத்தில் பப்பாளி போன்ற மலாம் பழங்களும், தர்பூசினி முதலிய வேறு பழங்களும் ஏராளமாக விளைகின்றன. நாம் பழவர்க்கங்களை ஆகாரம் புசித்தபின் சாப்பிடுகிறோம். அமெரிக்க தேசத்தினரோ ஆகாரம் புசிக்க ஆரம்பிக்கும்போது சாப்பிடுகிறார்கள். நான் போயிருந்த சம

யத்தில் வெயில்காலமானதால் உஷ்ணமாகத்தானிருந்தது. மின்சார யந்திரத்தொழில் முதலிய தொழில் கற்றுக்கொடுக்கும் கல்லூரியும் சுற்றிப்பார்த்தேன். இந்த நகரத்திற்கு ஏறக்குறைய 250 மைல் தூரத்திற்கு அதிகமான ஒரு இடத்திலிருந்து தண்ணீர் கொண்டுவருகிருர்கள்.

இங்கிருந்து புறப்பட்டு வடகிழக்குத் திசையாய் அநேக மைல் தூரம் புகைவண்டியில் பிரயாணம் செய்தேன். முதல் நாள் முழுவதும் தண்ணீர் காணுத கடும் வனாந்தரப் பாதையாய்ப் போனேம். எங்கும் மணலும் பாறையும் கலந்த கரம்பு நிலம் அல்லது வெட்டவெளியான குன்றுகள். பசுமை கிடையாது. மணல் தூசி அதிகம். உஷ்ணமாயிருந்தது. கொஞ்சங் குறைய 24 மணி நேரம் பிரயாணம் செய்த பின்தான் "உப்பு ஏரி நகரம்" என்ற அர்த்தம் கொள்ளும் பட்டணத்திற் கருகில் ஒரு பெரிய உப்புத் தண்ணீர் ஏரி பார்த்தேன். இந்த நகரில் "மார்மன்" வகுப்பினர் என்ற ஒருவித கொள்கைக் காரிருக்கிருர்கள். இம்மதப் பிரிவை ஸ்தாபித்தவர் இத் தேசத்தின் மேற்குப் பாகத்தில் முதலாவதிருந்தவர். ஒருவன் இரண்டு மனைவிகளை விவாகம் செய்துகொள்ளலாமென்று இவர் போதித்தபடியால் இது தவருன போதகம் என்று ஏனைய மற்ற அமெரிக்கா பொது ஜனங்கள் இவரை தங்கள் எல்லைகளிலிருந்து விரட்டி விட்டார்கள். சர்க்காரும் இப்படி ஒருவன் இரண்டு பெண்களை விவாகம் செய்யக் கூடாதென்று சட்டம் ஏற்படுத்தி விட்டார்கள். அக்காலத்தில் மேற்குப் பாகங்களில் ஜனங்கள் குடியேருதிருந்தபடியால் இவரும்



நான் பிரசங்கம் செய்த எட்வர்ஸ்பர்கு ஆலயத்தில் ஆராதனை முடிவில் எடுத்த படம். (83-ம் பக்கம் பார்க்கவும்.)



அமெரிக்காவில் நீகிரோவரான விவசாயியும் ஒரு நீகிரோ டாக்டரும். (87-ம் பக்கம் பார்க்கவும்.)



அமரிக்காவின் பிரதம நகரமாகிய உவாஷிங்டன்
நகர சட்டசபைக் கட்டிடம்.



அமரிக்காவில் விவசாய சாஸ்திரத்தில் நிபுணரான
கார்வர் என்ற நீகிரோ சாஸ்திரி.
(விவரம் 91-ம் பக்கம் பார்க்கவும்.)

தம்மவர்களினுடன் அங்கு சென்று குடியேறினர். நான் மேலே சொன்ன உப்பு ஏரி நகரத்தில் இப்பிரிவாரின் பெரிய ஆலயமொன்றிருக்கிறது.

வெள்ளி இரவு புகைவண்டி ஏறின நான் திங்கள் முற்பகல் மட்டும் பிரயாணம் செய்து ஓமகா நகர் வழியாய் வடக்கேயிருந்த திரிப் என்ற ஊர் சேர்ந்தேன். முன்பு நமது நாட்டில் மதுரையில் வேலை செய்த அமெரிக்க நண்பர் கயித்தானவர்கள் என்னைப் புகைவண்டி ஸ்தானத்தில் சந்தித்து அன்போடு உபசரித்தார். பல ஊர்களுக்கு தமது மோட்டாரில் என்னை அழைத்துக்கொண்டு போய் அமெரிக்கர் கூடிய கூட்டங்களில் இந்தியாவைக் குறித்துப் பேசும்படி கேட்டுக்கொண்டதால் எனக்கும் போதுமான வேலையிருந்தது. இந்நாடுகளில் மத்தியான வேளையில் பல இடங்களிலிருந்து வேலை பார்க்கிறவர்கள் கூடி வந்து சாப்பிடத் தக்க விடுதிகளிருக்கின்றன. இச்சமயத்தில் அவர்கள் சாப்பிட்டு முடிந்தவுடன் இப்படிப்பட்ட கூட்டங்கள் வைக்கிறார்கள். தெற்கு டக்கோட்டா வென்ற இந்த மாகாணத்தில் இப்படிப்பட்ட கூட்டங்களில்தான் நான் அடிக்கடி பேசினேன். இந்தியாவைப்பற்றி அறிய இந்த ஜனங்கள் மிக ஆவல் காட்டினார்கள். மகாத்துமா காந்தியவர்களைப் பற்றி முக்கியமாக விசாரித்தார்கள். இங்கு ஒரு ஊரில் விவசாயிகள் காரியங்களைக் கண்டறிய இரண்டு மூன்று சமுசாரிகள் வீட்டிற்குப் போயிருந்தேன். ஒரு சமுசாரி வீட்டில் பல முதல் தரமான பெரிய பசுக்களிருந்தன. நல்ல பெரிய பொலி

எருதுகளும் பார்த்தேன். கன்றுக் குட்டிகளும் பெரிதே. காற்றை உறிஞ்சியிழுக்கும் யந்திரம் வைத்து பால் கறக்கிற காட்சி எனக்கு விநோதமாயிருந்தது. ரப்பர் குழாய்களை பசுக்களின் மடுக்களில் மாட்டி பாலை உறிஞ்சும்படி செய்து இப்படிக் குழாய்களுக்கு வந்த பாலை பெரிய வாளிப் பாத்திரங்களில் சேர்த்தார்கள். ஒரு பசு நாளுக்கு கொஞ்சம் குறைய பதினாறு படி பால் கொடுக்கும். யந்திரங்களினாலே பாலை கடைந்து வெண்ணெய் எடுக்கிறார்கள். கிணற்றுத் தண்ணீர்தான் உபயோகிக்கிறார்கள். திருப்பத்தூர் ஆசிரமத்திலிருக்கிறது போலவே காற்றாடி யந்திரம் தண்ணீர் இறைக்கிறது.

விவசாயிகளுக்கு ஏராளமான ஏக்கரா நிலமிருக்கிறது. கொஞ்சம் குறைய இரண்டாயிரம் ஏக்கரா நிலமுள்ள ஒரு விவசாயியைப் பார்த்தேன். ஆனால் இவற்றில் சில ஏக்கரா நிலங்கள் கால்நடைகள் மேய்ச்சலிற்காக விடப்பட்டிருந்தன. பெரிய குதிரைகள் வைத்துத்தான் ஏர் ஓட்டுகிறார்கள். யந்திரங்களினால் கதிர் அறுக்கிறார்கள். மாட்டிற்கு வேண்டிய சோளத்தட்டு முதலிய ஆகாராதிகளை சுற்றி வட்டமாகக் கட்டப்பட்ட எருக் குழிகளில் பாதுகாத்துவைக்கிறார்கள். புல் கட்டுகளை உயர்த்தும் கருவிகளால் ஏராளமான மாட்டுப் புல்லைப் பரணிகளில் சேர்க்கிறார்கள். நான் போன சமயத்தில் மழைக் குறைவினால் விவசாயிகள் சற்று கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள். சோளம், மக்காச்சோளம், கோதுமை, வார்க்கோதுமை இவைதான் முக்கியப்பயிர். இந்த விவ

சாயிகள் சேற்றிலும், குதிரைலாயம் மாட்டுப்புறை இவற்றிலும் பகலில் வேலைசெய்து அழுக்குப் பட்டாலும், மாலை தங்களை சுத்தம்செய்து உடைமாற்றி சுத்தமாயிருப்பார்கள். வீடுகளையும் சுத்தமாய் வைத்திருப்பார்கள். என் கிராமக் குடியானவர்களே, நாம் எவ்வளவு ஏழைகளாயிருந்தாலும் ஏன் நம்மையும் நம்முடைய வீடுகளையும் சுத்தமாய் வைத்துக் கொள்ள முடியாது. கை கால் கழுவி சுத்தம் செய்து கொள்ள கொஞ்சம் கிணற்றுத் தண்ணீர் கிடையாதா? உடுக்கக் கந்தையானாலும் தினம் தண்ணீரில் துவைத்து உடுத்திக்கொள்ளக்கூடாதா? குடிசையானாலும் பெருக்கி, இருக்கிற சாமான்களை ஒழுங்குபடுத்தி, நம்மைப் பார்க்கவருகிறவர்களும் நாமும் சந்தோஷப்படச் சுத்தமாய் வைத்துக்கொள்வோம். இந்த விவசாயிகள் எல்லோரும் எழுத்து வாசிப்பறிந்தவர்கள். இவர்கள் பிள்ளைகள் ஒழுங்காய் பள்ளிக்கூடம் போகிறார்கள். மோட்டார்பூட்டிய ஏர்வைத்துச் சிலர் உழுகிறார்கள். யந்திர மோட்டும் கத்திகளால் பயிரறுக்கிறார்கள்.

இந்தச் சமுசாரிகள் தங்கள் சொந்தத்தில் மோட்டார் வண்டிகளும் வைத்திருக்கிறார்கள். அமெரிக்கா, மோட்டார்கள் செய்கிற தேசமாகையால், மோட்டார்களும் சகாயமான விலைக்கு வாங்கலாம். பழைய மோட்டார்கள் வெகு சகாயமான விலைதான். இதற்குச் சில நாட்களிற்குப் பின் எட்வட்ஸ்பர்கு என்ற ஊரில் நான் இருக்கையில் ஒரு வாலிப மாணவன் தெருவில் வர்த்தமானப் பத்திரிகைகள் விற்று வெகு சிக்கனமாய் ரூ. 30 சேர்த்து அந்தப் பணத்திற்குத்

தான் வாங்கியிருந்த மோட்டாரிலே ஒரு ஊரிலிருந்த பழத் தோட்டங்களைப் பார்க்கக் கூட்டிக்கொண்டு போனான். ஆப்பிள், பேரிப்பழங்கள் முதலிய தரும் ஒட்டுமரங்கள் ஏராள மாயிருந்தன. இந்த சமுசாரியும் நன்கு கல்வி கற்ற அவர் மகனும் எவ்விதமாக ஒட்டு வேலை செய்கிறார்களென்று எனக்கு விவரித்துக் காட்டினார்கள். நல்ல விருந்து செய்து உபசரித்தார்கள். இங்கு விவசாயிகள், கிராமத்தார் பிள்ளைகள் படிக்கும் பள்ளிக்கூடத்தையும் போய்ப்பார்த்தேன். இங்கு அநேக மாணவர்களும் மாணவிகளும் படிக்கிறார்கள். எழுத்து வாசிப்பு, கணக்கு, இயற்கைசாஸ்திர முதலிய உயர்தரக்கல்வியுடன் ஆண்களுக்கு விவசாயம், தச்சு, யந்திர வேலை முதலிய கைத்தொழில்களும், பெண்களுக்கு சமையல், இல்லற வாழ்க்கையில் பின்காலத்தில் அவர்களுக்குபயோக மாய் இருக்கும் குடித்தனம், தையல்வேலை முதலியன சொல் லிக்கொடுக்கிறார்கள். பிள்ளைகள் சம்பளம் கட்டாமல் இலவச மாய்ப் படிக்கிறார்கள். இந்த ஊருக்குச்சுற்றி 10-மைல் தூரத்திற்குள்ளிருக்கும் எல்லாப் பிள்ளைகளும் ஒரு கஷ்ட மில்லாமல் இந்தப் பள்ளிக்கூடம் வரும்படி பள்ளிக்கூடத் திற்குச் சொந்தமான பல மோட்டார்வண்டிகள் பல இடங் களும் போய்ப் பிள்ளைகளைக் கொண்டுவருகின்றன. சுத்தமாக வைக்கப்பட்டிருக்கும் சமயலறை, பாத்திரங்கள், அடுப்புக் கணங்கள், போஜனசாலை முதலியவற்றை இங்கு படித்துக் கொடுக்கும் ஒரு அம்மாள் எனக்குக் காட்டினார்கள். ஆண் களும் பெண்களும் படித்துக்கொடுக்கிறார்கள். படிக்கும் சிறுமிகள் குடித்தனமாய் எல்லாக்கணக்குகளும் தாங்களே

எழுதி வைத்துக்கொள்கிறார்கள். அமெரிக்காவில் ஆண்களோ பெண்களோ எல்லா இளைஞரும் கட்டாயம் படிக்கவேண்டும். இப்படிக் கல்வியோடு கைத்தொழிலையும் விவசாயத்தையும் இந்த நாடுகளில் கலந்துகொள்வதனால் தான் சாதாரண ஜனங்களுக்குள் பொதுஅறிவு பரவி அவர்கள் எவரோடும் அடிமைத்தன நெஞ்சு காட்டாமல், சுயமரியாதை பாராட்டி, எவருடனும் சரிசமானமாய் நடந்துகொள்ளும் நிலையை அடைந்திருக்கிறார்கள். நமது பாமர மக்கள் சுதந்திர மிழந்தவர்களாய் இலகுவாய் மிரண்டு பயந்து அடிமைகள் போல் நடந்துகொள்வதற்கு கல்வியில்லாமை ஒரு பெருங் காரணமல்லவா ? ஆன் ஆர்பர் என்ற இன்னொரு ஊருக்கு நான் போயிருந்தபோது அதற்கு சற்று தூரத்திலிருந்த நாட்டுப் புறமான இடத்தில் பழங்களை தகரடப்பாக்களில் அடைத்துப் பாதுகாக்கும் யந்திரக் கைத்தொழிலைப் பார்த்தேன். ஒரு சிறிய வீட்டில் இந்த வேலை நடந்துகொண்டிருந்தது. பெரிய யந்திர சாலையிலல்ல ஓர் சிறிய வீட்டிலே இது நடந்தது. நமக்கு நல்லமாதிரி. இப்படி வீட்டிலுள்ள சிறிய யந்திரத்தால்செய்யும் கைத்தொழிலைக் "குடிசை கைத்தொழில்" என்றே சொல்ல வேண்டும். இப்படிப்பட்ட பலவிதக் குடிசைக் கைத்தொழில் கள் நமது கிராமங்களுக்கு மிக அவசியம். இந்த அறிவு இல்லாததால் எவ்வளவோ ஏராளமான மா, கொய்யா, பலா, அன்னாசி, வாழை முதலிய எத்தனையோ விதமான பற்பல பழவர்க்கங்கள் நமது தேசத்தில் உண்டானாலும் அவைகளை வெகு நாட்களுக்குக் கெட்டுப்போகாமலிருக்கும்படி பாது காக்கத் தெரியாததால் நஷ்டமடைகிறோம். கல்வியும் கைத்

தொழிலும் கலந்த பயிற்சியே நமது கிராம மக்களுக்கு மிக அவசியம். இல்லாவிட்டால் நாம் பாடுபட்டு இராப் பகல் விழித்து வளர்த்து சம்பாதித்த விவசாயப் பொருள்களாகிய பஞ்சு, நிலக்கடலை முதலிய பின்னும் பலவற்றை அந்நிய நாடுகளுக்கனுப்பிவிடுகிறோம். அவைகள் இவ்வந்நிய நாடுகளில் யந்திர தொழில் சாலைகளில் துணியாகவும், சவுக்காரம், மோட்டார்எண்ணை முதலியனவாகவும் செய்யப்பட்டு, நமக்கே இவைகளை அந்த நாட்டார் திரும்ப அனுப்பிவிற்பதினால், தொழிலில்லாமல் கஷ்டப்படும் நமது ஏழைஜனங்கள் இவ்வேலையை இழந்து கஷ்டமும் தரித்திரமும் அடையவும் செய்துவிடுகிறோம். நான் பார்த்த இந்த நாடுகளில் அப்படிச் செய்யாமல் தங்கள் நாட்டில் விளைந்த விவசாயப் பொருள்கள் எவையானாலும், அவற்றால் என்னென்ன பொருள்கள் எல்லாம் செய்ய முடியுமோ அவற்றை யெல்லாம் தாங்களே செய்து முடித்தே, வியாபாரத்திற்கு ஆயத்தமான பொருள்களாக மாத்திரம் இதர நாட்டிற்கு ஏற்றுமதி செய்வார்கள்.

சிக்காகோ நகரத்தில் பல நாட்கள் தங்கி இந்தியாவின் சுதந்தர உரிமையைப்பற்றி பல கூட்டங்களில் பேசினேன். அமெரிக்கர் வெகு உற்சாகத்துடனும் அநுதாபத்துடனும் நான் சொன்னதைக் கவனமாய்க்கேட்டு, நமது நாட்டின் பல காரியங்களைக் குறித்தும் ஆவலுடன் விசாரித்தார்கள். சிக்காகோவில் கல்லூரிகள், வைத்தியசாலைகள் போய் பார்த்தேன். இந்த நகரத்தில் நடந்தேறிய "அகில உலக காட்சி நகர்" போய் மின்சார யந்திர வேலைகள் சூட்சியங்கள், சுகா

தாரம், கல்வி முதலிய விஷய காட்சிகள், மோட்டார் வேலைகள் முதலியன பார்த்தேன். இரும்பு கம்பிகளிலிருந்து தொங்கி ஆகாயத்தில் மின்சார சக்தியால் ஓடும் சிறிய வண்டிகளைப் பார்த்தேன்.

ஜூன் மாத முடிவில் சிக்காகோ நகரத்தைவிட்டு அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களின் தெற்கு மாகாணங்களுக்குப் புறப்பட்டுப் போனேன். அமெரிக்காவின் ஜனத்தொகை 122,775,046. இதில் வெள்ளை மனுஷர் மாத்திரமல்ல, 11,891,143 நீகிரோவர் என்ற கறுப்பு மனுஷருமிருக்கிறார்கள். வெள்ளை மனுஷர் அமெரிக்காவில் முதல் குடியேறினதைப் பற்றி முன்னமே சொல்லிவிட்டேன். இந்த கறுப்பு மனுஷர் எப்படி இங்கு வந்தார்கள்? இவர்கள் சொந்த தேசம் நமது இந்தியாவிற்கு நேரே மேற்கே இருக்கும் ஆபிரிக்கா கண்டமே. ஆனால் அநேக வருஷங்களுக்கு முன் வெள்ளை மனுஷர் கப்பல்களில் ஆபிரிக்கா கண்டம் சென்று, அங்கு வசித்த கறுப்பு மனுஷரை பலாத்காரமான முறையாகவும் திருட்டுத்தனமாயும் பிடித்து, தங்கள் கரும்பு, தானியங்கள் பயிரிடும் தோட்டங்களில் அடிமைகளாக வேலைசெய்யும்படி அமெரிக்கா கண்டத்திற்குக் கொண்டு போய்விட்டார்கள். அமெரிக்காவில் இவர்கள் ஆடுமாடுகள்போல் சந்தைகளில் விற்கப்பட்டார்கள். இவ்விதமாக அமெரிக்காவிற்கு கொண்டு போகப்பட்ட இந்த கறுப்பு மனுஷ அடிமைகளுக்கு "நீகிரோ" என்று பெயர். அக்காலத்தில் இவர்கள் தங்கள் வெள்ளை எஜமான்களின் கைகளில் பட்ட பாடுகள் கொஞ்சமல்ல.

விவரித்தால் பரிதாபகரமாயிருக்கும். வெள்ளை மனுஷர் துன் மார்க்கத்திற்கும் இவர்கள் பெண்கள் இடங்கொடுத்துத்தான் ஆகவேண்டியதாயிருந்ததால் தற்கால நீகிரோவர் கலந்த இரத்த முடையவர்கள்தான். கொஞ்சம்குறைய 80 வருஷத்திற்கு முன், அமெரிக்காவிலிருந்த சிலபக்தர்கள் இப்படி இந்த கறுப்பு மனுஷரை அடிமை செய்து இம்சிப்பது தவறு என்று தைரிய மாகப் பிரசங்கித்துப் பிரசாரம் செய்தார்கள். தெற்கு மாகா ணங்களில்தான் நீகிரோவர் அதிகம். வடக்கு மாகாணத்தார் தெற்கு மாகாணத்தாரோடு யுத்தம் செய்து நீகிரோவரை விடுதலை செய்தார்கள். அதினால் இப்போது இவர்கள் அடிமை களாயிருக்கவில்லை. எனினும் இப்போதும் இவர்களுக்குப் பல கஷ்டங்கள் இருந்துகொண்டு தானிருக்கின்றன. தென் மாகாணங்களில் புகைவண்டியில் நீகிரோவர் பிரத்தியேகமாக கறுப்பு மனுஷருக்கென்று பிரித்துவைக்கப்பட்ட வண்டிகளில் தான் வேருகப் பிரயாணம் செய்யவேண்டும். இவர்கள் பிள்ளைகளும் வெள்ளை மனுஷர் பள்ளிக்கூடத்திலல்ல, கறுப்பு மனிதருக்கென்று ஏற்படுத்திய வேறு பள்ளிக்கூடத்தில்தான் படிக்கவேண்டும். நீகிரோவருக்கு வைத்தியசாலையும் பிரத்தி யேகமானதுதான். புகைவண்டி ஸ்தானத்தில் கறுப்பு மனு ஷர் பிரயாணச் சீட்டு (டிக்கட்) வாங்க வேறு பிரத்தியேக மான ஜன்னல். இந்த ஜன்னல் கறுப்பு மனுஷர் காத்திருக் கும் பிரத்தியேகமான அறையிலிருக்கிறது.

வெள்ளை மனுஷரோடு ஒப்பிட்டால் பொதுவாக இவர் கள் இன்னும் ஏழைகளாகவேயிருக்கிருர்கள். சமுசாரிகள்

சிலர் உண்டு. ஆனால் பலர் வெள்ளை மனுஷரின்கீழ் வேலைக் காராய்த்தானிருக்கிறார்கள். தென்பாகங்களில் நீகிரோவருக் கென்று ஏற்படுத்தப்பட்ட வைத்தியசாலைகளில் நீகிரோ டாக்டர்களே வேலை செய்கிறார்கள். நீகிரோவருக்காக ஏற் படுத்தப்பட்ட இரண்டு கலாசாலைகளையும் அவற்றிற்குத் தலை மையாயிருக்கும் நீகிரோ உத்தியோகஸ்தர்களையும் நான் பார்த்தேன். நான் அலபாமாவென்ற மாகாணம் சேர வும் கறுப்பு மனுஷனாதலால் என்னையும் கறுப்பு மனுஷர் வண்டியிலேயே ஏற்றிவிட்டார்கள். ஆனால் இப்படி இந்த ஏழைக் கறுப்பு மனுஷரோடு பிரயாணம் செய்யக் கிடைத்த சிலாக்கியம் எனக்கு அருமையாகவே இருந்தது. இப்படி இந்த பாகங்களில் கறுப்பு மனிதர் வண்டியில் பிரயாணம் செய்தபோது தூரத்தில் வேறு வண்டியில் தங்களை உயர்ந்த ஜாதிபோல் கர்வமாய் நினைக்கும் வெள்ளை மனிதர் உட்கார்ந் திருப்பதைப்பார்த்தேன். ஒரு கப்பலில் இந்தத் தென்பாகத் தில் நான் பிரயாணம்செய்ய நேரிட்டபோது, காலை உணவு அருந்த போஜனசாலைக்குப் போனேன். என்னை அறையின் ஒரு மூலையில் தனியே உட்காரவைத்து, வெள்ளை மனிதர் என் னைக் காணாதபடி ஒரு திரையையும்போட்டு என்னை மறைத்து சாப்பாடுகொடுத்தார்கள்! ஐயோ என்ன மூடத்தனம்! ஆராய்ச்சியாளர்களான சாஸ்திரிகள் நிறம் என்பதே ஒரு பொருளான வஸ்துவல்ல, சூரிய வெளிச்ச பிரதிபிம்பத் தினால் ஏற்படும் வெறும்தோற்றமே என்று கண்டுபிடித்திருக் கிறார்கள். இப்படியிருக்க இந்த மாயாதோற்றமாகிய தோல் நிறத்தை பெரிதாகப்பாராட்டி நிற வேற்றுமைப் பைத்தியத்

தால் மனுஷன் மனுஷனை இகழ்ந்து தாழ்த்திப் பெருமை பாராட்டுவது எத்தனை சர்வமூடத்தனம்! மேல்நாடுகளில் தங்களை நாகரிகமுள்ள அறிவாளிகள் என்று பாராட்டிக்கொள் ளும் வெள்ளை மனிதர்களின் இந்த குருட்டாட்டம் கண்டிக்கப் படத்தக்கதே. ஐயோ! ஐயோ! இந்தியாராகிய நமக்குள்ளும் சற்று சிகப்பாயிருந்தால்தான் அழகு, கறுப்பாயிருந்தால் அழ கல்ல என்று பாராட்டும் மூடர்கள் படித்தவர்களுக்குள்ளும் படியாதவர்களுக்குள்ளும் எண்ணிறந்தவர் இல்லையோ? அகத் தின் அழகு முகத்தில் தெரியும் என்ற முதுமொழிப்படி மெய்யான அழகு அகத்தின் அழகே. நிறத்திலல்ல. மேலும் வெளித்தோற்றத்தில்கூட உருவும், உடல் அமைப்பும், அங் கங்களின் போங்குகளும், முகத்தின் தேஜஸ் முதலியனவும் அல்லவோ முக்கியமாக கவனிக்கத்தக்கது? நாம் நமது கறுப்பு நிறத்தை இகழுமட்டும் பின்னை யார் நம்மை மதிப் பார்கள்? தன்னை இகழ்பவனை பிறன் மதிப்பானே? நமது அற்பப் புத்தியினுலே மனதார நம்மை மற்றவர்களுக்கு நாமே அடிமைகளாக்கிவிடுகிறோமல்லவா?

கறுப்புநிறத்திற்கு மதிப்புக்காட்டுவோம். பிள்ளை பிறந் தால் கறுப்பா சிகப்பா என்று கேட்காதிருப்போம். மெய் யான உள் அழகையே பாராட்டுவோம். இது நிற்க.

தஸ்கிஜீ என்ற ஊர் சேர்ந்தேன். இங்கே நீகிரோவர் முன்னேற்றத்திற்காக ஒரு நீகிரோ பெரியாராகிய புக்கர் வாஷிங்டன் என்ற பெயருடையார் ஸ்தாபித்திருக்கும் நிலயம் இருக்கிறது. நீகிரோ வாலிபருக்கு சாதாரணப்

பொதுக்கல்வியோடு யந்திரக் கைத்தொழில், தச்சுவேலை, விவசாயம், முதலியனவும் கற்றுக்கொடுக்கிறார்கள். ஏராள மான நீகிரோ வாலிபர் இங்கு படிக்கிறார்கள். உபாத்திமார் எல்லாம் நீகிரோவர்தான். நீகிரோ டாக்டர்களால் நடத் தப்படும் ஒரு வைத்தியசாலையும் இருக்கிறது. இங்கு நல்ல பால் கொடுக்கும் பெரிய பசுக்களும், நன்றாக வளர்க்கப்பட்டு வெகு பலமுள்ளதாகத் தோன்றிய பொலி எருதுகளும் பார்த்தேன். இப்பாகங்களில் கடலைக்காய் (நிலக்கடலை) பயிரிடுகிறார்கள். தஸ்கிஜீ நீகிரோ முன்னேற்ற நிலயத்தில் ஒரு வயது முதிர்ந்த நீகிரோ சாஸ்திரி இருக்கிறார். இவர் பெயர் ஜார்ஜ் கார்வர். இவர் ஒரு நீகிரோ அடிமை வயிற்றில் பிறந்தவர். சிசுவாயிருந்த போது வெகு பலயீனமாயிருந்த தால் பணங்கொடுத்து இவரை விலைக்கு வாங்கி, அடிமையாக வளர்க்க ஒரு வெள்ளை மனிதனுக்கும் பிரியமில்லை. கடைசி யாக ஒரு மட்டக் குதிரைக்குப்பதிலாக பண்டமாற்றாக இவர் ஒருவர் கைவசம் சேர்ந்தார். வாங்கின பெரியார் இவரை பிள்ளைபோல் வளர்த்துப் படிக்கவைத்து முன்னுக்குக் கொண்டுவந்தார். இதற்குள் நான் முன் விவரித்தபடி அடி மைத்தனமும் ஒழிந்தது. இந்த கார்வர் என்ற பெயருடைய நீகிரோ பெரியார் இப்போது 80 வயதுள்ளவர். விவசாய ஆராய்ச்சியில் நிபுணரான சாஸ்திரி. இவருடைய காரியாலயத் திற்கு என்னை அழைத்துக்கொண்டு போய் தமது விவசாய ஆராய்ச்சியின் பலனாக தாம் கண்டுபிடித்திருக்கும் பலகாரியங் களையும் எனக்கு விவரித்துக் காட்டினார். கடலைக்காயிலிருந்து 106 விதமான ஆகாரவஸ்துக்கள் செய்யும் முறை கண்டு

பிடித்திருக்கிறார். அதிலிருந்து எண்ணெயும் எடுத்து கை கால் விளங்காது பலமின்றி கஷ்டப்படும் சில நோயாளிகளுக்குப் பூசித்தடவி (நீவி) குணமாக்குகிறார். களிமண்ணிலிருந்து பல வித வருணசாய வஸ்துக்களும் கண்டுபிடித்திருக்கிறார். இவர் என்னை நெருங்கிய சிநேகிதன்போல் பாராட்டி மிக அன்புடன் நடந்துகொண்டார். கொஞ்சம் குறைய மூன்று நாள் நான் இந்த கல்வி நிலையத்தில் சந்தோஷமாய்த் தங்கியிருந்தேன். மிகுந்த பக்ஷமாக இங்கிருந்த நீகிரோ நண்பர் என்னை உபசரித்தார்கள். வைத்தியசாலை டாக்டர் ஒருவர் சற்று தூரத்தில் வசித்த ஒரு நீகிரோ விவசாயின் வீட்டிற்கு என்னைக் கூட்டிக்கொண்டுபோனார். இந்த விவசாயி தான் சிறுவனாயிருந்தபோது அடிமையாயிருந்தவர். இப்போது வயோதிபன். தனது முற்பிதாக்கள் அடிமைகளாயிருந்தபோது பட்ட கஷ்ட துன்பங்களை எனக்குச்சொல்லி, அத்துன்பகாலங்களில் அவர்கள் பாடிய மனதை உருகச்செய்யும் சில துயரமான பாட்டுகளையும் பாடினார். இப்போது இவர் கொஞ்சம் சம்பத்துள்ளவர். பேரன் பேத்தியெடுத்தவர். இவர் வைத்திருந்த மாடுகள் மெலிந்துபோனவைகளாயிருந்தன. ஆனாலும் பொதுவாகச்சொன்னால் இந்த நீகிரோ மனுஷரைப்பார்க்கிலும் நமது இந்தியாதேசக் கிராமத்தார் ஸ்திதி அதிகத் தரித்திரமுள்ள பரிதாபமான ஸ்திதி என்றே சொல்லுவேன். அமெரிக்காவிலுள்ள நீகிரோவர் வெள்ளை மனிதரால் இகழப்பட்டவர்களாயிருந்தாலும், வீடு வாசல், அநுதினம் வேண்டிய ஆகாரம் வஸ்திர முதலியனவற்றில் நம்முடைய ஏழை கிராம ஜனங்கள்போல் கஷ்டங்கள் அநுபவியாமல், தங்கள் அவசியத்திற்கு

வேண்டியவைகளெல்லாம் உடையவர்களாய் இருக்கிறார்கள். கல்வியிலும் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள். நீகிரோத் தலைவர்களாலேயே முற்றிலும் நடத்தப்படுகிற பல பள்ளிக் கூடங்கள், வைத்தியசாலைகளும் இருக்கின்றன. அத்லான்தா, உவாஷிங்டன் என்ற நகரங்களில் நீகிரோவர்களுக்காக ஏற்படுத்தப்பட்ட இரண்டு சர்வகலாசாலைகளு மிருக்கின்றன. நீகிரோவர் பொதுவாக நல்ல உயரமும் பருமனும், பார்க்க பலசாலிகளுமாகவே தோன்றுகிறார்கள். உபசார சிந்தை, சிநேகம், அந்நியருக்குதவிசெய்வது முதலிய நற்குண முள்ளவர்களாக எனக்குத் தோன்றினார்கள். ஆனால் சில விஷயங்களில் சிறுபிள்ளைத் தனமுள்ளவர்களாகவும், இலகுவாக மனோசலனமடைந்து விடக்கூடியவர்கள் போலும் தோன்றுகிறார்கள்.

நீகிரோவர் முன்னேற்றத்திற்கு அநுகூலமாக கல்வி, விவசாயம், அரசியல் உரிமை இப்படி பல விஷயங்களையும் கவனமாய் ஆராய்ச்சி செய்து புத்தகங்கள் பிரசுரம் செய்யும் ஆராய்ச்சிசாலையும் பார்த்தேன்.

வடகிழக்காய் பிரயாணம் செய்து ஹாம்டன் நகரம் போய் அங்கிருக்கும் நீகிரோவர் முன்னேற்ற கல்வி மன்றத்தையும் பார்த்தேன். இங்கு அமெரிக்கா விமான கப்பல் படைகள் மத்தியஸ்தானம் போய் அங்கிருந்த ஒரு இராணுவ விமானக் கப்பல் புறப்பட்டு பறந்து போவதையும் பார்த்தேன். பின்பு அமெரிக்காவின் பிரதம நகரமாகிய உவாஷிங்டன் போனேன். அமெரிக்கா இங்கிலாந்து தேசத்திற்குக் கீழாய்

இருப்பதிலிருந்து விடுதலை அடைந்து சுதந்தரம் அடைந்த சம்பவத்தைக் கொண்டாடும் வருஷாந்திர உற்சவ நாள்தான் நான் இந்நகர் சேர்ந்தேன். வாண வேடிக்கைகளுடன் வெகு டம்பமாய் சுதந்திர உற்சவம் கொண்டாடிக்கொண்டிருந்தார்கள். லிங்கன் பெரியார் பெயர் விளங்க சலவைக்கற்களால் கட்டப்பட்ட ஞாபகார்த்தசாலை, சட்டசபைகள் கூடும் ஸ்தலம் முதலியன சுற்றிப்பார்த்தேன்.

பால்டிமோர் நகரில் சென்று அங்குள்ள ஒரு பெரிய வைத்தியசாலை பார்த்தேன். அங்குள்ள இரணவைத்தியர்கள் மூளையில் கட்டி, கழுத்தில் கண்டமாலை எடுக்கும் பெரும் ஆயுத வேலைகளும் பார்த்தேன். என்னை உபசாரமாய் வரவேற்று வைத்தியசாலையின் பல பாகங்களையும் காட்டினார்கள்.

இதன்பின்பு இவ்வுலகங்களிலுள்ள எல்லா நகரங்களிலும் பெரியதாகிய நியூ யார்க்கு நகரம் சேர்ந்தேன். ஹட்ஸன்நதி அழகாய்ஓடும் ஆற்றங்கரைச் சமீபமாயிருந்த சர்வதேசத்தார் தங்கும் விடுதியில் இங்கு 10-நாள் தங்கியிருந்து பல இடங்களும் சுற்றிப்பார்த்தேன். வானமளாவிய வெகு உயர்ந்த கட்டடங்கள் பல இந்நகரிலுண்டு. 102 மச்சுள்ளதும், 1200-அடி உயரமுமான ஒரு கட்டடம் உச்சிபோய்ப்பார்தேேன். கீழே எல்லாம் வெகு சிறியனவையாய்த் தெரிந்தன.

நியூ யார்க்கு நகரத்திலும் சிக்காகோ நகரத்திலும் நமது நாட்டிலிருந்து போய் அங்கு படிக்கும் பல இந்திய மாணவர்களைப் பார்த்தேன். இதன் முன்னே சிக்காகோவில் நானிருந்த போது அங்கு உயர்கல்விசாஸ்திரப் பட்டத்திற்காகப் படித்துக்

கொண்டிருக்கும் தாவீதுமலைப்பெருமான் என்ற என் சகோதரி குமாரன் எனக்கு மிக உதவியாய் இருந்தார். நியூ யார்க்கு நகரத்திலிருந்த இந்திய மாணவர் விருப்பத்திற்கு இணங்கி "இந்தியாவின் தற்கால ஸ்திதி" என்ற பொருளின் பேரில் உபந்நியாசம் செய்தேன். இந்தியாவிற்கு அநுகூலமாக அமெரிக்கா தேசத்தினர் உதவி செய்வார்களென்று நீங்கள் நினைக்கிறீர்களா என்று கூட்டத்திலிருந்த ஒருவர் என்னைக் கேட்டார். இந்தியா சுதந்தரமடைய அமெரிக்கா அல்லது மற்ற இதர தேசத்தார் இங்கிலாந்தை எதிர்த்து இந்தியாவிற்கு உதவி செய்வார்கள் என்று இந்தியர்கள் எதிர்பார்க்கவில்லை, இந்திய சுதந்தர விஷயத்தில் இந்தியாவுக்கு அவர்கள் அநுதாபம் காட்டினுல் போதும் என்று நான் உத்தரவு சொன்னேன். இக்காலத்தில் ஒரு தேச விஷயங்கள் இன்னொரு தேசத்திற்கு வெகு சீக்கிரமாகப் பரவிவிடுகிறதாலும், பல தேசங்களுக்கும் ஒருவிதமான நெருங்கிய சம்பந்தங்கள் வியாபாரம், பிரயாணப் போக்குவரத்துகள், பத்திரிகைகள், புத்தகங்கள் முதலிய பலவித ஏதுக்களால் ஏற்பட்டிருப்பதாலும், ஒருதேசம் முன்னேற்றமடைய இதரதேசத்தினர் அநுதாபமும் அவசியமே என்று இன்னொருவர் கேட்ட கேள்விக்கும் இப்படி விடையளித்தேன். தற்காலத்தில் தங்கள் தங்கள் தேசங்கள் மாண்புடன் முன்சென்று மேன்மையடைய விரும்பும் இதரதேசத்தினரும் அவர்கள் அதிகாரிகளும் இவ்விதமாக தங்கள் தேசங்களின் பெருமை அருமையான காரியங்களை வெகு அக்கரையோடு பத்திரிகைகள், படங்கள், உபந்நியாசங்கள், புத்தகங்கள், முதலிய

மூலமாய் அந்நிய நாடுகளில் பிரசாரம் செய்கிறார்கள். ஆனால் நமது தேசத்தைப்பற்றியோ நமக்கு அவமானமான காரியங்கள்தான் வெகு நன்றாக உலகமெல்லாம் பிரசாரம் செய்யப்பட்டிருக்கின்றன.

இங்குள்ள வைத்திய ஆராய்ச்சிசாலை, வாசர் என்ற ஊரிலிருக்கும் பெண்கள் கல்லூரி முதலியன பார்த்தேன். பொதுஜன நன்மைக்கென்று தனவந்தரான அமெரிக்கர் பரோபகார சிந்தையுடன் கொடுத்த பணத்தால் இப்பேர்ப்பட்ட பல நிலையங்கள் அமெரிக்காவில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. நமது தேசத்திலுள்ள பணக்காரரும் இப்படி நமது மக்கள் கல்வி, சுகாதாரம் முதலிய காரியங்களில் முன்னேற்றமடைய தங்கள் பணத்தைச் செலவுசெய்து பரோபகாரசிந்தை காட்டுவார்களானால் நமது நாடு எத்தனை சீக்கிரம் மேன்மையடைந்துவிடும்! நான் வாசர் என்ற ஊரில் ஒரு இரவு நடந்துகொண்டிருக்கையில் வழியில்வந்த ஒரு இளைஞனிடத்தில் நான் போகவேண்டிய இடம் எந்தத் திசையிலிருந்ததென்று எனக்கு சந்தேகமிருந்ததால் அவனிடம் விசாரித்து சற்று பேசிவிட்டு வழியே சென்றேன். சற்றுநேரத்திற்குப் பின் இரண்டு போலீஸ் உத்தியோகஸ்தர்கள் மோட்டாரில் வெகு அவசரமாய் என் பின் வந்து நான் யார், எனது ஊர், தேசம், வேலை என்னவென்றும், வழியில் ஒரு பையனோடு ஏன் பேசினேனென்றும், என்னை விசாரிக்க ஆரம்பித்தார்கள். விவரம் அறியவும், நான் பையனிடம் பேசின இடத்திற்கருகே வசித்த வீட்டுக்காரர், யாரோ பையனை ஒருவன் திருடிக்



அமரிக்காவில் நியு யார்க்கு நகரத்தி லுள்ள
வானமளாவிய உயர்ந்த கட்டிடம்.
உலகத்தில் இவ்வளவு உயரமான
கட்டிடம் வேறெங்கும் கிடையாது.
(94-ம் பக்கம் பார்க்கவும்.)



நயகாரா அருவி. பிரமாண்டமான நீர்
வீழ்ச்சி. உலகத்தில் எழு அதிசய
காட்சிகளில் ஒன்று.
(விவரம் 99-ம் பக்கம் பார்க்கவும்.)

கொண்டு போகப்போகிருன் என்று இரண்டு மைல் தூரத்தி லிருந்த போலீஸ் காரியாலயத்திற்கு டெலிபோன் (மின்சார) வதந்தியனுப்பியதால், தாங்கள் அப்படி அவசரமாய் என்னைக் கைது செய்யவந்ததாகச் சொல்லிச் சிரித்துக்கொண்டு போய் விட்டார்கள்! அமெரிக்காவில் சில கொள்ளைக்காரர் இவ்விதம் ஆட்களை அல்லது பிள்ளைகளைத் திருடி, அவர்கள் சொந்தக் காரர் தங்களுக்கு வெகு திரவியம் கட்டினுல்தான் திரும்ப திருடப்பட்ட ஆட்களைக்கொடுப்போமென்று பயமுறுத்துவ துண்டு. அதினுல் இந்த பயம் ஏற்பட்டது.

வாசர் என்ற மேற்படி கல்லூரியில் நற்பழக்கங்களில் சிசுக் களை வளர்க்கும் முறைமை பெற்ரேருக்கு கற்றுக்கொடுக்க சிசு பயிற்சி நிபுணர்கள் நடத்தும் வகுப்புகளைப் பார்த்தேன். பல தாய்மார்களும் தங்கள் குழந்தைகளுடன் அங்கு வந் திருந்தார்கள். அமெரிக்காவில் விடுமுறை காலங்களை வீணுக் காமல் பலவித பிரயோஜனமான நல்ல காரியங்களை வேனிற் கால வகுப்புக்கள் வைத்து படித்துக்கொள்ளுகிருர்கள். நமது நாட்டில் பிள்ளைகளைப் பெற்றுபோட்டுவிடுகிரேம். ஆனுல் கிராமங்களில் அவர்கள் வளருகிறதைப் பார்த்தால் எவ்வளவு பரிதாபம். ஆடுமாடுகளின் குட்டிகள்போல் அழுக்கும், சிரங்கும், புண்களும் தேகத்தில் பரவ அவர்கள் படும் பாடும் விவரிக்கவேண்டுமோ? வயதில் பெரியவர்கள் பேசும் தூர்ப் பேச்சு, சண்டை கூச்சல்களையும் பிள்ளைகள் கேட்டு இத்தீய காரியங்களிலும் பழகிக்கொள்ளுகிருர்கள். முதியவர்கள் செய்கிறமாதிரி சிறியவர்களும்செய்ய விரும்புவது சிறுபிள்ளை கள் இயல்பல்லவோ?

மேல்நாடுகளில் வெயில் காலத்தில் நாட்கள் நீடித்திருக்குமாகையால் கடியாரத்தை ஒரு மணி நேரம் முந்தி வைத்துக் கொள்ளுகிருர்கள். இதனுல் ஜனங்கள் காலே ஒரு மணி நேரம் முந்தி எழுந்து நாட்களின் நீண்ட வெளிச்சமான மணி நேரங்களைப் பிரயோஜனப் படுத்திக்கொள்ள உதவியாயிருக்கிறது. ஜூலை மாதம் 15-ம் தேதி இரவு நான் நியூயார்க்கிலிருந்து புறப்பட்டு மறு நாள் விடிய அதற்கு வடக்கே இருக்கும் பாஸ்டன் நகரம் சேர்ந்தேன். இந்த நகரத்தில்தான் ஏறக்குறைய 150 வருஷங்களுக்கு முன் அமெரிக்கர் முதல் முதல் ஆங்கிலேயரை எதிர்த்துத் தங்கள் சுதந்தரப் போரைத் தொடங்கியது.

இங்கிலாந்து தேசத்தினர் அமெரிக்கர் கொடுக்கவேண்டுமென்று அவர்கள்மேல் ஏற்படுத்திய ஒரு வரியை அவர்கள் கொடுக்க மறுத்து, இங்கிலாந்தை எதிர்த்து, தங்கள் சுதந்தரமடைந்த யுத்தம், இந்த பாஸ்டன் நகரில்தான் முதலாவது தொடங்கியது. இதில் தாங்கள் வெற்றியடைந்ததை ஞாபகப் படுத்தும்படி பல ஞாபகார்த்த நிலேயங்களும், வசனங்களும் இந்நகரின் பல இடங்களிலுமுண்டு.

இங்குள்ள பெரிய வைத்தியசாலேயும் போய்ப்பார்த்தேன். இத்தேசத்தில் பெண்கள் தங்கள் பிரசவ முதலிய சமயங்களில்கூட ஆண்வைத்தியர்களே தங்களுக்கு வைத்திய உதவி செய்யவேண்டுமென்று விரும்புவதால் அமெரிக்க வைத்தியசாலேகளில் பெண் மாணவர்கள் இப்போது அதிகமாய்ப் படிக்கிறதில்லே என்று அறிந்தேன்.

ஜூலை மாதம் 17-ம் தேதி மாலை புறப்பட்டு மறுநாள் காலை பாஸ்டன் நகருக்கு மேற்கேயிருக்கும் நயகிரா அருவி சேர்ந்தேன். இந்த நீர்வீழ்ச்சி அமெரிக்க ஐக்கிய மாகாணங்களுக்கும் அவற்றிற்கு வடக்கேயிருக்கும் கானடா தேசத்திற்கும் மத்திய எல்லையிலிருக்கிறது. இது கண்ணுறும் காட்சி. அருவிக்குமேல் ஒரு பெரும் ஏரி. இதிலிருந்து தடதடவென்று வெகு தீவிரமாய் புரண்டு வீழ்ந்து ஓடிவரும் விசாலமான நதி. இந்தப் பெரும் நதி ஒரு பெரும் பள்ளத்தாக்கிற்குள் தடாரென்று குதித்து மூழ்கி விழுந்தாப் போல் காணும் இந்த நீர்வீழ்ச்சியின் வெகு விசாலத்தோற்றமும், அதின் பெரும் இரைச்சலும் மனதை பிரமிக்கத்தக்கது. அருவியில் மூன்று பிரிவுகளுண்டு. மின்சார வண்டியில் ஒரு குகையின்கீழ் இறங்கி அருவியின் ஒரு பிரிவின் அடிவாரம் பார்க்க ஒழுங்கு செய்திருக்கிறார்கள். நான் இவ்வழியாய் இறங்கினேன். பெரும் இரைச்சல் காதடைக்கச் செய்தது. பலமாய் அடிவாரத்தில் வீழ்ந்து அருவி பொங்கிப் புரண்டு அடித்த தூவானம் மூடுபனிபோல் கண்ணைக் குருடாக்கிற்று. இக்காட்சியைக் கண்ட நான் பரவசமடைந்து கடவுளை ஸ்தோத்தரித்து,

“சீர்மிகு வான்புவி தேவா ஸ்தோத்திரம்,
சிஷ்டிப்பு யாவையும் படைத்தாய் ஸ்தோத்திரம்,
ஏர்குணனே ஸ்தோத்திரம் உனது
அன்பினுக்கே ஸ்தோத்திரம் மாநேசா.”

என்று பாடினேன். இந்த அருவி உலகத்தின் ஏழு அதிசயக் காட்சிகளில் ஒன்று என்று சொல்லப்படுகிறது. நமது

இந்தியா தேசத்தின் வடபாகத்தில் ஆகிரா நகரத்தில் இருக்கும் தாஜ்மஹால் என்ற சலவைக்கல் சமாதி மண்டபம் இன்னொன்று. ஒருநாள் பகல்முழுவதும் இந்த இயற்கையின் பெரும் வெள்ளப்பிரவாகக் காட்சியின் மகத்துவத்தைப்பார்த்து விட்டு, மாலை புறப்பட்டு, அதே இரவு கானடா தேசத்திலிருக்கும் தோரான்றோ நகரம் சேர்ந்தேன். இங்கு என் நண்பர் பிரெட் ஹாஸ்லம் என்பவர் என்னை தமது சகோதரர், நண்பர் முதலியரோடு புகைவண்டி ஸ்தானத்தில் சந்தித்து தமது வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போனார். 1918-ம் வருஷம் நான் இங்கிலாந்திலிருந்தபோது இவரோடு முதல் பழகினேன். அச்சமயத்தில் இங்கிலாந்திற்கும் ஜெர்மனி தேசத்திற்கும் பெரும் யுத்தம் நடந்து கொண்டிருந்தது. இந்த என் நண்பர் அஹிம்ஸா விரதம்கொண்டவரானதால், யுத்த இராணுவத்தில் ஆங்கில வாலிபர் எல்லாரையும் சேரும்படி சர்க்கார் கட்டாயம் செய்த சட்டத்திற்கு இவர் இசையாமல் சிறை புகுந்தார். தற்காலத்தில் தோரான்றோ நகரில் ரேடியோ வென்ற ஒலிபரவும் கருவித் தொழிற்சாலை மேல்பார்க்கும் உத்தியோகத்திலிருக்கிறார். இதைஎனக்கு ஒருநாள் காட்டினார். ஒருமனுஷன் சப்தத்தையோ, அவன் பாடுவதையோ, அல்லது வாத்தியத்தொனிகளையோ, மின்சார அம்சங்களாகப்பிரித்து, திரும்பவும் பல தூர இடங்களில் மின்சாரக் கருவிகளால் இந்த சப்த அம்சங்களை ஒன்று சேர்த்து, பழைய பேச்சோ, பாட்டோ, வாத்தியத்தொனிகளோ எவையானாலும் முன் போலவே தொனிக்கச்செய்யும் இந்த சூட்சிய சாஸ்திர சாமர்த்தியம் வெகு ஆச்சரியமானதே. இந்த நகர் சமீபத்

தில் கடல்போல் விஸ்தீரணமான பெரிய ஏரி ஒன்றிருக்கிறது. இதில் நல்ல தண்ணீர். கப்பல்கள் இதில் போகின்றன. அவ்வளவு ஆழமுள்ளது. கானடாவில் இப்படிப் பல ஏரிகளும் பெரும் நதிகளுமிருக்கின்றன. கானடா நமது இந்தியா தேசத்தைப்பார்க்கிலும் அதிகப் பெரியது. எனினும் அதின் ஜனத்தொகையோ (35 கோடி ஜனங்களுள்ள) நமது இந்தியாவோடு ஒப்பிட்டால் முப்பத்தைந்தில் ஒரு பங்காகிய ஒரு கோடிதான். நான் இத்தேசத்தில் பல இடங்கள் போனபோது, அதின் நீர்வளம் நிலவளம் அதிகமாயிருந்தும், பயிர் செய்யாது விடப்பட்டிருந்த ஏராளமான ஏக்ரா நிலங்களைக் கவனித்தேன். இரவும் பகலும் ஓயாது பாடுபட்டுச் சாகுபடி செய்து, களர் நிலங்களைக்கூட விட்டுவிடாமல் பயிர்செய்யும் நமது தேச ஏழைக் கிராமத்திரளை நான் அப்போது நினைத்தேன். நமது கிராம ஜனங்களின் கையில் இவ்வித நீர்வளம் பொருந்திய நிலங்களிருந்தால் இப்படி பயிர் செய்யாது விட்டுவிடுவார்களா? இந்நகரிலுள்ள வைத்தியசாலையும் பார்த்தேன். அமெரிக்காவின் பூர்வீகக் குடிகளான "சிகப்பு இந்தியர்" என்று அழைக்கப்படுகிற ஜனங்களுக்கென்று ஒத்திவைக்கப்பட்டிருக்கும் ஆஸ்வீக்கன் என்ற ஊரும் போனேன். தற்காலத்தில் இவர்கள் தொகை நான் முன் விவரித்திருக்கிறபடிக் குன்றிப் போயிற்று. மீந்திருக்கிறவர்களும் வெள்ளை மனிதரோடு கலந்த இரத்தமுள்ளவர்களாய் அவர்கள்போலவே தோன்றுகிறார்கள். கொஞ்சம் குறைய இரண்டு வாரம் என் நண்பருடன் தங்கியிருந்தேன். அவரும் அவர் பெற்றோர் பந்துக்களும் எனக்குப் பாராட்டின அன்பும் உபசாரமும்

அதிகம். இதன் பின் கானடாவின் பிரதம நகரம் ஒட்டாவா, பெரும் வைத்திய கலாசாலை முதலியவுள்ளதும் லாரன்ஸ் என்ற பெரிய நதியோரமுள்ளதுமான மாண்டிரியால் நகரம், குயூபக் என்ற துறைமுகம் இவ்விடங்கள் எல்லாம் போய்த் தங்கிப்பார்த்தேன். கானடா தேசம் ஆங்கில அரசாட்சியைச் சேர்ந்து, குடியேற்று அந்தஸ்து அரசியல் முறைமை யடைந்தது. ஆகஸ்டு மாதம் 4-ம் தேதி குயூபக் துறைமுகத்தில் கப்பலேறி ஐரோப்பாவிற்குப் புறப்பட்டேன். மிகவும் பெரிய கப்பல். 42000 டன் உள்ளது. நீளம் 900 அடியிருக்கும். கப்பலின் அடிபாகத்திலிருக்கும் யந்திரசாலையைப் பார்த்தேன். தள்ளுகருவிகளைச் சுழலச்செய்யும் பிரமாண்டமான இரும்புத் தண்டுகள் சுழன்று வேலை செய்வதைப் பார்க்க ஆச்சரியமா யிருந்தது. சனிக்கிழமை மத்தியானம் புறப்பட்டு நாங்கள் ஞாயிறு இரவு மட்டும் லாரன்ஸ் நதியிலேயே பிரயாணம் செய்து பின்புதான் கிழக்கே அத்திலாந்திக் சமுத்திரம் சேர்ந்தோம்.

---

# ஐரோப்பா.

கீழ்த்திசையாய் ஐந்து நாள் அத்லாந்திக் சமுத்திர பிரயாணம் செய்தோம். கடல் அமைதியாயிருந்ததால் நல்ல சுகமான பிரயாணம். கப்பல் வெகு விரைவாய் ஓடினதால் 5 நாட்களுக்குள் கொஞ்சம் குறைய 3000 மையில் தாண்டி ஆகஸ்டு மாதம் 9-ம் தேதி முற்பகல் பிரஞ்சுதேசத் துறைமுகமாகிய செர்பர்கு ஊர் முதல் போய், பின்பு அதே மாலை 5 மணிக்கு இங்கிலாந்து தே ச த் தென்பாகத்திலிருக்கும் சௌதாம்டன் துறைமுகம் சேர்ந்தோம். இங்கு கப்பல் விட்டிறங்கி புகைவண்டியேறி வடகிழக்காய்ப் பிரயாணம்செய்து இரவு 8 மணிபோல் இங்கிலாந்துதேசப் பிரதம நகரும் உலக நகரங்களிலெல்லாம் பெரியதுமாகிய லண்டன் நகரம் சேர்ந்தேன். இங்கிலாந்து தேசத்திற்கு நான்போன ஐந்தாவது தடவை இது. அதினால் எனக்கு இத்தேசம் பழயதுதான். இங்கிலாந்து தேசம் மாத்திரம் எடுத்தால் நமது சென்னை ராஜதானிக்கு ஏறக்குறைய மூன்றிலொரு பங்குதான் விஸ்தீரணமிருக்கலாம். ஜனத்தொகை நமது ராஜதானிக்கு முக்கால் பங்குபோல். இங்கிலாந்தும் ஸ்காத்லாந்தும் சேர்ந்து ஒரு தீவு. அமெரிக்காவிலிருந்து புதிதாய் கப்பலில் என்னோடு வந்த சில பிரயாணிகள் புகைவண்டியில் என்னோடு இருந்தார்கள். அமெரிக்காவில் வானமளாவிய உயர்ந்த கட்டடங்களைப் பார்த்துப் புழங்கிய இவர்கள் வழியிலிருந்த இங்கிலாந்துதேச கட்ட

டங்களையும், ஊர்களையும் பார்த்து இகழ்ச்சியாய்ப் பேசினார்கள். லண்டனில் நான் முன்காலங்களில் நீடியகாலம் தங்கி பல நிலயங்கள், காட்சிசாலைகள், கடைவெளித் தெருவுகள், சட்டசபை கட்டடங்கள், ஆலயங்கள் முதலியன நன்ருகப் பார்த்துப் பழகியிருந்ததால் இந்தத் தடவை அதிகமாகச் சுற்றிப்பார்க்க எனக்குப் பிரியமில்லை. ஒரு வைத்தியசாலைமட்டும் போய்ப்பார்த்தேன். அமெரிக்காவில் பெரும் கல்லூரிகள், பெரும் யந்திரசாலைகள், வைத்தியசாலைகள் பார்த்துவந்த எனக்குங்கூட முன் நான் பெரிய தாய் நினைத்த இங்கிலாந்து தேசமும் அதின் காரியங்களும் அற்பமாகவே தோன்றும்படி நேரிட்டது. லண்டன் நகாத்தில் ரஸ்தாவில் ஏராளமான ஜனங்கள் போய்க்கொண்டிருப்பார்கள். மோட்டார்களும், பஸ்வண்டிகளும் பின்னும் மின்சார வண்டிகள் (டிராம்) முதலியனவும் ஓயாது ஓடிக்கொண்டிருக்கும். என்ருலும் நன்ருகப் பயிற்சியடைந்த போலீஸ் சேவகர்கள் அங்கங்கு நின்று வெகு ஒழுங்காகவும், வழிப்போக்கருக்கு யாதொரு சேதமில்லாமலும் எல்லாம் கிரமமாக நடந்தேறும்படி இவர்கள் தங்கள் கைச்சாடைகளினுல் அமைதியாக நடத்துவார்கள். வண்டிகளெல்லாம் கிரமப்படி தாங்கள் போகவேண்டிய ரஸ்தாவின் சரியான பக்கத்திலேயே போகும். பல ரஸ்தாக்கள் சந்திக்குமிடத்தில் வண்டிகள், ஜனக் கூட்டங்கள் அதிகரித்தால் போலீஸ் சேவகன் கை நீட்ட எல்லாம் அப்படியே நின்று பின்பு அவன் சைகையின் படி செல்லும். போலீஸ்காரர் நன்கு கற்றவர்கள். நல்ல சம்பளம் பெற்றவர்கள். வெகு மரியாதை உபசாரத்துடன்

வழிப்போக்கர் எவருடனும் நடந்துகொள்ளுகிறார்கள். நம் தேசப் போலீஸ்காரர் இவ்விதம் பாமரமக்களின் நண்பர்களும், சகாயரும், பாதுகாவலருமாகிவிட்டால் நமக்கு எத்துணை நன்மையாயிருக்கும்! எனினும் இங்கிலாந்து தேசம் மற்றும் பல இடங்களில் மோட்டார் முதலிய வண்டிகளால் ஜனங்களுக்கு விபத்துண்டாகி பலத்த காயங்களினால் சேதமடைகிறவர்களும் செத்துப்போகிறவர்களும் பலருண்டு. இது மேல் நாடுகளில் வழக்கமான ஒரு பெரிய ஆபத்தே.

லண்டன் நகரின் கீழ்ப்பாகங்களில் தாழ்ந்த வகுப்பினரான ஜனங்கள் வசிக்கிறார்கள். இவர்களில் பலர் தங்களுக்குக் கிடைக்கும் கூலிப் பணத்தை மதுபானத்தில் செலவிட்டு தரித்திரமடைந்தவர்கள். தங்களையும், தங்கள் பிள்ளைகளையும் சுத்தமாயும் வைத்துக்கொள்ளுகிறதில்லை. இவர்கள் முன்னேற்றத்திற்காக ஒரு அம்மாள் பரோபகாரசிந்தையாய் நல்ல ஒரு நிலயம் ஸ்தாபித்திருக்கிறார்கள். மகாத்துமா காந்தி லண்டன் சென்றபோது இந்த நிலயத்தில்தான் தங்கியிருந்தார். இதைப் பார்க்கப்போயிருந்தேன். அவர் தங்கியிருந்த சிறிய அறையிலே அவர் கையொப்பமிட்ட அவர் முகப்படம் தொங்குகிறது. இந்நிலயத்தில் ஏழை ஜனங்கள் வேலை பார்க்கப்போகும்போது அவர்கள் பிள்ளைகளை சுத்தம் செய்து பிள்ளைகளுக்கு நற்காரியங்களைக் கற்றுக்கொடுத்துக் கவனித்துக்கொள்ள சிசு சம்ரக்ஷணசாலை பெரியதொன்றிருக்கிறது. ஜனங்களை துர்ப்பழக்கங்களிலிருந்து மீட்டுச் சீர்ப்படுத்த பல நல்வேலைகளும், அவர்கள் ஆத்மீக நன்மைக்கான கூட்டங்

களும் நடத்துகிறார்கள். மகாத்துமா காந்தியவர்கள் இங்கிருந்தபோது இந்த ஏழை ஜனங்களின் வீடுகளுக்குப்போய் வீடுவீடாய்ச் சந்தித்தாராம்.

நான் லண்டனில் ஒரு பெரியாரைக் கண்டு பேசியபோது நமது தேசத்திலிருந்து "வட்டமேசை" மகா நாட்டுக்குப் போன இந்தியர்களில் மகாத்துமா காந்தி ஒருவர்தான் இங்கிலாந்து தேச சாதாரண ஜனங்களுடன் கலந்து பழகி அவர்கள் மனப்போக்கை அறிய பிரயாசப்பட்டாரென்று என்னிடம் சொன்னார். இந்திய பிரதிநிதிகளென்று தங்களைப் பாராட்டிக் கொண்ட மற்றவர்களோ வெகு டம்பமாக இங்கிலாந்தில் நாட்களை உல்லாசமாய்க் கழித்து, இங்கிலாந்திலுள்ள பிரபுக்கள் ஐசுவரியவான்கள் பின்னாலேதான் அலைந்து திரிந்து கொண்டிருந்தார்களென்றார். இந்தியாவின் உரிமைகளை இங்கிலாந்தின் பாமரமக்களறியச்செய்ய இவர்கள் பிரயாசப்படவில்லை. நமது தேசத்திலிருந்து "வட்டமேசை" மகாநாட்டிற்கு அங்கு சென்ற இவர்கள் நமது தேசத்தை ஆளும் ஆங்கில சர்க்காரால் தெரிந்தனுப்பப்பட்டவர்களேயன்றி நமது தேசத்தாரால் தெரிந்தெடுக்கப்பட்ட நமது பிரதிநிதிகளல்ல என்பதை ஆங்கில தேசத்திலுள்ள பாமரமக்கள் அறியார்கள்போலும். இங்கிலாந்தில் நமது தேசத்தைப் பற்றி சரியான அறிவு கிடையாது. தீண்டாமை, சமய ஜாதிக்கட்சி பிரிவினைகள் முதலிய நம்முடைய குறைவுகளை மாத்திரம் அங்கு நன்றாகப் பிரசாரம் செய்திருக்கிறார்கள். "காந்தி உங்கள் தேச ஜனங்களை இன்னும் கொந்திரவு செய்து பாதிக்கிறாரா?" என்று

ஒரு ஆங்கில கிராம விவசாயி என்னிடத்தில் விசாரித்தான். அவ்வளவு அறிவீனம்!

மகாத்துமா காந்தியவர்களைப் பற்றிப் பல தவருன எண்ணங்கள் ஆங்கில ஜனங்களுக்குள்ளிருக்கிறது. அவரைத் தொலைத்துவிட்டால், இந்தியாவில் எல்லா சுதந்திர வாஞ்சையும், அதற்காக நமது ஜனங்கள் எடுக்கும் பிரயாசங்களும், அரசியல் இயக்கங்களும் ஒழிந்துவிடும் என்று பல ஆங்கிலர் தவருய் நினைக்கிருர்கள். நமது தேசத்தில் பாமரமக்களுக்கு எழுத்து வாசிப்புத் தெரியாததினுலும், ஜாதி பேதங்கள், தீண்டாமை, இந்து மகம்மதிய விவகாரங்கள் கலகங்கள் இருப்பதினுலும் நாம் சுயராஜ்ஜிய உரிமைக்குத் தகுதியுள்ளவர்களல்லவென்று ஆங்கிலர் வாதாடுகிருர்கள். அமெரிக்கா முதலிய வெகு பெரிய தேசங்களையெல்லாம் பார்த்துவிட்டு இந்தத்தடவை ஒரு சிறிய தேசமாகிய இங்கிலாந்து சேர்ந்த எனக்கு ஒரு காரியம் மிகுந்தயோசனையை யுண்டாக்கிற்று. வட பாகத்தில் சிறியதாகிய ஸ்காத்லாந்து தேசத்தை விட்டுவிட்டு இங்கிலாந்தை மாத்திரம் நமது தேசத்தோடு ஒப்பிட்டால் அது வெகு சிறிய தேசம். இந்தியாவின் தெற்கு மூலையிலிருக்கிற நமது தமிழ் நாட்டின் விஸ்தீரணம்கூட விருக்காது. இந்தியாவின் 35 கோடி ஜனத்தொகையில் ஏறக்குறைய பன்னிரண்டில் ஒரு பங்குமட்டுமே இங்கிலாந்தின் ஜனத்தொகை. இப்படியிருக்க இந்தச் சிறிய தேசம் தன்னைவிட பன்முறை விஸ்தீரணமானதும் அதிக ஜனத்தொகையுள்ளதுமான நமது பெரிய இந்தியா தேசத்தை அடக்கியாண்டு அதிகாரம் செலுத்துவது

எப்படி? இதற்கு ஒரு பெரிய காரணம் அவர்களுக்குள்ளிருக்கும் ஒற்றுமையும், சுயகண்டனமுமே என்று சொல்லுவேன். நமது தாழ்வுக்கு பெரிய காரணம் நமது பிரிவினைகளே. தமிழ் நாட்டு கொஞ்சம் குறைய இரண்டு கோடிக்கதிகமான தமிழ் ஜனங்களாகிய நாமாவது நம்மட்டிலும் மாத்திரம் ஒற்றுமையுள்ளவர்களாய் இருந்தாலும்கூட நமது தேச சுதந்தரத்திற்கென்று நாம் பெரிய வேலைகள் செய்யமுடியும்.

சிறியோர் முதல் பெரியோர்வரை ஆங்கிலருக்குள் தங்கள் ஏகாதிபத்தியத்தைப் பற்றிய வைராக்கியம் பலமாய் குடிகொண்டிருக்கிறது. தங்கள் சொந்த சாமர்த்தியத்தைப் பற்றி வரம்பு கடந்த அபிப்பிராயமும் சுய நம்பிக்கையும் அவர்களுக்குண்டு.

இங்கிலாந்தின் கப்பல்படைகள் தங்கும் துறைமுகங்களில் பிரதானமான போர்ட்டுஸ்மவுத் என்ற ஊர் போயிருந்தேன். தங்கள் இராணுவ வெற்றிகளை பிரசாரம்செய்ய இங்கு ஏற்படுத்திய பல ஞாபகார்த்த யுத்த சிலாசாசனங்கள் கடல் கரையில் வரிசை வரிசையாய் இருக்கின்றன.

லண்டனுக்கு சற்று வடமேற்காயிருக்கும் பர்மிங்காம் நகர்போய், அங்குள்ள சாக்கோலேட் தின்பண்டங்கள், கோக்கோபான தூள், முதலியன செய்யும் பெரும் யந்திரத் தொழிற்சாலையில் நடக்கும் வேலையைச் சுற்றிப் பார்த்தேன். ஆப்பிரிக்காவிலிருந்து ஏராளமான கோக்கோ கொட்டைகளைக் கொண்டுவந்து காப்பிக் கொட்டையை நாம் வறுத்துத் தூள் செய்வதுபோல் யந்திரங்கள் மூலமாய் வறுத்துத் தூளாக்கி

பின்பு எண்ணையை வேருய்ப்பிரித்து, கோக்கோ தூள், பல வித இனிய தின்பண்டங்கள் முதலியன ஏராளமாய்ச் செய்கிருர்கள். இங்கு வேலைசெய்யும் கூலியாட்களுக்கும் தொழிற் சாலை முதலாளிகள் நல்ல நல்ல வீடுகள் கட்டிக்கொடுத்து, அவர்கள் நன்மைக்காக கூட்டுறவு சங்கங்கள், புத்தகசாலைகள், விடுதிகள், நீந்தி ஸ்நானம் செய்யப் பெரிய தண்ணீர்த் தொட்டிகள், விளையாட்டு ஸ்தலங்கள், ஆலயம் முதலிய சகல சௌகரியங்களும் தொழிற்சாலை சமீபமாய் ஏற்படுத்தி யிருக்கிருர்கள். மின்சார விளக்குகள், நல்ல விசால வீதிகள் இப்படி சகல ஒழுங்குகளுமுண்டு. இத்தொழிலாளிகள் குடியிருக்கும் இடம் ஒரு சிறிய நகரம்போலவே தோன்றுகிறது. இதன்பின் நிலக்கரிக் கேணிகள்மிகுந்த நியூக்காசல் நகர்போய் மாணவர்கள் கூட்டங்களில் பேசினேன்.

லண்டனுக்கு வடமேற்காயிருக்கும் மான்செஸ்டர் நகரம் போயிருந்தேன். இங்குள்ள ஒரு பெரிய வைத்திய சாலையையும், இரணவைத்தியம் ஆயுத வேலை முதலிய சிகிச்சைகளினுல் கூட ஆற்றி குணமாக்க முடியாத அரிபிளவை புண்களையாற்றி குணமாக்கும் ரேடியம் என்ற விலை உயர்ந்த லோகவஸ்துவைத்துப் பரிகாரம் செய்யும் பெரும் வைத்திய சாலையும் போய்ப்பார்த்தேன். ரேடியம் என்ற லோக வஸ்துவிலிருந்து சுயமாக ஓர்வித ஒளிக் கதிர்கள் பக்கமெல்லாம் வீசுகின்றன. இந்த ரேடியத்தை அரிபிளவை மத்தியில் புதைத்து வைத்தால் இந்த ஒளிக் கதிர்கள் புண்களை ஆற்றுகின்றன. இந்த மான்செஸ்டர் நகரிலிருக்கும் லாங்காஷயர் மாகாணத்தி

விருந்துதான் நமது இந்தியாவிலிருந்து அங்கு போகும் பஞ்சினுல் ஆங்கில ஆலைகளில் நெசவு செய்யப்பட்ட ஏராளமான துணிச் சாமான்கள் நமது தேசத்திற்கு வருகின்றன. யந்திர ஆலைகளில் துரிதமாய்ச் செய்யப் பட்ட இந்தத் துணி, நமது இந்தியாவில் கைகளால் நூற்கப் படும் துணிகளைவிட சகாயமாய் இங்கு விற்கப்படுகிறபடியால், நமது நெசவுக்காரரின் பிழைப்புக்கெட்டு, அவர்கள் வருந்தவும், தேசம் நஷ்டமடையவும் காரணமாகிறது. மற்ற அந்நிய தேசங் களிலிருந்து நமது தேசத்திற்கு இறக்குமதியாகிற சாமான் களுக்கு விதிக்கப்பட்டிருக்கிற இறக்குமதி வரியைவிட ஆங் கில தேசத்திலிருந்து நமக்கு வரும் சாமான்களுக்கு குறைந்த வரியே. இப்படி அவர்களுக்கு மாத்திரம் வரி குறைத்திருப் பது அவர்கள் சாமான்கள் மற்றவர்கள் சாமான்களைப் பார்க்கி லும் குறைந்த விலைக்கு அவர்கள் இங்கு விற்கவும், அதினுல் மிகவும் அநுகூலம் அடையவும் ஆங்கில வியாபாரிகளுக்கு உதவியாயிருக்கிறது. யந்திர ஆலைத் தொழில்களே இங்கி லாந்தில் அதிகம். மான்செஸ்டரில் புதிதாய், தயாரித் திருக்கும் ஒரு பெரிய புத்தகசாலையும் பார்த்தேன். எவரும் இங்குபோய் பத்திரிகைகளோ, மற்றும் பிரயோஜனமான என்னென்ன புத்தகங்களோ முதலியன இங்கு இலவசமாய் படிக்கலாம்.

இங்கிலாந்துக்கு வடக்கே இருக்கும் ஸ்காத்லாந்து தேசப் பிரதம நகரமாகிய எடின்பரோ போனேன். இந்த நகரத்தில்தான் நான் வைத்திய மாணவனுகவிருந்து 1911-ம்

வருஷம் டாக்டர் பட்டம் பெற்றேன். அதினல் ஸ்காத்லாந்து தேசம் எனக்கு ஒருவகையாக அருமையான பழைய பூமி. இங்கு எனக்கு அன்புகாட்டிய ஒரு குடும்பத்தோடு தங்கி வைத்தியசாலைக்குபோய் அங்கு இரண வைத்தியர்கள் செய்யும் பல ஆயுத வேலைகளும் பார்த்தேன். எடின்பரோவில் இப்போதுகூட நமது தேசத்திலிருந்து போயிருக்கும் பல வாலிபர்கள் வைத்தியம் படிக்கிறார்கள். இவர்கள் கூட்டத்திலும், பின்னும் பல ஸ்காத்லாந்து தேச மாணவர்கள் கூட்டங்களிலும் உபந்நியாசம் செய்தேன். எடின்பரோ சிறிய குன்றுகள் சூழ்ந்த நல்ல இயற்கையமைப்புள்ள நகரம். ஸ்காத்லாந்து தேசம் பண்டையகாலங்களில் தன் சுதேச ராஜாக்கள் கீழிருந்தது. ஆனல் அநேக வருஷங்களுக்குமுன் இங்கிலாந்தோடு சேர்க்கப்பட்டுவிட்டது. பழைய ராஜாக்களின் அரண்மனை, கோட்டைகளை இப்போதும் பார்க்கலாம். எடின்பரோவிற்கு மேற்கேயிருக்கும் கிளாஸ்கோ நகரம் போனேன். இங்கு கடலோரத்தில் கப்பல்கள் செய்கிறார்கள். பிரம்மாண்டமான ஒரு கப்பல் செய்வதைப் போய்ப்பார்த்தேன். இரும்புத் தகடுகள் செய்யும் தொழிற்சாலையும் போய்ப் பார்த்தேன். விவசாயம் யந்திரத்தொழில் முதலிய கல்லூரிகள் பலவிருக்கின்றன. இங்கு மாணவர்கள் கூட்டங்களில் என்னைக் கேட்டுக்கொண்டபடி உபந்நியாசம் செய்தேன். ஒருவிதச் சிகப்புச் சீனிக் கிழங்கிலிருந்து வெள்ளைச் சர்க்கரை யந்திரங்களால் செய்யும் ஆலைகளுள்ள கிரீனக்குத் துறைமுகமும் போயிருந்தேன். ஸ்காத்லாந்தில் அழகிய இயற்கை மாண்பு பொருந்திய பல மலைக் காட்சிகள், ஏரிகள்,

நதிகள் பல உண்டு. சிறிய தேசம்தான். முழு ஜனத் தொகையும் 50 லக்ஷத்திற்குக்கூட குறைந்ததுதான்.

கிளாஸ்கோவில் உயர்தர ஆரம்ப பாடசாலை ஒன்று சுற்றிப் பார்த்து தலைமை ஆசிரியர் மூலமாய் பல காரியங்கள் அறிந்தேன். ஆங்கில தேசத்தில் இளைஞருக்குக் கட்டாயப் படிப்பு. சம்பளம் கிடையாது. பிள்ளைகளுக்கு புஸ்தகங்கள், காகிதம், குறிப்பு புஸ்தகங்கள் முதலியன இலவசமாய் அதிகாரி களே கொடுக்கிறார்கள். ஏழைப் பிள்ளைகளுக்கு இலவசமாகப் பள்ளிக்கூடத்தில் மதியம் ஆகாரம் கொடுக்கிறார்கள். ஆங்கில தேச முழுவதிலும் கல்விக்காக வருஷம் கொஞ்சம் குறைய 73 கோடி ரூபாய் (54,103,954 பவுன்) செலவு. ஆங்கில தேசத்தாரைவிட கொஞ்சங்குறைய ஒன்பது மடங்கு அதிக ஜனத்தொகையுள்ள இந்தியா முழுவதற்கும் கல்விக் காக செலவு 11 கோடி தான்! ஆரம்ப பாடசாலைகளுக்கு மாத்திரம் 43 கோடி ரூபாய்க்கு மேல் ஆங்கில தேசத்தில் செலவழிக்கிறார்கள். ஆங்கில தேசத்தில் தங்கள் சொந்த ஜனங்கள் கல்விக்காக இத்துணை பணம் செலவழித்து அக் கரையோடு இலவசமாக கட்டாயப் படிப்பு முதலிய ஒழுங்கு செய்திருக்கும் இதே ஆங்கில அதிகாரிகள் தங்கள் அதிகாரத் துக்கு கீழ்படித்தியிருக்கும் நமது இந்தியாவின் பாமரமக்கள் கல்வியைப் பற்றி மாத்திரம் இவ்வளவு அசட்டையாயிருப்பது கண்டிக்கப்படத் தக்கதே.

நான் ஆங்கில தேசத்தில் பிரயாணம் செய்கையில் ஜனங் களுக்கு சுத்தமான தண்ணீர் சவாக்ஷணை செய்ய ஆற்றிற்கு அணை போட்டோ, மலைகள் மத்தியிலிருக்கும் ஏரிகளைப் பாது



லண்டன் நகரப் போலீஸ்காரன் ரஸ்தாவில்
வண்டிகளை ஒழுங்காய்ப் போகச்செய்வது.



எனது உடன் தொண்டர் டாக்டர் பேட்டனின் அண்ணன்
குடும்பத்தார். ஸ்காத்லாந்து தேசத்தில் ஒரு நதியோரத்தில்
வனபோஜனம் செய்யும்போது எடுத்தது.



எனது பாலிய நண்பர்களான ஜெர்மன் பிள்ளைகள்.
ஷோளிங்கன் நகரத்தில் எடுத்த படம்.
(115-ம் பக்கம் பார்க்கவும்.)



ஜெர்மனி தேசப் பிரதம நகரமாகிய
பெர்லின் நகர சட்டசபைக் கட்டிடம்.

காத்தோ, இப்படி பலவிதமாய் ஒழுங்கு செய்திருக்கும் பல குளங்கள், ஏரிகளைப் பார்த்தேன். இத்தேச பாமரமக்கள் எல்லாருக்கும் சுத்தமான ஜலம் குழாய்கள் மூலமாய் வீடுகளுக்குள் வர நல்ல ஒழுங்கு செய்திருக்கிறார்கள். இதனால் தான் அசுத்தமான தண்ணீரால் பரவும் விஷபேதி விஷக் காய்ச்சல் முதலிய தொத்து வியாதிகள் மேல் நாடுகளில் கிடையாது. நமது தேசத்திலோ 500 பேரில் ஒருவருக்குத் தான் சுத்த ஜலம் கிடைக்க ஒழுங்கிருக்கிறது. இதனால் தொத்து வியாதிகளால் ஏராளமான ஜனங்கள் மாண்டு போகிறார்கள்.

எடின்பரோ நகரத்திற்குச் சற்று வடமேற்காய், போர்த்து நதி சமீபத்திலிருக்கும் ஆலோவா என்ற ஊர் போயிருந்தேன். வெகு விசாலமான இந்த நதி மேல் பெரிய இரும்புப் பாலமிருக்கிறது. இந்தத் திருப்பத்தூர் ஆசிரமத்தில் என்னுடன் தோழாராகக் கிராம ஜனங்களுக்குத் தொண்டு செய்யும் டாக்டர் பேற்றன் சொந்த ஊராகிய ஆலோவா இது தான். அவர் இரு சகோதரர்களும் குடும்பத்தாரும் என்னை அன்பாய் வரவேற்று உபசரித்தார்கள். வெகு சந்தோஷமாய் இவர்களுடன் சில நாட்கள் தங்கியிருந்தேன். இவர்களுக்கு கம்பளி நூல் நூற்கும் ஒரு பெரிய யந்திர ஆலையிருக்கிறது. ஆஸ்திரேலியா தேசத்திலிருந்து ஏராளமான ஆட்டு ரோமம் தருவித்து அதிலிருந்து கம்பளி நூல் இவர்கள் ஆலையில் நூற்கப்படுகிறது. இந்த ஊரில் காகிதம் செய்யும் ஆலையுமிருக்கிறது. இது சிறிய ஊர்தான். நமது திருப்பத்தூரோடு ஒப்பிட்டால்

ஜனத்தொகை ஏறக்குறைய பாதிதானிருக்கும். எனினும் யந்திரத் தொழிலினால் பல ஜனங்கள் வாழ்ந்து பிழைக்க ஏதுவிருக்கிறது. இந்தக் கம்பிளி நூல் தொழிற்சாலையில் வேலைசெய்யும் தொழிலாளிகள் நன்மையைக் கருதி எனது நண்பரின் சகோதரர்கள் தொழிலாளிகளுக்கு நல்ல சம்பளம் கொடுப்பதுமல்லாமல், பல சௌகரியங்களும் ஏற்படுத்தி யிருக்கிறதால் அவர்கள் மிகத் திருப்தியாய் வேலை செய்கிறார் கள். இந்த ஊர் ஆலயமொன்றில் அகிலலோக தேசத்தினரும் விரோதமில்லாமல் ஐக்கியமாயிருப்பதற்கு அநுகூலமான காரியங்களையும் தடைகளையும் குறித்து ஒரு ஞாயிறு பிரசங்கம் செய்தேன்.

திரும்ப எடின்பரோ வந்து, செப்டம்பர் 15-ம் தேதி முற் பகல் புறப்பட்டு, அன்று இரவு இங்கிலாந்தின் தென் கீழ் கடற்கரையோரமிருக்கும் ஹார்விச்சுத் துறைமுகத்தில் கப்ப லேறி, ஒரு இரவு பிரயாணம் செய்தபின், விடிய, கிழக்கேயிருக் கும் ஹாலந்து தேசத் துறைமுகம் ஊக் ஆப் ஹாலந்து சேர்ந்து, இறங்கிப் புகைவண்டி யேறினேன். இத் தேசத்தினருக்கு டச்சுக்காரர் என்று பெயர். அநேகமாக இந்நாட்டு பூமி கடல் மட்டம்போல் தாழ்ந்தது. இத் தேசத்தில் காற்றூடி யந்திரங் கள் பல பார்க்கலாம். நான் இப்புத்தகத்தின் ஆரம்பத்தில் சொன்னபடி சாவகம் என்ற கீழ் நாட்டுத் தீவை ஆளுகிற வர்கள் இந்த நாட்டு வெள்ளை மனிதர்தான்.

மறுநாள் மத்தியானம் இதற்கு அடுத்து கிழக்கேயிருக் கும் ஜெர்மெனி தேசத்திலுள்ள ஸோலிங்கன் என்ற ஊர்

சேர்ந்தேன். எனக்கு இப்போது 23 வருஷங்களுக்குமேலாய் சிநேகிதரான ரீபன்திராஸ்டு என்னும் ஜெர்மன் தேச நண்பர் வீடு சேர்ந்தேன். அவரும், அவர் மனைவியும், இரண்டு பிள்ளைகளும் அன்பு பாராட்டி என்னை வரவேற்றுக் கொண்டார்கள். இவர் வேலைசெய்யும் கத்திகள், கத்திரிக்கோல் செய்யும் தொழிற்சாலைக்கு ஒருநாள் போய்ச் சுற்றிப்பார்த்தேன். மின்சாரத்தால் ஓட்டப்படும் யந்திரங்களினால் இரும்புத் துண்டுகளை வேண்டிய கத்தியளவாக வெட்டி, மடமடவென்று சுழலும் கல்சக்கரங்களினால் அவற்றைக் கூர்மையாக்கி, மின்சாரசக்தியினால் இக்கத்திகளுக்கு உருகின நிக்கல் என்ற லோக வஸ்து வைப்பூசி வெண்மையாக்கி, அவற்றின்மேல் பெயர்களும் போட்டுவிடுகிறார்கள். பின்பு ஜெர்மனிதேசத் தென்பாகத்திலிருக்கும் பவேரியா மாகாணத்திலுள்ள டில்லிங்கன் ஊரில் டாக்டர் உத்தியோகம் செய்யும் ஹாய்பெல்டர் நண்பரோடு ஒரு வாரம்போல் தங்கியிருந்தேன். இவர் 1910-ம் வருஷம் எடின்பரோ நகரம் வந்திருந்தபோது அச்சமயம் மாணவனாக இருந்த நான் இவருடன் முதல் பழகினேன். இவரைப்பார்க்க நான் இதன்முன் இரண்டுதடவை ஜெர்மனி தேசம் போயிருக்கிறேன். இவரும் இவர் மனைவி பிள்ளைகளும் எனக்கு மிகுந்த அன்பு பாராட்டி உபசரித்தார்கள். இவர் வேலை செய்யும் வைத்தியசாலைக்குத் தினம்போய் பல ஆயுதவேலைகள் பார்த்தேன். மேல் நாடுகளில் பல பெரிய வைத்தியசாலைகளில் தொழிற்செய்யும் டாக்டர்கள், சம்பளம் வாங்காமல், இலவசமாய் பொதுஜன ஏழைகள் நன்மைக்கென்று தொண்டு செய்கிறார்கள். இவர்கள் சொந்த ஆதரவிற்கு பணமுள்ள

வியாதியஸ்தர்கள் தங்கள் வீட்டிற்கு இவர்களை அழைத்துப் பரிகாரம் செய்யக் கேட்கும்போது, அல்லது இப்பேர்ப்பட்ட பணக்காரருக்காக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் பிரத்தியேகமான வைத்திய நிலயங்களிற்கு வருவோர்களிடத்தில், பணம் வாங்கிக்கொள்ளுகிறார்கள். பெரிய வைத்திய நிலயங்களில் வேலை செய்வதையே ஒரு உயர்ந்த அந்தஸ்தான பதவியாக மேல் நாட்டில் சிறந்த வைத்திய நிபுணர்கள் பாராட்டுகிறார்கள். மேல்நாடுகளில் நன்கு சாஸ்திர பயிற்சியடைந்த வைத்தியர்கள் ஏராளமாயிருப்பதால் நோயாளிகளுக்கு ஏதும் குறைவில்லாமல் வேண்டிய பரிகாரங்கள் செய்யப்பட்டு வருகின்றன. நான் ஜெர்மனிக்குத் தெற்கேயிருக்கும் ஆஸ்திரியா தேசப் பிரதம நகராகிய வீயன்ன நகரம்போய் இரண்டு வாரம் அங்குள்ள கீர்த்திபெற்ற வைத்தியசாலைகளில் நடந்தேறும் பல சிறந்த ஆயுத வேலைகள் பார்த்தேன். இந்த ஒரு நகரத்தில் மாத்திரம் 20,000 வியாதியஸ்தர்களுக்குப் போதுமான கட்டில்களுள்ள வைத்தியசாலைகளிருக்கின்றன. இந்த வீயன்ன நகரத்தின் ஜனத்தொகை ஏறக்குறைய 17 லக்ஷம் மாத்திரம்தான். தமிழ் ஜனங்கள் 200 லக்ஷத்திற்கு மேலிருக்கிறார்கள். இந்த வீயன்ன நகர ஜனங்களோடு ஒப்பிட்டால் இதில் நூற்றில் ஒரு பங்குகூட வைத்தியசாலை உதவிகள் நமது தமிழ் ஜனங்களுக்குக் கிடையாது என்பது யாவரும் அறிந்து கொள்ளவேண்டிய விஷயம். நமது ஸ்திதி எத்துணை பரிதாபம்! மேல்நாடுகளில் நன்கு சாஸ்திரம் பயின்ற வைத்தியர்கள் ஏராளம். வைத்தியசாலை முதலிய உதவியில்லாத மனுஷர்கள் மேல்நாடுகளில் இல்லையென்று திட்டமாய்ச்

சொல்லக்கூடும். தரித்திரம், பட்டினி, கொள்ளைநோய்களால் வருந்தும் நமது கிராமத் திரள்களோ அறிவீனத்தாலும், நோய்களாலும் ஏராளமாக மாண்டு போகிருர்கள். பாரதியார் பாடியபடி,

" பஞ்சமும் நோயும் நின் மெய் அடியார்க்கோ?
பாரினின் மேன்மைகள் வேறினி யார்க்கோ? "

வீயன்னுவில் பயிற்சிக்காகப் போயிருக்கும் நமது தேச பல இந்திய டாக்டர்களேயும் சந்தித்தேன். ஜெர்மனிபோல் இங்கும் ஜெர்மன் பாஷைதான் தேச பாஷை. சரிவரக் கவனித்தால் ஜெர்மன் தேசத்தினரும் ஆஸ்திரியா தேசத்தினரும் ஒரே பாஷை பேசுகிற ஓர் வம்சத்தினர் தான். ஐரோப்பா முழுவதும் பார்த்தால் அதின் அளவு நமது இந்தியா தேசம் போல்தான் சற்று ஏறக்குறையவிருக்கும். ஆனுல் பல பாஷை பேசுகிருர்கள். ஐரோப்பாவில் ஒன்றிற்கு ஒன்று வித்தியாசமான கொஞ்சங்குறைய 20 பிரதான பாஷைகளிருக்கலாம். சில பாஷைகள் பேசுகிறவர்கள் 20 அல்லது 30 லக்ஷம்தானிருக்கலாம். ஆனுல் ஜெர்மன் பாஷை பேசுகிறவர்கள் 650 லக்ஷம் போலிருக்கிருர்கள். ஐரோப்பியருக்குள் தேசத்திற்குத் தேசம் பொருமை, ஒருவரைப்பற்றி ஒருவருக்கு பயங்கள், சந்தேகங்கள் பலமாயிருக்கின்றன. இதினுல் தான் பல ஐரோப்பிய தேசத்தார் இராணுவங்களைத் திரட்டுவதும், யுத்தங்களுக்கு ஆயத்தஞ் செய்வதுமான நிலையில் எப்போதுமிருக்கிருர்கள். ஜெர்மனி தேசப் பிரதம நகராகிய பெர்ளின் நகரம் போயிருந்தேன். ஜெர்மனி தேசத்தின் தற்கால சர்வாதிகாரியாகிய

ஹிட்லர் என்பவரின் கட்சியார் பெரும் பட்டாளம்போல் மேள வாத்தியங்களுடன் நீண்ட பவனியாக செல்லும் காட்சி இங்கு பார்த்தேன். சில வருஷங்களுக்கு முன் நடந்த பயங்கர ஐரோப்பிய யுத்தத்தில் ஜெர்மனி தோல்வியடைந்ததால் வெகு தாழ்ந்த நிலையிலிருந்தது. ஜெர்மன் ஜனங்களுக்குள் கட்சிகளும், பிரிவினைகளும், கலகங்களும், தேசத்தை பாழாக்கிக் கொண்டிருந்தன. ஆனால் ஹிட்லர் என்ற ஒரு அரசியல் தலைவர் எழும்பி, ஜெர்மன் தேசத்தினரை கண்டித்து ஒற்றுமைப்படுத்தி, கட்சிகளையும் பலாத்காரமாய் ஒழித்து, ஜெர்மன் தேசத்தை திரும்பவும் பலமாக்கிவிட்டார். இதனால் மற்ற ஐரோப்பியர் ஜனத்தொகை பெருத்த ஜெர்மன் தேசத்தினருக்குப் பயப்பட ஆரம்பித்து விட்டார்கள்.

ஹிட்லர் ஆரம்பத்தில் வர்ணம் பூசும் வேலை செய்யும் ஒரு சாதாரண தொழிலாள்தான். தனது தேசமாகிய ஜெர்மனி தேசத்தினரை ஒற்றுமைப் படுத்தி உயர்ந்த ஸ்திதிக்குக்கொண்டுவர வேண்டுமென்ற வைராக்கியம் இவரை பிடித்தது. சில தோழர்களைத் திரட்டி, புரட்சி உண்டு பண்ணி, "நாசி" என்ற அரசியல் கட்சியை ஸ்தாபித்து அரசியல் சர்வாதிகாரியாகிவிட்டார். "நாசி" கட்சியென்றால் தேசிய பொது ஜன சமுதாய அரசியல் கட்சி என்று அர்த்தமாகும். ஜெர்மன் தேசத்தினரை ஒற்றுமைப் படுத்தி, பல காரியங்களை சரிவர ஒழுங்கு செய்து, சுயமரியாதையுண்டாகச் செய்துவிட்டார். பல விஷயங்களில் ஜெர்மன் ஜனங்கள் முன்னேற்றமடைந்திருக்கிறார்கள். ஆனால் வட ஐரோப்பாவிலுள்ள வெள்ளை

மனிதர் வம்சம்தான் சுத்தமயமான "ஆரிய வம்சம்" என்று தவறுன போதகம் செய்து, இதர தேசத்தினரிலிருந்து தம் ஜனங்களை வரம்பு கடந்த விதமாய் உயர்த்திப் பிரித்துப் பாராட்டுகிறுர். இவரைக் குறித்து மற்ற ஐரோப்பிய தேசத்தினருக்குள் வெகு வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது.

ஜெர்மனியில் ஆண் பெண் எல்லா இளைஞரும் 6 வயது முதல் 14 வயது மட்டும் கட்டாயம் பள்ளிக்கூடம் போய்ப் படிக்கவேண்டும். ஆரம்பப் பாடசாலைகளில் சிறுவர்கள் இலவசமாய்ப் படிக்கிறுர்கள். 14 வயதிற்குப் பின் படிக்க அவரவர் பின் காலத்தில் என்ன தொழில்செய்ய நோக்கமோ அதற்கேற்க மூன்று விதமான உயர்தரப் பாடசாலைகளுண்டு. (1) சர்வ கலாசாலை சென்று, வித்வான்கள், சாஸ்திரிகள், வைத்தியர்கள், போதகர்கள், வக்கீல்கள் முதலிய உத்தியோகக் கல்வி பின்காலத்தில் கற்க விரும்புவோருக்கு, இங்கு மற்ற சாஸ்திரங்கள் கற்றுக் கொடுப்பதோடு கிரந்த பாஷை இலக்கியம் விசேஷமாய் கற்றுக் கொடுக்கிறுர்கள். (2) யந்திரம், சிற்பம் முதலிய தொழில் பின்காலத்தில் கற்கும் நோக்கமுள்ளவர்கள் கல்விச்சாலை. இங்கு விஞ்ஞான சாஸ்திரம் விசேஷம். (3) பின்காலத்தில் வியாபாரம் செய்ய விரும்புவர்கள் படிக்குமிடம். இங்கு தற்காலஅந்நிய பாஷைகள் விசேஷமாய் கற்றுக்கொடுக்கிறுர்கள். சகல உயர் கல்வியும் தாய்ப் பாஷையாகிய ஜெர்மன் பாஷையில்தான்.

நான் ஜெர்மனி தேசத்திலிருந்தபோது உயர்தர ஆண் பாடசாலையிலும் பெண் பாடசாலையிலும், ஒரு கிறிஸ்தவ

சந்நியாச மடத்திலும் இந்தியாவைப்பற்றியும், மகாத்துமா காந்தியைப்பற்றியும் பேசும்படி அவர்கள் விரும்பிக் கேட்டுக் கொண்டபடியால் இந்நிலயங்களில் இவ்விஷயங்களைக் குறித்து உபந்நியாசங்கள் செய்தேன். வெகு அக்கரையுடன் கவனித்துக் கேள்விகளும் கேட்டு அறிந்துகொண்டார்கள். தமிழ்ப் பாட்டுகள் பாடும்படி நெருக்கிக் கேட்டுக்கொண்டதால் "வாழிய செந்தமிழ்," "என்று தணியும் இந்த சுதந்திரதாகம்," என்ற பாரதியார் பாட்டுகளைப் பாடினேன். ஜெர்மனியிலும் ஜப்பான் தேசம்போலவே பள்ளிக்கூடப் பிள்ளைகளை பொது அறிவு விர்த்திக்காக உபாத்திமார் பல ஊர்களுக்கும் பிரயாணமாகக் கூட்டிக்கொண்டுபோய்க் காட்டுகிறார்கள்.

ஜெர்மனி தேசத்திற்குச் சற்று கிழக்கேயிருக்கும் செக்கோஸ்லோவோக்கியா தேசப் பிரதம நகரம் பிராகு போயிருந்தேன். பிராகு நகரம் மோல்தாவென்ற நதியோரம். முன் காலத்தில் இத்தேசம் ஆஸ்திரியா தேச ஏகாதிபத்தியத்திற்குக் கீழ் இருந்தது. ஆனால் சில வருஷங்களுக்குமுன் நடந்த ஐரோப்பிய யுத்தத்திற்குப் பின் இத்தேசம் விடுதலையடைந்து சுதந்திர சுயாதீனமடைந்து விட்டது. ஆஸ்திரியா ஏகாதிபத்தியத்தார் இந்தத் தேசத்தினரை யாண்டபோது தங்கள் சொந்த ஜெர்மன் பாஷையை அரசியல் கல்வி முதலியவற்றிற்குப் பிரதான பாஷையாக மேன்மைப்படுத்தி, செக்கோஸ்லோவோக்கியருடைய "செக்" என்ற பாஷையை அசட்டை செய்திருந்தார்கள். இதினால் இவர்களின் தாய் பாஷை இகழப்பட்டு பாமரமக்கள் கீழாக்கப்பட நேரிட்டது. சுதந்திர

மடைந்தவுடனே "செக்" பாஷை திரும்பவும் தனக்குரிய மேன்மையடைந்து இப்போது எல்லா உயர் கல்வியும், அரசியல் காரியங்களும் இதிலேயே நடந்தேறுகின்றன. நமது தமிழ் பாஷை என்று இப்படி தன் உரிமையடையும்! இங்கிருக்கும் பிரேமிஸல்பிட்டர் என்னும் எனது செக்தேசீய நண்பர் என்னை அன்பாய் வரவேற்று உபசரித்தார். இவர் அஹிம்ஸா விரதம்கொண்டவர். இதினிமித்தம் சிறை புகுந்தவர். ஐரோப்பாவின் பல தேசங்களில் கட்டாயமாக இராணுவத்தில் எல்லாரும் முறைப்படி சேர்ந்து, பயிற்சியடைந்து சிலகாலம் வேலைசெய்யவேண்டும். தங்கள் தங்கள் தேசத்திலுள்ள ஆண்கள் எல்லாம் தங்கள் தேசம் அந்நியர் வசம் ஆகாதபடி யுத்தம் செய்து தேசத்தை பாதுகாக்க யுத்தப் பயிற்சி அடைந்தவர்களாய் இருக்கவேண்டும் என்பது பல ஐரோப்பா தேசத்தினரின் ஏற்பாடு. இதனால் அஹிம்சா விரதம் எடுத்தவர்கள் சிறைவாசம் செய்ய நேரிடுகிறதுண்டு.

ஏழைத் தொழிலாளிகளின் பிள்ளைகளுக்கென்று பிட்டர் நண்பர் ஒரு நிலயம் ஸ்தாபித்திருக்கிறார். குறிக்கப்பட்ட நாட்களில் தங்கள் பள்ளிக்கூடம்போய்த் திரும்பியபின் பிள்ளைகள் இங்கு வந்து பொது அறிவு விர்த்தியாக பல காரியங்களைப் படிப்பதும், பாட்டுகள் கற்பதும், பலவித விளையாட்டுகள் விளையாடுவதுமாக இப்படி பிரயோஜனமாக நேரத்தைச் செலவழிக்கிறார்கள். இச்சிறுவர்கள் பாஷை எனக்குத் தெரியாவிட்டாலும், இவர்கள் என்னோடு அன்புபாராட்டி, இலகுவாய்ப் பழகிக்கொண்டார்கள். நானும் குசாலாய் இவர்

களோடு விளையாடினேன். இந்தியாவிலுள்ள கிராமப் பிள்ளைகளைக் குறித்து அறியவிரும்பி நான் சொன்னவற்றை அக்கரையோடு கேட்டார்கள். "நமஸ்காரம்" என்ற நமது தமிழ் வாழ்த்துதலைப் படித்துக்கொண்டு என்னைக் கண்டபோதெல்லாம் நமஸ்காரம் செய்வார்கள் !

இந்நகரத்திலுள்ள பெரிய வைத்தியசாலைகளில் நடக்கும் ஆயுதப்பரிகாரங்கள் முதலியனவற்றையும் போய்ப்பார்த்தேன். உள்ளான ஆத்மீககுணமில்லாமல் பரிபூரண சரீரசுகம் உண்டாகாது என்ற கொள்கையுள்ள ஒரு வைத்தியர் என்னோடு வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தார். சத்தியத்திற்காக சாக்ஷிபகர்ந்து, அஞ்சா நெஞ்சுடன் அதிகாரிகள் கைகளில் இரத்த சாக்ஷியாக உயிர்துறந்த யோவான் ஹஸ் என்ற செக்தேசப் பெரியாரின் சிலாசாசனம் பார்த்தேன். மந்தபுத்தியினராக தங்கள் சுதந்திரமிழந்து, தூக்கம்பிடித்துகிடந்த தன் சுயதேசத்தினர் மத்தியில் இந்தப் பெரியார் எழும்பி நின்று அவர்களை விழிக்கச் செய்ததை, சிலைகள் மூலமாய் விஸ்தரித்திருக்கும் இந்த சிலாசாசனக் காட்சி மிகுந்த அர்த்தரசம் பொருந்தியிருந்தது. "ஒருவரில் ஒருவர் அன்புகூருங்கள். எல்லாருக்கும் சத்தியத்தைப் பகருங்கள்," என்ற வசனங்கள் சிலாசாசனத்தின் கீழ் வெட்டப்பட்டிருந்தன.

பிராகு நகரத்தில் ஒரு பொதுஜனக் கூட்டத்தில் இந்தியாவைக்குறித்துப் பேசினேன். இதர ஐரோப்பிய வெள்ளை மனிதருக்குள் இருக்கிறபடியே இத்தேசத்தினருக்குள்ளும் இந்தியாவைப்பற்றி மிகத் தவறான அபிப்பிராயங்கள் இருப்

பதை, இவர்கள் என்னிடம் கேட்ட கேள்விகளினலறிந்தேன். கறுப்பு மனுஷர் சுயராஜ்ஜிய சுதந்திரத்திற்கு தகுதியுள்ளவர்களல்ல, வெள்ளை மனுஷர்தான் உலகத்தை ஆளக்கூடிய சாமர்த்தியமுள்ளவர்கள் என்ற தவறுனதும் கேடானதுமான அபிப்பிராயம் பொதுவாக வெள்ளை மனிதர்களுக்குள் குடிகொண்டிருக்கிறது. இந்த மூட எண்ணம் ஒழிந்து வெள்ளை மனிதர்கள் கறுப்பு மனிதர்களை கண்ணியமாக நினைக்கும் நாள் கிட்ட வேண்டும். கறுப்பு மனுஷராகிய நாமும் நம்மை உலக மக்களுக்குள் கீழாக்கும் காரியங்களை அகற்றி சுயமரியாதையும், ஒற்றுமையையும், கல்வி முதலிய சகல நற்காரியங்களையும் சீக்கிரமடைய விடாமுயற்சியுடனும் தளரா உற்சாகத்துடனும் உழைக்கவேண்டும்.

செக்கோஸ்லோவோக்கியா, ஆஸ்திரியா தேசங்கள் பார்த்தபின் நான் முன் கூறியிருக்கிறபடி ஜெர்மனி தேசப் பிரதம நகர் பெர்ளின் சென்றேன். இங்கிருந்து புறப்பட்டு புகைவண்டி மார்க்கமாய் வடக்கேயிருக்கும் பால்டிக் கடல் சேர்ந்தேன். இதொரு உள்நாட்டுக் கடல். ஜெர்மனி, ரஷியா, ஸ்வீடன், டென்மார்க்கு தேசங்கள் இதைச் சூழ்ந்திருக்கின்றன. கடல்கரை சமீபத்திலுள்ள ரூகன் தீவிலுள்ள சாஸ்நிட்ஸ் என்ற துறைமுகம் சேர்ந்தேன். இங்கு ஒரு விநோதமும், வியப்பும் உண்டாக்கும் பிரயாண ஒழுங்கிருக்கிறது. இரும்பு தண்டவாளங்கள்போட்ட ஒரு நீண்ட தோணி கரையோரம் வருகிறது. கரையில் போடப்பட்டிருக்கும் புகைவண்டியின் இரும்புத் தண்டவாளங்களோடு தோணியி

லிருக்கும் தண்டவாளங்கள் சரிவரபொருந்த இணையச்செய்து விடுகிறார்கள். நாங்கள் இருந்த புகைவண்டியை இழுக்கும் எஞ்சின் (யந்திர வண்டி) பிரயாணிகள் வண்டியிலிருந்தபடியே வண்டியை தோணியில் தள்ளிவிடுகிறது. இப்படி புகைவண்டி யேற்றப்பட்ட தோணி அப்படியே புறப்பட்டு வடக்கு நோக்கி ஸ்வீடன் தேசம் சென்றது. இதினால் பிரயாணிகள் இறங்கி தோணியில் ஏற அவசியமில்லை. 6 மணி நேரம்போல் பால்டிக் கடலில் பிரயாணம்செய்து இரவு ஸ்வீடன் தேசத் துறைமுகம் மேல்மேயோ நகரம் சேர்ந்தேன். இங்கு எனது ஸ்வீடன் தேச நண்பர் எங்வே லுவ்வீகான் என்பவர் என்னைச் சந்தித்து சற்று வடக்கேயிருக்கும் லண்டு என்னும் ஊருக்குக் கூட்டிக்கொண்டு போனார். குளிர்காலமாயினும் சுடுநீராவிக் குழாய்களினால் வண்டிகள் நல்ல சூடாக்கப்பட்டுச் சுகமாயிருந்தது. இங்குள்ள வைத்தியசாலை, சர்வகலாசாலை கள் பார்த்தேன். தேகாப்பியாச அபிவிர்த்திக்காக ஏற் படுத்தப்பட்டிருக்கிற ஒரு நிலயமும் பார்த்தேன். திமிர் வாதம், சுளுக்கு, ஊனம், அங்கபலவீனங்கள் முதலியவை யுள்ள நோயாளிகளுக்கு அங்கபலமுண்டாகும்படி நீவித் தடவிப் பரிகாரம் செய்யும் ஒரு வைத்திய ஸ்தலத்தையும் பார்த்தேன். பெண்கள்தான் இவ்வேலையில் பாண்டித்தியம் அடைந்திருக்கிறார்கள். இங்குள்ள வைத்திய கலா சாலைகளில் மாணவர்கள் 10 வருஷம்போல் வைத்தியம் கற் கிறார்கள். சாஸ்திரிகள் இவர்களைத் தனித் தனியே பரீக்ஷை செய்து பட்டம் கொடுக்கிறார்கள். நமது தேசத்தில் கூட் டம் கூட்டமாக நடப்பிக்கிறதுபோல பரீக்ஷைகள் கிடை

யாது. ஒரு வைத்தியசாலையின் பிரதம இரண வைத்தியர் சுற்றிக்காட்ட என்னைக் கூட்டிக்கொண்டு போனபோது எண்பது வயதுபோலுள்ள பல வயோதிபர்களைப் பார்த்தேன். ஸ்வீடன் தேசத்தில் ஜனங்கள் வெகு வயோதிபப் பிராய மட்டும் சுகதேகிகளாக வாழ்கிறார்கள். தொத்து நோய்கள், சிசு மரணம் அதிகமான நமது தேசத்திலோ, பொதுவாக நமது தேசத்தின் எல்லா மக்களின் வாழ்நாட்களைக் கவனித்தால், சராசரி 25 வருஷப் பிராயமட்டும்தான் மக்கள் உயிரோடிருக்கிறார்கள். ஸ்வீடன் தேச நாட்டுப்புரத்திலுள்ள தோமலீலா என்ற ஒரு ஊர்ச்சந்தைக்குப் போனேன். நாட்டுப்புறங்களிலிருந்து, விவசாய வேலைக்கு உபயோகிக்கும் குதிரைகள் மாட்டிய வண்டிகளில், குடியானவர்கள் சந்தை வியாபாரத்திற்கு வந்திருந்தார்கள். கூலியாட்களை நிலச்சுவான்கள் ஒரு வருஷத்திற்கென்று ஒப்பந்தம் செய்துகொள்ளுவார்கள். வருஷமுடிவில் ஒரு மாதத்திற்கு இந்தக் கூலியாட்களுக்கு விடுமுறை கிடைக்கும். நான் போயிருந்த சமயம் இப்படி விடுமுறையாதலால் பலர் சந்தைக்கு வந்து ஆகாராதிகள், துணிகள் வாங்கிப்போனார்கள்.

இதற்கு முன்னே 1927-ம் வருஷம் நான் ஸ்வீடன் தேசம் போயிருந்து அதின் பிரதம நகரம் ஸ்டாக்ஹோம், சர்வ கலாசாலையுள்ள அப்ஸாலா நகரம் முதலியன பார்த்திருக்கிறேன். ஸ்வீடன் தேசத்தின் ஜனத்தொகையெல்லாம் நமது தமிழ்நாட்டு மூன்று ஜில்லாக்கள் ஜனத்தொகைக்குக் கூடக் குறைவாய்த்தானிருக்கும். எனினும் இந்த சிறிய

ஜனத்தொகையுள்ள தேசம் எத்துணையோ முன்னுக்கு வந்திருக்கிறது. (சுயாதீன) சுதந்திரம், பாமர மக்கள் கல்வி, யந்திரத் தொழில், மின்சார சாஸ்திர அறிவு, வைத்திய சாஸ்திர முதலிய பல நற்காரியங்களில் வெகு முன்னேற்ற மடைந்திருக்கிறது. வெகு அழகான பெரிய பசுக்கள் ஏராளமாகப் பால் கொடுக்கின்றன. காற்றூடி யந்திரங்களினுல் மாவு அரைக்கிருர்கள். அடுப்புக்குப் பதிலாக நாம் உபயோகிக்கும் ஸ்டோவ் என்ற எண்ணெ அடுப்பு ஸ்வீடன் தேசத்திலிருந்துதான் இறக்குமதியாகி நமக்கு விலையாகிறது. அக்டோபர் மாதம் 27-ம்தேதி மாலை மேல்மேயோ துறைமுகம் திரும்பி, ஒருசிறிய கப்பலில் பிரயாணஞ்செய்து, இரவு ஏழரை மணிபோல் சற்று மேற்கேயிருக்கும் டென்மார்க்கு தேசப் பிரதம நகரம் கோப்பனேகன் சேர்ந்தேன். நான் நமது மதராஸ் பட்டணத்தில் மாணவனுக இருந்த வருஷங்களில் என்னைப்போல் பல மாணவர்களுக்கு ஆத்மீக விஷயத்தில் குருபோல் விளங்கிய டாக்டர் லார்ஸன் வேதசாஸ்திரியவர்கள் வீடுசேர்ந்தேன். அவர்களும் அவர்கள் பாரியாளாகிய பெரியம்மாளும் என்னை அன்புடன் வரவேற்றுக்கொண்டார்கள். ஞாயிற்றுக்கிழமை அத்தியக்ஷ பட்டாபிஷேகம் செய்யும் ஆராதனைக்குப் போயிருந்தேன். ஆலயத்தில் ஆசீர்வாதமிடும் பாவனையாக இயற்றப்பட்ட கிறிஸ்துவின் பெரிய சிலையொன்று பிரதம பீடத்தின் மேலும், ஆலயமகாமண்டப இருபக்கங்களிலும் 12 அப்போஸ்தலர் சிலைகளுமிருந்தன. பல அத்தியக்ஷர்கள்கூடி புது அத்தியக்ஷருக்கு பட்டாபிஷேகம் செய்தார்கள். ஆராதனை அவர்கள் தாய்ப்பாஷையாகிய டேனிஷ் பாஷையில் நடந்

தது. டென்மார்க்கு மன்னரும், இராணியும்வந்திருந்தார்கள். பிராண்ஸ்டெட் என்ற என் நண்பர் வீடு நான் போயிருந்தபோது, தாய்ப்பாஷையின் அருமை பெருமையைப் போற்றி டென்மார்க்கு தேச கவிராயர் குருண்ட்விக் என்பவர் இயற்றிய பாட்டை, என் நண்பர் வீட்டார் பாடியது கேட்டு ஆனந்தமடைந்தேன். நமது தமிழ் தாயின் இனிமையையும் பாரதியார் பாடியது நமது ஞாபகத்திற்கு வர வேண்டும்.

"செந்தமிழ் நாடென்னும் போதி னிலே—இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சி னிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே"

டென்மார்க்கு தேசமுழுவதும் கவனித்தால் நமது தமிழ் நாட்டு இரண்டு ஜில்லாக்களைப் பார்க்கிலும் சிறிய ஜனத் தொகையுள்ள தேசம்தான். ஆனால் சகல உயர் கல்வியும் டேனிஷ் பாஷையிலேயே கற்றுக்கொள்ளுகிறார்கள். விவசாயப்பொருள் முதலியனவற்றைக் கூட்டுறவு சங்கங்கள் மூலமாகவே விற்பனை செய்கிறார்கள். இதனால் நடுத்தரகு ஆட்களில்லாமல் விவசாயிகளுக்கு நல்ல இலாபம் கிடைக்கிறது. நல்ல பசுக்களுண்டு. ஏராளமான வெண்ணெ, கோழி முட்டைகள் மற்றத் தேசங்களுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். வேலையில்லாத ஆட்கள் வீண்நேரம் போகாதபடி அவர்கள் கல்வி விருத்திக்கென்று ஏற்படுத்திய ஒரு கல்வி நிலயமும் இருக்கிறது. இங்குள்ள ஒரு பெரிய வைத்தியசாலை பார்த்

தேன். பிரதம இரண வைத்தியர் உபசாரத்துடன் என்னை வரவேற்று தாம் செய்யும் ஆயுதப் பரிகார முறைகளை விவரித்து பல நோயாளிகளையும் எனக்குக் காட்டினர்.

ஸ்வீடன் தேசத்திலும் டென்மார்க்கு தேசத்திலும் வைத்தியர்கள் சர்க்கார் சம்பளம் பெறும் உத்தியோகஸ்தர்கள். ஆனல் இதர ஐரோப்பிய தேசங்களில் பிரதம வைத்தியர்கள் சம்பளம் பெருத கௌரவ உத்தியோகஸ்தர்களே. கோப்பனேகனில் மாணவர்களும் சில பெரியோரும் கூடிய கூட்டத்தில் நான் ஒரு உபந்நியாசம் செய்தேன். மறு நாள் காலை (அக்டோபர் 29-ம் தேதி) புறப்பட்டேன். டென்மார்க்கில் பெரிய மலைகள்கிடையாது. மட்டபூமிதான். எங்கு பார்த்தாலும் விவசாயிகள் தங்கிப் பயிரிடும் வயல் நிலங்கள், வளர்க்கும் கோழிகள், கால் நடைகள் முதலியன வழிநெடுக பார்த்தேன். டென்மார்க்குதேசம் பல தீவுகள் சேர்ந்தது. மேற்கு நோக்கி பிரயாணஞ்செய்து மாலை எஸ்பர்கு துறைமுகம் சேர்ந்து புகைவண்டிவிட்டிறங்கி கப்பல் ஏறினேன். வட கடல் என்ற சமுத்திரம் கடந்து மறு நாள் இரவு இங்கிலாந்தின் ஹார்விச் துறைமுகம் மார்க்கமாய் லண்டன் சேர்ந்தேன்.

கொஞ்சங் குறைய நவம்பர்மாத முழுவதும் இங்கிலாந்து ஸ்காத்லாந்து தேசங்களில் பிரயாணஞ்செய்து மாணவர்கள் கூட்டங்களில் பேசினேன். ஆங்கில மாணவர்களுக்குள்ளும் இந்தியாவைப்பற்றி சரியான அறிவு கிடையாது. இந்தியா சுய அரசாட்சிக்கு தகுதிதானு வென்று சில மாண



ஸ்வீடன் தேச பசுக்கள். எவ்வளவு பெரிய பாத்திரங்களில் அந்தப் பெண்கள் பால் கறக்கிறார்கள்! பசுக்கள் பலுகி ஒரேவருணமாய்க் காண்பதைக் கவனியுங்கள்.



ஸ்வீடன் தேசத்தில் மாவறைக்கும் காற்றூடி யந்திரம். இந்த யந்திரத்தால் கிணற்றிலிருந்து தண்ணீருமிறைக்கலாம்.

வர்கள் கேட்டார்கள். "இந்தியா இங்கிலாந்தை அடக்கி அரசுபுரிந்து, நீங்கள் எங்களுக்குச் செய்கிறபிரகாரம் நாங்கள் உங்களுக்குச் செய்தால் அப்போது என்ன சொல்லுவீர்கள்? உங்களைப்போல் மற்றவர்களையும் சிநேகியுங்கள்." என்று மறு உத்திரவு சொன்னேன். டிசம்பர் மாதம் எடின்ப்ரோவில் தங்கி இரண வைத்தியசாலைக்கு தினம்போய் அங்கு நடக்கும் வேலையைப் பார்த்துவந்தேன். மாதக்கடைசியில் புறப்பட்டு லண்டன் வந்து இந்தியாவுக்குத் திரும்ப கப்பல் பிரயாணத்திற்கு வேண்டிய ஒழுங்குகள் செய்தேன். லண்டனில் அச்சமயத்திலிருந்த ஒரு அருமையான முஸ்லீம் வாலிபரோடு பழகினேன். இவர் பக்தன், "கடவுள்மேலுள்ள மெய்ப்பக்தி இல்லாதவர்களாயிருந்தாலும், மார்க்கத்தின் பெயரைச் சொல்லிக்கொண்டு வாதாடி சமய கட்சிகள் உண்டாக்குபவர் உலகத்தில் எத்துணை அதிகம்! இந்துக்களோ, முஸ்லீம்களோ, கிறிஸ்தவர்களோ, எந்த மதத்தினரொன்று மனுஷர் பொதுவாக பெயர் சொல்லி அழைத்துக்கொண்டாலும், உண்மையாக தெய்வ பக்தியுள்ளவர்கள் உலகத்தில் எவ்வளவு சொற்பம்! எல்லா மன்னுயிரையும் படைத்த ஈசன், தாமுண்டாக்கிய தமது மக்களான மானிடர் இப்படி தம்மைக்குறித்துக் காட்டும் அசட்டையை நோக்கி, நன்கு அறிந்திருந்தும், இத்துணை பொறுமையுடன் சகித்து அவர்களுக்குக் காட்டும் அன்பு எத்துணை ஆச்சரியகரமானது!" இவ்வாறாக எனது முஸ்லீம் நண்பரும் நானும் பேசிக்கொண்டிருந்து வெகு நேரம் அன்றிரவு இருவரும் அமைதியாக இறைவனை ஒன்றுகூடிப் பிரார்த்தித்தோம். எவ்வித வேற்றுமையுணர்ச்

சியுமில்லாமல் இருவர் மனமும் அன்பின் கட்டால் இணைக்கப் பட்டிருந்தது.

நமது தேசத்திலிருந்து பல இந்திய மாணவர்கள் ஆங்கில தேசத்தில் படிக்கிறார்கள். இவர்களில் நான் மேற்கூறிய முஸ்லீம் வாலிபர்போல் நன்கு நடந்து, படித்து, காலத்தைப் பிரயோஜனப்படுத்துபவர்கள் பலர்இருக்கிறார்கள். ஆனால்வேறு சில இந்திய மாணவர்களோ பணத்தை வீணாய்ச் செலவழித்து, அல்லது துன்மார்க்க ஸ்திரீகளுடன்கூட சகவாசம் செய்து நமது தேசத்தின் பெயரைக் கெடுக்கிறார்கள். மேல் நாட்டில் நமது வாலிபர்கள் தவறாக நடந்துகொள்ளப் பல சோதனை களுண்டு. இதனால் பொதுவாக நமது இளைஞர் சாதாரண கலாசாலைப் பட்டங்களுக்காக மேல் நாடுகள் செல்வது நல்ல தல்ல என்பது என் அபிப்பிராயம். நமது நாட்டு கலாசாலைப் பட்டங்களையே நாம் கண்ணியமாக எண்ணவேண்டும். நமது நாட்டில் சற்று அநுபவமுள்ளவர்கள் விசேஷித்த கல்வி ஆராய்ச்சி செய்ய, அல்லது யந்திரத்தொழில் முதலியனவற்றில் பாண்டித்தியம் அடைந்து நமது தேசத்தை முன்னுக்குக் கொண்டுவர மேல் நாடுகள் செல்வது நன்மையாயிருக்கலாம். ஆனால், பொதுவாகப்பேசின், இளைஞர்கள் நமது நாட்டிலேயே படித்து உயர் கல்வியடைவதே நன்கு என்று நான் எண்ணு கிறேன். ஆங்கில அதிகாரிகள் தங்கள் தேசத்துக் கலாசாலைப் பட்டங்களையே நமது தேசத்திலும் மேன்மைபடுத்தி, உயர் சம்பளங்கள் அப்பட்டங்கள் உள்ளவர்களுக்குக் கொடுக்க முயல்வது அவர்களுக்கு இயற்கையாகத்தானிருக்கும். ஆனால்

நாம் சுதந்திரமடைந்து, சகல கலைகளையும் நமது தாய் பாஷையில் விர்த்திசெய்து, நமது இந்திய கலாசாலைப் பட்டம் பெற்ற நம்மவர்களையே உயர் உத்தியோகங்களுக்குத் தெரிந்து கொண்டு இவ்விதமாக நாம் மேன்மையடையும் நாள் கிட்ட நாம் விடாமுயற்சியாய் உழைக்கவேண்டும். கண் வைத்தியம், கீழ்நாடுகளில் பரவியிருக்கும் பின்னும் பல நோய்களுக்கு வேண்டிய பரிகாரம், இவற்றில் பாண்டித்தியம் அடைய, நமது தேசத்தில்தான் விசேஷித்த சமயமும் நல்ல ஏதுக்களும் உண்டு. நாம் மற்ற தேசங்களில் சாஸ்திரம் ஆராய்ச்சி செய்யப்போவதுபோல் இதர தேசத்தாரும் நமது தேசம் வந்து நம்மிடம் படிக்கவரும் நாட்கள் வரவேண்டுமென்பது என் பேரவா! நமது இளைஞர்கள் சாதாரணக் கல்விப் பட்டங்களுக்காக மேல் நாடுகள் போவது நமது தேசம் அநாகரீகமான, கல்விச் சாலைகள் அற்ற இழிவானதுமான தேசம் என்று அந்நிய நாட்டார் எண்ணி நம்மை இகழ ஏதுவுண்டாகிறது.

2—1—1935 புதன் இரவு லண்டனிலிருந்து நான் புறப்பட்டு சௌதாம்டன் துறைமுகத்தில் கப்பல் ஏறி "ஆங்கிலக் கால்வாய்" என்ற கடலைக் கடந்து, காலை சற்று கிழக்கேயிருக்கும் பிரான்ஸ் தேசத் துறைமுகம் லீஹாவர் என்ற பட்டணம் சேர்ந்தேன். எனக்கு அறிமுகமாயிருந்த காலியூ என்ற பிரான்ஸ்தேச நண்பரோடு தங்கியிருந்தேன். ஊரிலிருந்த சித்திரசாலை காட்டினார். "நம்பிக்கை" என்ற பொருளை சித்திர விநோத விசித்திரமாய்க் காட்டும் ஒரு படம்

நன்ருயிருந்தது. படத்தின் விவரமாவது—இருண்டு வரும் நேரம். பலத்த புயல் காற்றும் திரண்டுவரும் மழை மேகமும் கூடியவேளை. தன்னந்தனியே ஒரு ஸ்திரீ காற்றையும், மேக இருட்டையும் நோக்கி நிற்கிருள். அவள் கையில் ஒரு தீப மிருக்கிறது. இதின் வெளிச்சம், எங்கும் சூழ்ந்த இருள் நடுவில் காற்றினல் ஆடும் அவள் வஸ்திரத்தையும், மடியையும் பிரகாசிப்பிக்கிறது. இந்த ஊரில் வசிக்கும் இரண்டு உபாத்திமாரோடும் அவர்கள் குடும்பத்தோடும் பழகினேன். இவர்கள் மூலமாய் பிரான்ஸ்தேசக் கல்வி விஷயங்களைக் குறித்து விவாமாய் அறிந்தேன். பிரான்ஸ் தேசத்து வெள்ளை மனிதர் நமது தமிழ் நாட்டின் கிழக்கு எல்லையான வங்காளக் குடாக் கடல் ஓரத்திலுள்ள புதுச்சேரி என்ற துறைமுகத்தைத் தங்களுடைய ஆதீனத்தில் வைத்துக்கொண்டு அரசு புரிவது உங்களுக்குத் தெரியுமல்லவா ? 18-வது நூற்ருண்டில், நமது இந்தியா தேசத்தைத் தங்களுக்குக் கீழ்படுத்தி ஆதீனப்படுத்த ஆங்கிலேயருக்கும் இவர்களுக்கும் பெரும் யுத்தங்கள் நடந்தன. இந்த தேசத்தினர் எந்த இதா தேசத்தினரைத் தங்களுக்குக் கீழ்ப்படுத்திக்கொண்டாலும், அவர்களை எல்லாம் பிரான்ஸ் தேச அரசியல் உரிமையுள்ள குடிகளாக்கிக்கொள்ள வேண்டுமென்றே விரும்புகிருர்கள். இதினல் தமிழ் நாட்டிலுள்ள புதுச்சேரியிலிருந்தும், ஆப்பிரிக்கா தேசத்திலிருந்தும் பாரீஸ் என்ற தங்கள் பிரதம நகரத்திலிருக்கும் பிரஞ்சு சட்டசபைக்கு பிரதிநிதிகள் தருவித்துக்கொள்ளுகிருர்கள். ஐரோப்பிய தேசத்தினர் இப்படி தூர தேசங்களிலிருக்கும் அந்நிய நாட்டினர்களை தங்கள் அரசியல் முறைமைகளுக்கும், ஐரோப்பிய நாகரீக

வழிகளுக்கும் திருப்ப முயல்வது சரியன்று என்பது என் அபிப்ராயம்.

பிரஞ்சுக்காரர் என்ற இந்த பிரான்ஸ் தேசத்தினர் ஜனத் தொகை 400 லக்ஷம் போல். இதில் 100-க்கு 60 பேர் விவசாயிகள். கோதுமை, திராக்ஷை முதலியன விசேஷமாய்ப் பயிர் செய்கிறார்கள். தேசத்தின் விஸ்தீரணத்திற்குக் குடியிருக்கப் போதுமான ஜனங்கள் இல்லையாம். இருக்கிறவர்களுக்குப் போதுமான தொழிலும் வேண்டிய ஆகாராதிகளும் திருப்தியாய் இருக்கிறதால் இந்த நாட்டார் தற்காலத்தில் அந்நிய தேசத்திற்கு பிழைப்புக்காகக் குடிபோகப் பிரியப் படுகிறதில்லையாம். எல்லா இளைஞரும் 6 வயது முதல் 16 வயதுமட்டும் பள்ளிக்கூடம் சென்று கல்வி கற்கவேண்டுமென்ற கட்டாய சட்டமிருக்கிறது. உயர்தரப் பாடசாலை வகுப்புகளில் கற்றுக்கொடுக்கிற உபாத்திமார் எவ்வளவு படித்தவர்களாயிருக்கிறார்களோ அதே பிரகாரம், பாலர் வகுப்புகள் முதலியன உள்ள ஆரம்ப பாடசாலை உபாத்திமாரும் நன்றாகக் கற்ற உயர்தரக் கலாசாலைப் பட்டங்களுள்ளவர்களாகவே இருக்கவேண்டும். எல்லா உபாத்திமார்களும் இவ்வித ஒரேவிதமான கல்வி பட்டங்கள்பெற்றவர்களாதலால், சம்பளமும் உத்தியோகம் செய்திருக்கும் வருஷங்கள் பிரகாரமே எல்லாருக்கும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. படிக்கும் இளைஞருக்கும் உயர்தரப் பாடசாலைமட்டும் இலவசமாக (சம்பளமில்லாமல்) சர்க்கார் செலவில் கல்வி கற்றுக்கொடுக்கிறார்கள். ஆரம்பக் கல்வி முடித்துவிட்ட பிள்ளைகளை பரீ

கூலித்து உயர்தரப் படிப்பிற்குத் தகுந்தவர்களுக்கு இப்படி இலவசமாக உயர்கல்வி கற்றுக்கொடுக்கிறார்கள். பிள்ளைகளுக்கு புத்தகங்கள், குறிப்புப் புத்தகங்கள், காகிதங்கள், எழுதுகோல்கள் முதலிய அவசியமானவெல்லாம் சர்க்கார் செலவில் இலவசமாகக் கொடுக்கிறார்கள். சொந்த ஜனங்கள் கல்விக்காக இவ்விதம் பல இதர தேசத்தார் எடுத்துக்கொள்ளும் அக்கரையையும், ஆத்திர ஆர்வத்தையும் கவனிக்கும்போது, நமது இந்திய சர்க்கார் நமது கிராமத்தினர் கல்வி விஷயத்தில் காட்டும் அசட்டை மிகவும் மனவேதனையுண்டாக்குகிறது. நமது பாமரமக்களுக்குள் கல்வியும் பொது அறிவும் பரவுமட்டும் நமது தேசங்கள் படும்பாடு பரிதாபம்தான். கிராம உபாத்திமாரே! உங்கள்மேல் விழுந்த உத்திரவாதம் பெரியது. மக்கள் தங்கள் உரிமையின் உணர்வடைந்து சுதந்திரமடையச்செய்யும் பெரும் பொறுப்பான வேலை உங்கள்மேல் விழுந்த பாரம். கிராம உபாத்திமாரே! நீங்கள் ஜனங்களை வழிநடத்தும் பெருந்தரிசனமுள்ள சமுதாய உத்தமத் தொண்டர்களாயும், சிறந்த விவேக புருஷர்களாயுமிருக்கவேண்டும்.

பிரான்ஸ் தேசப் பிரதம நகர் பாரீஸ் போயிருந்தேன். இது சேயின் நதியோரம். அழகிய பெரும் ஆலயங்களுண்டு. தெருக்கள் ஒழுங்காக அமைக்கப்பட்டிருக்கின்றன. இங்குள்ள வியாதியஸ்தருக்காக 1500 கட்டில்கள் உள்ள ஒரு பெரிய வைத்தியசாலைபோய்ப் பார்த்தேன். வைத்திய கலாசாலை மாணவர்கள் இங்கு வைத்தியவேலை கற்றுக்கொள்ளுகிறார்கள்.

மேல் நாடுகளில் நன்கு மதிக்கப்படத்தக்க பல பக்தர்கள் உண்டு. எனினும் பொதுவாக கவனித்தால் ஆத்மீக காரியங் களைக் குறித்து ஜனங்களுக்குள் மிக அசட்டைதான். பிரான்ஸ் தேசத்தில் கொஞ்சங் குறைய 400 லக்ஷம் ஜனங்கள் போலிருந்தாலும் கிறிஸ்தவர்களென்று தங்களை அழைத்து கிறிஸ்தவ சபைகளின் அங்கங்களாகவிருப்பவர்கள் மொத்த ஜனத்தொகையில் கொஞ்சங்குறைய மூன்றிலொரு பங்கு தான். மீதிப்பேருக்கு ஒரு மார்க்கமும் கிடையாது.

பிரஞ்சு பாஷை ஐரோப்பாவின் பல தேசத்தாரால் பொது பாஷையாக உபயோகிக்கப்படுகிறது. ஐரோப்பிய ஸ்திரீகள் பாரீஸ் நகர உடை நடை நாகரீகங்களைத்தான் தங்களுக்கு மாதிரியாகப் பின்பற்றுகிறார்கள். சில நூற்றாண்டுகளிற்கு முன் பிரான்ஸ் தேசத்தில் பெரும் புரட்சியுண்டாகி குடியரசு ஸ்தாபிக்கப்பட்டது. இப்புரட்சியின் ஞாபக சாசனங்கள் "சுயாதீனம், சகோதரத்துவம், சரிசமானம்," என்ற வசனங் களுடன் பாரீஸ் நகரமெங்கும் பார்க்கலாம்.

பிரான்ஸ் தேசத்திற்கும் அதற்கு அடுத்து கிழக்கே யிருக்கும் ஜெர்மனி தேசத்திற்கும் எப்போதும் தீராப்பகை. பரஸ்பர சந்தேகங்களுண்டு. இதனால் இருவரும் சண்டைக்கு எப்போதும் கங்கணங் கட்டிக்கொண்டிருப்பது இவர்கள் இயல்பு. தற்சமயத்தில்கூட இராணுவ பயிற்சி, விமானக் கப்பல்கள்செய்தல் முதலிய யுத்த உபகரணங்களில் மிக முயற்சிகாட்டும் ஜெர்மனிக்கு பிரான்ஸ் பயந்து தானும் இராணுவங்களைத் திரட்டுவதிலும், ருஷியா, இத்தாலியா

முதலிய தேசங்களோடு ஜெர்மனிக்கு விரோதமாக உடன் படிக்கை செய்துகொள்ளுவதிலும் பிரான்ஸ் தேசம் வெகு பிரயாசம் எடுத்துவருகிறது. ருஷியா தேசத்தில் பெண்கள் கூட இராணுவ பயிற்சி செய்துவருகிறார்களாம். ருஷியா தேசத்தில் பல வருஷங்களுக்குமுன் நடந்த புரட்சியினால் பொது உடமை அரசியல் ஏற்பட்டு பாமர மக்களுக்கு பல வித நன்மைகளும், சுகாதாரம், விவசாய அபிவிர்த்தி, தொழில் சாலைகள் முதலிய பிழைப்பிற்கு அநுகூலமான சவுகரியங் களும், அரசியல் உரிமை சுதந்திரமும் ஏற்பட்டுவிட்டது. ஆனால் இவையெல்லாம் பலாத்காரமான முறைமையினால்தான்.

ஜனவரி மாதம் 4-ம் தேதி இரவு பாரீஸ் நகரத்திலிருந்து புறப்பட்டு, தென்கிழக்கே யிருக்கும் இத்தாலியா தேச எல்லையிலுள்ள மோடேயின் நகரம் மறுநாள் காலை சேர்ந்தேன். இவ்வளவு நாட்களும் சூரிய வெளிச்சமில்லாத மந்தார மேகங் களையே பார்த்த எனக்கு இத்தாலியா தேசத்தில் பிரகாசமாய் ஜொலித்த சூரிய வெளிச்சம் சந்தோஷமுண்டாக்கியது. அத்துடன் சமீபத்திலும், சூழ்ந்திருந்த மலைகள்மேலும், சுத்த வெண்மையாய் பரவியிருந்த உறைந்த மழைக்காட்சி கண் ணிற்கு இன்பமாயிருந்தது. இரவு இத்தாலியா தேசப் பிரதம நகரமாகிய ரோமா நகர் சேர்ந்தேன். எட்டு நாட்கள்போல் இங்குதங்கி பல விசேஷித்த இடங்களெல்லாம் பார்த்தேன். கிறிஸ்து பிறந்த காலத்தில் ரோமாபுரி உலகமெல்லாம் வெகு கீர்த்திபெற்ற ஏகாதிபத்தியமாய்த் துலங்கிக்கொண்டிருந்தது. மத்தியதரைக்கடல் ஓரங்களில் சுற்றியிருந்த ஐரோப்பா, ஆசியா

ஆப்பிரிக்கா என்னும் மூன்று கண்டங்களின் தேசங்கள் பல ரோம ஏகாதிபத்தியத்திற்கு அடங்கியிருந்தன. பூர்வீக காலங்களில் ஆண்ட ரோம சக்கிரவர்த்திகளின் சிலாசாசனங்கள், அரசியல் காரியாலயங்கள், கச்சேரிகள், சிலைகள், ஸ்தம்பங்கள், ஆட்டச்சாலைகள் இப்படி எண்ணிறந்தவை இன்னும் பாதுகாக்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் பலவற்றைப் போய்ப் பார்த்தேன். பண்டைய காலங்களில் தமிழ் நாட்டிற்கும் ரோமாபுரிக்கும் பலவித வியாபார போக்குவரத்து சம்பந்தங்கள் இருந்ததென்பது சரித்திரத்தின் மூலமாய் வெகு தெளிவாய் அறிந்துகொள்ளலாம்.

மெல்லிய மஸ்லின் வஸ்திரம், முத்துக்கள், ஆபரணங்கள், எருமைகள், யானைகள், கிளிகள், மயில்கள் முதலியன நமது தேசத்திலிருந்து ரோமாபுரிக்கு ஏற்றுமதியாகிச் சென்றதாகச் சரித்திரத்தில் பார்க்கிறோம். விசேஷமாக பாண்டிய நாட்டிலிருந்து முத்துக்கள் ஏற்றுமதியாயின. இவற்றினால் ரோம நாணயங்கள் ஏராளமாய் இந்தியாவுக்கு வந்தன. இதைக் குறித்து ரோம ராயனாகிய திபேரியு சக்கிரவர்த்தி "சீர்திருத்தத்தை எங்கே தொடங்கலாம்? நமது பெண்களின் டம்பத்தைக் குறித்து ஏது சொல்வேன்? முக்கியமாக, பொன் ஆபரணங்கள், நகைகளுக்காக நம்முடைய ரோமர் பணம் அந்நிய நாட்டுக்கு ஏராளமாய்ச் செல்வதினால் நாம் நஷ்டமடைகிறோம்" என்று தனது சொந்தச் சட்ட சபைக்கு எழுதி முறையிடுகிறான். பிளினி என்ற ரோம தேசாதிபதி, வியாபாரத்தின் மூலமாய் ரோமரிடத்திலிருந்து இந்தியாவுக்கு

ஒன்றறைக்கோடி ரூபாய் போய்விடுவதாகச் சொல்லுகிறுன். மெல்லிய பட்டும், பஞ்சு வஸ்திரங்களும் இங்கிருந்து மேல் நாட்டிற்கு ஏற்றுமதியாயின. காலம் எவ்வளவாய் மாறிப் போயிற்று! இப்போ பஞ்சு நம் நாட்டில் உண்டாளுலும், மேல் நாட்டிற்கனுப்பி அவர்கள் வஸ்திரமாக்கி நமக்குத் திரும்ப அனுப்ப, பெற்றுக்கொள்ளுகிறோம். நமக்கு எவ்வளவு நஷ்டம்! பூர்வீகத்தில் பாண்டிய நாட்டின் பிரதான நகரங்களாகிய கொற்கை, மதுரை என்னும் இடங்களிலும், பின்னும் தமிழ் நாட்டின் மற்ற இடங்களிலும், ரோம நாணயங்கள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றன. பாண்டிய அரசன் ஒருவன், ரோம சக்கிரவர்த்தியாகிய அகஸ்துாயனுக்குத் தமது ஸ்தானுதி பதிகளை அனுப்பினதாகச் சரித்திரம் கூறுகிறது.

ரோம சக்கிரவர்த்திகள் யுத்தங்களில் ஜெயித்து, தோல்வி யடைந்தவர்களை அடிமைகளாகக்கொண்டுவந்து, ஜெயகோல மாக பவனிசெய்யும் பிரதம பாதையை இன்னும் பார்க்கலாம். இதற்கு "பரிசுத்த பாதை" என்று பெயர் கொடுத்திருந்தார் கள். பவுலப்போஸ்தலன் தாமெழுதிய நிருபம் 2 கொரிந்தியர் 2–14-ம் வசனத்தில் "ஜெயகோலமாக" என்று உபமானமாய் கூறுகிறது இதுதான். இதிலிருக்கும் சித்திரக்கமானங்கள் ஒன்று எருசலேமை அழித்த தீத்து சக்கிரவர்த்தியின் ஜெயத்தை விமரிசையாக வருணிக்கிறது. யூத பூசாரிகள் உடன்படிக்கைப்பெட்டி, தெய்வாலயக் குத்துவிளக்குகள் முதலியவற்றை தோட்களில் சுமந்து நடந்து, சக்கிரவர்த்தியின் ஜெயகோலப் பவனியில் நடக்கிறதாகக் காட்டியிருக்கிறது.

முதலாவது கிறிஸ்தவனுன கான்ஸ்டண்டைன் சக்கிரவர்த்தி கட்டிய அழிந்துகிடக்கும் பெரிய ஆலயமும் பார்த்தேன். "காலிஸயம்" என்ற ரோம ஆட்டச்சாலை பல பல நூற்ருண்டுகளுக்கு முன் கட்டப் பட்டதாயினும் இன்னும் சிற்ப மாண்பு பொருந்தியதும் ஒய்யாரமானதாகவும் காணப்படுகிறது. இது வட்ட வடிவமாகவும், அடுக்கடுக்காக படிமேல்படிகள் போன்ற இருப்பிடங்கள் வரி வரியாக ஒன்றிற்கு மேலொன்ருக வெகு விமரிசையாகக் கட்டப் பட்டதாயுமிருக்கின்றன. 50,000 ஜனங்கள் சுற்றி உட்கார்ந்து வேடிக்கை பார்க்கலாம். நடுவிலே திறப்பான முற்றம் போன்ற இடம். இதன் கீழ் மறைந்த குகைகள் போன்ற மறைவிடங்களில் காட்டு மிருகங்களையும் அவைகளோடு போராடும் குஸ்தி பயின்ற அடிமைகளையும் வைத்திருப்பார்கள். சக்கிரவர்த்தி முன்னே இருக்கும் பிரதம ஆசனத்தில் வீற்றிருப்பார். ஆட்ட சமயங்களில் பயிற்சி பெற்ற அடிமையையும் காட்டு மிருகத்தையும் திறப்பான நடு விடத்தின் கீழ் மறைந்திருக்கும் அறைகளிலிருந்து கொண்டுவந்து, அடிமையை மிருகத்தோடு போராட விடுவார்கள். சுற்றி இருக்கும் ஜனத்திரள் கைகொட்டி உல்லாசமாய் இந்த பயங்கர வேடிக்கையை பார்த்து காலம் போக்குவார்கள். சில வேளைகளில் குஸ்தி பயின்ற ஒரு அடிமை இன்னெருவனேடு போராடுவான். ஒருவன் மற்றவனைக் கீழே தள்ளி அவன் தலையை தன் காலின் கீழ் மிதித்து நிற்பான். சக்கிரவர்த்தி இரக்கம் காட்ட விரும்பினுல் தன் பெருவிரலை மேல் நோக்க நீட்டுவார். அப்படி செய்தால் கீழேகிடக்கிறவனுக்கு வெற்றியடைந்தவன் ஒரு சேதமும்

செய்யமாட்டான். ஆனால் வழக்கமாக அவர் அப்படிச் செய்கிறதில்லை. பெரும் விரலை பூமியை நோக்கக் கீழே நீட்டுவார். உடனே ஜெயமடைந்த அடிமை மற்றவன் தலையின் மேல் பலமாய் அடித்து அவனைக் கொன்றுபோடுவான். முதலாவது இதை எதிர்த்து, இந்த சித்திரவதை கொடிய பாவமென்று தடுக்க பிரயாசப்பட்டவர்கள் ஆதியிலிருந்த கிறிஸ்து பெருமானின் தாசர்களே. இவர்கள் மேல் ரோமர் கோபங்கொண்டு இப் பக்தர்களையும் இந்த ஆட்டசாலையில் மிருகங்களோடு போட்டு இம்சித்தார்கள். இதினால் இந்த ஆட்டசாலை கிறிஸ்துவின் இரத்த சாட்சிகள் சத்தியத்திற்கென்று சாட்சி பகர்ந்து உயிர் துறந்த தியாக சாலையாக மாறிற்று. இதின் நடுவில் நான் நின்றபோது என் உடம்பு சிலிர்த்தாப்போல் ஒருவிதமான கிளர்ச்சி எனக்குண்டாயிற்று. சத்தியத்திற்காக உயிர் துறக்க இக்காலத்தில் எத்தனைபேர் ஆயத்தமாய் எழும்புவார்கள்? ஒரு தொந்திரவு கஷ்டமில்லாமல் சுக போகமாய் வாழவல்லவோ நாம் எல்லாரும் நாடுகிறோம்!

ரோமாவிலிருக்கும் பெரிய வைத்தியசாலையைப் பார்த்தேன். இரண வைத்தியர்கள் அன்பாய் என்னை வரவேற்றுக் கொண்டு சுற்றிக் காட்டினார்கள். இந் நகரில் பேதுரு, பவுல் முதலிய அப்போஸ்தலர் பெயரிட்ட பெரும் கிறிஸ்தவ ஆலயங்களும் பார்த்தேன். இத்தாலியா நாட்டில் சலவைக்கல் விசேஷமானதால் வெகு அழகான சலவைக்கல் கட்டிடங்கள், சிலாசாசனங்கள் முதலியன பார்த்தேன். நேப்பிள்ஸ் நகரத்தையும், அதன் சமீபத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன்

பூகம்பத்தால் அழிந்துகிடக்கும் பாம்பி நகரத்தையும், சித்திரங்கள், சலவைக்கல் சிற்பம் சிலைகள் முதலியவற்றில் சிறந்த பிளாரன்ஸ் நகரத்தையும், சாய்ந்த கோபுரமுள்ளதும் மிக விமரிசையாக சலவைக்கல் சித்திர வெட்டு வேலைகளுடன் அமைக்கப்பட்டதுமான பெரிய ஆலயமுள்ள பீஸாநகரத்தையும், அழகிய சலவைக்கல் சித்திரங்களால் ஜோடிக்கப்பட்ட சமாதிகள் நிறைந்த ஒரு பெரிய கல்லறைத் தோட்டமுள்ள ஜெனோவா துறைமுகத்தையும், போய்ப்பார்த்தேன். ரோமாபுரியிலுள்ள பரி. பவுலின் ஆலயத்தில் சலவைக்கல், சித்திர வேலைகள் கண்ணுரும் காட்சி. சியோன் மலையின் மேல் ஆட்டுக்குட்டியானவர் வீற்றிருக்க அதனடியிலிருந்து ஜீவ நதிகள் ஓடுகிறதும், 12 அப்போஸ்தலர் 12 ஆட்டுக்குட்டிகள் போல நதியில் பானம் பண்ணுவதும் கோயில் வாசல்மேல் அழகிய சித்திரமாக வரைந்திருக்கிறது. நான் ஆலயத்தினுள் சென்றபோது ஒரு வயோதிப ரோமான் பாதிரியார் பிரசங்கம் செய்துகொண்டிருந்தார். "இயேசு தமது திருப்பணிக்காக முப்பது வருஷம் தம்மை ஆயத்தம் செய்தார். நாமோ தற்காலத்தில் ஜெபத்திற்காக ஐந்து நிமிஷம் போதுமென்றிருப்பது எவ்வளவு மதியீனம்" என்று சொன்னர்.

இத்தாலியா தேசத்தில் தற்காலத்தில் முசலீனி என்ற சர்வாதிகாரிதான் அரசியல் விஷயத்தில் சர்வ அதிகாரம் உள்ளவர். அரசனுக்கு அவ்வளவு அதிகாரமில்லை. பிரிவினைகளெல்லாம் தடுத்து ஒழித்து தேசத்தை ஒன்றுபடுத்தி விட்டார். அரசியல் தேசஜனங்களின் நன்மைக்கென்று

நல்ல ஒழுங்குடன் நடந்தேறி வருகிறது. பலவித கண்டிப்பான சட்டங்களினுலே ஜனங்கள் கிரமமாய் நடந்து கொள்ளும்படி செய்யப்பட்டிருக்கிறது. ஊர் ஒழுங்கு, ரோட்டில் ஒழுங்கு, அரசியல் ஒழுங்கு இப்படி பல ஒழுங்குகளுண்டு. ஆனுல் இராணுவ வேலையில் மும்முறமான பயிற்சியும் உண்டு. முசலீனி அரசியல் கட்சிக்காரரைத்தவிர வேறெவரும் வாய் பேசக்கூடாது. சிறியோர் முதல் பெரியோர்வரை எல்லாருக்கும் ஓர் விதமான இராணுவ பயிற்சி உண்டு. இத்தாலியா தேசத்தை பண்டைய காலத்திலிருந்த ஏகாதிபத்திய விஸ்தீரணத்திற்கு கொண்டுவந்துவிட இத்தாலியா தேசத்தினரெல்லாரும் முயற்சிக்க வேண்டுமென்பதே "பாஸிஸ்டு" என்ற இந்த முசலீனி கட்சிக்காரர் பேரவா. இதினுல் இத்தாலியர் இராணுவ ஆர்வம் அபிமானத்தில் மிதமிஞ்சிப் போய் விடுவார்களென்று எண்ண இடமுண்டு. தற்காலத்தில் ஆப்பிரிக்காவிலுள்ள அபிஸினியா தேசத்தை இத்தாலியா பயமுறுத்தி மிரட்டுவதை பத்திரிகைகளில் வாசித்திருப்பீர்கள். மேல் நாடுகளில் பாலியருக்குக்கூட இராணுவ ஆர்வமுண்டாகப் பயிற்சி செய்துவிடுகிருர்கள்.

இத்தாலியா தேசம் சில வருடங்களுக்கு முன் நடந்த ஐரோப்பிய யுத்தத்திற்குப்பின் தன் எல்லைகளை விசாலமாக்கி அதிகாரத்தை அதிகமாக்கிக்கொண்டது. தற்காலத்தில் ஜனத்தொகை 390 லக்ஷம் போலிருக்கிறது. திராக்ஷை, ஆரஞ்சு முதலிய பழவர்க்கங்கள் ஏராளமாய் விளைகின்றன. கப்பல் வியாபாரங்களிலும் முன்னேற்றமடைந்திருக்கிருர்கள். தேச

எல்லைகளை இன்னும் அதிகமாய் பெருக்கி பண்டைய ரோம ஏகாதிபத்தியம் போல் வெகுபெரிய ஏகாதிபத்திய கௌரவ நிலைக்குக் கொண்டுவந்துவிடவேண்டு மென்று ஆர்வத்துடன் பிரயாசப்படுகிறார்கள். இப்படி பல ஐரோப்பியரும் தங்கள் தங்கள் தேசத்திற்கு முயன்று வருவதால் போட்டி ஏற்பட்டு இராணுவங்களைத் திரட்டுவதும், யுத்தாயுதங்களை விர்த்தி செய்வதும், ஒருவருக்கொருவர் பயந்து சந்தேகப்படுவதுமான நிலைமைக்கு வந்துவிட்டார்கள். யுத்த மேகவிருள் நிறைந்திருக்கும் ஐரோப்பா பீரங்கி குண்டுகளுக்கும், விமானக் கப்பல்கள் பொழியும் வெடிகுண்டுகளுக்கும், விஷ வாய்வு அனுப்பும் யந்திரங்களுக்கும் இரையாகும் வேளை இன்றோ நாளையோ வென்ற ஸ்திதியில்தானிருக்கிறது. கடவுள் இந்த பயங்கர சம்பவங்கள் வருமுன் தமது அருள்மாரி பொழிந்து இந்த பயங்கர ஸ்திதிக்குள் ஐரோப்பா வாராதபடி தன்னயமாகிய விக்கிரக வணக்கத்திலிருந்து ஐரோப்பியரை இரக்ஷிப்பாராக. ஐரோப்பாவின் அதோகதி அதினோடு போகாது. ஐரோப்பா அடக்கி ஆளுகிற கீழ்நாட்டாராகிய நாமும் ஐரோப்பாவுடனே இந்த பயங்கர நாசங்களுக்குள் இழுக்கப்படுவதும் நிச்சயமல்லவா? இதினால் நாம் இதெல்லாம் நமக்கென்னவென்று சும்மா கைவிரித்துக்கொண்டிருந்தால் நமதுபாடும் மோசமாய்தான் முடியும். கிறிஸ்து பகவான் பிறந்தபோது விண்ணவர் "பூமியில் மனிதருக்குள் சமாதானம்" என்று பாடி கொஞ்சங்குறைய 2000 வருஷங்களாயிடினும் இன்னும் இந்த கெதிதானோ வென்று மானிட மக்கள் மனம் வாடலாம். ஆனால் விசால மனமும், அஞ்சாநெஞ்சும், சத்தியம் ஜெயங்கொள்ளும் என்ற

அசையா திட நம்பிக்கையும் நமக்கிருந்தால் கைபிடித்த உறுதி விட்டு அயர்ந்து சோர்வடையமாட்டோம். எவ்வித பூலோக மாண்புள்ள எகாதிபத்தியங்களும் எழும்பி நாச மடைந்து போவதை சரித்திர மூலமாகத் தெளிவாயறியலாம். ஆனால் என்றும் அழியாத கடவுளின் இராஜ்யமோ நீடூழி காலம் செழித்தோங்கும். அசத்தியம் அழியும், சத்தியம் ஜெயங்கொள்ளும். இந்தியா சுதந்திரமடையும். இந்த நம்பிக்கை இல்லாதவர் காரியம் பரிதாபமானதே. சத்தியம் ஜெயங்கொள்ளுமென்ற நம்பிக்கையுள்ள நாம் ஓயாது விடா முயற்சியாய் இதற்கென்று உழைப்போம், பிழைப்போம், ஜெபிப்போம். வெளியே இருந்து உதவிவருமென்று வீணாய் அங்குமிங்கும் எதிர்பார்த்து எமாந்து போகாமல் நமது ஜனங்களையே நோக்கி, நமது கிராமங்களிலிருக்கும் நமது ஜனத்திரளே நம்மைச் சுதந்திரமடையச் செய்யும் நமது சக்தியென்பதை மறக்காமல், அவர்களுக்கு சுதந்திர அவாவை மூட்டி, அவர்கள் முன்னேற்றமடைய நம்மைத் தியாகம் செய்வோம். இதற்கு உதவியாயிருக்கும் உபகாரணங்களை நன்கு ஆராய்ந்து அறிந்து கையாடுவோம். கடவுளை நம்பி தன்னயமற்றுத்தொண்டு செய்பவனால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை.

18–1–1935-ல் ஜெனேவா துறைமுகத்தில் ஒரு டச்சுக் காரர் கப்பலில் நான் எறி கொழும்பிற்கு புறப்பட்டேன். பெரிய கப்பல்தான். அசையாமல் சுகமாயிருந்தது. வெள்ளை மனிதரான டச்சுக்காரர்தான் கப்பலில் அதிகம். அவர்கள்



“ கொலிஸயம் ” — ரோம ஆட்டச்சாலை
(விவரம் 139-ம் பக்கம் பார்க்கவும்.)



இத்தாலியா தேசப் பிரதம நகர் ரோமா
புரியிலுள்ள பரி. பேதுருவின் ஆலயம்.



(இத்தாலியா) பீஸா நகரச் சாய்ந்த கோபுரமும் ஆலயமும்.



இந்தியாவிற்கு நான் திரும்பியபோது பிரயாணஞ்செய்த கப்பல். (144-ம் பக்கம் பார்க்கவும்.)

அடக்கி ஆளும் கீழ்நாடாகிய ஜாவா தீவிற்குப் பிரயாணம் செய்யும் கப்பல் அது. என்னோடு இவர்கள் கலவாமல் விலகி நடந்து கொண்டதால் கப்பலில் நான் இந்தப் புத்தகம் எழுத ஆரம்பிக்க போதுமான நேரம் கிடைத்தது. ஆனாலும் கப்பலிலிருந்த சிறு பிள்ளைகளோ சீக்கிரம் என்னுடன் பழகி விளையாட ஆரம்பித்துவிட்டார்கள். மத்திய தரைக்கடலில் முதல் பிரயாணம் செய்தோம். எகிப்திலுள்ள போர்ட்டு ஸைது என்ற துறைமுகத்தில் கப்பல் சில மணி நேரம் நின்றது. கரைக்குப் போய் ஊரைச்சுற்றிப் பார்த்தேன். எகிப்து பண்டைய காலங்களில் வெகு நாகரீகமடைந்திருந்த ஏகாதிபத்தியமாயிருந்தது. 1927-ம் வருஷம் நான் எகிப்துக்குப் போய் அதன் பிரதம நகரம் கயிரோ பார்த்திருக்கிறேன். கயிரோ நகர் சமீபத்தில் சிறு குன்றுகள்போல் உயரமாக ஆயிரக்கணக்கான கற்களால் கட்டப்பட்ட சமாதிகள் இருக்கின்றன. கிறிஸ்து பிறப்பதற்கு பல நூற்றுண்டுகளுக்கு முன்னமேயே அடிமைகள் வேலைகளால் இவை இயற்றப் பட்டன. எகிப்துதேச இராஜாக்களாகிய "பார்வோன்" களின் பிரேதங்கள் இங்கு அடக்கம் செய்யப்பட்டன. இவற்றிற்கு "பிரமிட்" என்று பெயர். சுகந்தவர்க்கமிடப்பட்டு, கல்லால் சித்திரவெட்டுகளுடன் செய்யப்பட்ட பிரேதத் தொட்டிகளில் ஆயிரக்கணக்கான வருஷங்களாக பாதுகாக்கப் பட்ட பிரேதங்களை காட்சிசாலைகளில் பார்க்கலாம். கயிரோ நகர் நீலநதியோரம் இருக்கிறது. எகிப்து ஒருவிதமாக சுயராஜ்ஜியம் அடைந்ததாயினும், ஆங்கில ஏகாதிபத்தியத்திற்கு ஒருவாறு இன்னும் அடக்கப்பட்டுத்தானிருக்கிறது. ஜனங்கள் பெரும்

பாலும் மகம்மதியரேயாயினும், "காப்டிக்" சபையைச்சேர்ந்த ஏராளமான கிறிஸ்தவர்களு மிருக்கிறார்கள். ஆனால் சமய பேதம் பாராட்டாமல் இருமதத்தினரும் தேசாபிமானங்காட்டி ஒத்துழைக்கிறார்கள். எகிப்து தேச வடபாகத்திலிருக்கும் அலக்ஸாந்திரியா நகரத்தில், பண்டைய காலங்களில், கீர்த்தி பெற்ற கல்லூரிகளிருந்தன. பூர்வீக காலத்தில் பிரேதங்களை அடக்கும் கல்லறைகள் பூமிக்குக்கீழ் ஆழமான குகைகளிலிருந்தன. பின் காலங்களில் கிறிஸ்தவர்களை அதிகாரிகள் இம்சை செய்தபோது துன்பத்திற்குத் தப்பும்படி கிறிஸ்தவர்கள் "கேற்றக் கோம்" என்ற இந்த ஆழமான கேணிகள்போன்ற குகைகளில் ஒளித்துக்கொள்வதுண்டு. இவற்றையெல்லாம் 1927-ம் வருஷம் நான் எகிப்துக்குப் போயிருக்கையில் அலக்ஸாந்திரியா நகரில் பார்த்தேன். ரோமா நகரத்திலும் இவைகளை இந்தத்தடவை பார்த்தேன். போர்ட்டு ஸைதிலிருந்து கப்பல் புறப்பட்டு, "ஸூயஸ் கனுல்" என்ற கடல் தண்ணீர் கால்வாய் கடந்து, சிவந்த சமுத்திரத்தில் பிரயாணஞ் செய்தோம். பின்பு இந்துமகா சமுத்திரம் சேர்ந்தோம். இங்கு மாலை வேளைகளில் சூரிய அஸ்தமன காட்சி மிக சுந்தரமயமாயிருந்தது. செவ்வான வருணங்கள், அமர்ந்திருந்த சமுத்திர ஜலத்தின்மேல், பிரதிபிம்பமாகத் துலங்கிய காட்சியின் மாண்பை வருணிக்க என்னாலாகாது! 13 நாள் கப்பல் பிரயாணஞ்செய்து ஜனவரி மாதம் 31-ம் தேதி கொழும்பு சேர்ந்தேன்.

எனது உடன் தொண்டர் டாக்டர் பேற்றனும், ஸ்ரீமதி சீனிவாச அம்மாள் அவர்களும், எனது மைத்துனர் டாக்டர்

தாவீது அவர்களும் கடற்கரையில் சந்தித்து என்னை வரவேற்றுக் கொண்டார்கள். டாக்டர் தாவீது அவர்கள் வீட்டில் நான்கு நாட்கள் தங்கியிருந்தேன்.

டாக்டர் பேற்றன் இந்தியாவிலிருந்து இலங்கைக்குவரும் வழியில் ஒரு வேடிக்கையான சம்பவம் நடந்தது. தனுஷ்கோடியிலிருந்து தலைமன்னாருக்கு கடலை கடந்து இலங்கைக்கு பிரயாணமாய் போகிறவர்கள் கையில் தங்கள் செலவிற்காக 650 ரூபாயாவது வைத்திருக்கவேண்டுமாம். டாக்டர் பேற்றன் இப்பெருந்தொகை கையில் கொண்டுவராததினால் போலீசார் அவரை தலைமன்னாரில் கப்பலிலிருந்து கரையில் இறங்க தடுத்துவிட்டார்கள். இரண்டு நாட்கள் இவர் போலீசார் பாதுகாப்பில் வைக்கப்பட்டு இக்கரைக்கும் அக்கரைக்கும் தினம் ஓடிக் கொண்டிருக்கும் கப்பலில் தங்கியிருந்து கடல்காற்று அனுபவிக்க நேரிட்டது! கடைசியாக கொழும்பிலிருந்த ஒரு நண்பர் இச்சங்கதியைக் கேள்விப்பட்டு போலீசாருக்குத் தந்தி கொடுத்த பின்புதான் இவரை இலங்கையில் இறங்கவிட்டார்கள். இதுவும் ஒரு திருவிளையாட்டுதான்.

பின்பு நானும் சகோதரன் பேற்றனும் கொழும்பிலிருந்து புறப்பட்டு பிப்ரவரி மாதம் 4-ம் தேதி புதுக்கோட்டை சேர்ந்தோம். புதுக்கோட்டை பிரதம நீதிபதி ஸ்ரீமான் செஞ்சய்யா அவர்களுடன் ஒருநாள் தங்கியிருந்தோம். அவர்கள் கேட்டுக் கொண்டபடி எனது உலகசுற்றுப் பிரயாணத்தைப்பற்றி இங்கு ஒரு உபந்நியாசம் செய்தேன். புதுக்கோட்டை ஒரு தமிழ் மன்னர் அதிகாரத்திற்குட்பட்ட சின்ன ராஜ்யம். இம்மன்னர்

பல நூற்றாண்டுகளுக்கு முன் ஏகாதிபத்திய மாண்புடன் தமிழ் நாட்டில் ஆண்ட பல்லவ மன்னர்கள் வம்சத்தவர் என்கிறார்கள். பொதுஜன நன்மைக்காக நன்றாக கட்டப் பட்டிருக்கிற ஒரு பெரிய ஏரி இங்கு இருக்கிறது. புதுக் கோட்டைக்கு சற்று தூரத்திலிருக்கும் சித்தன் வாசல் என்ற இடத்தில் தமிழ்நாட்டு பல்லவ சக்கிரவர்த்திகள் காலத்தில் பாறையில் விமரிசையாய் வெட்டப்பட்டதும், சித்திர வேலை அமைந்ததுமான கல் வெட்டுக் குகைக் கோவில்கள் பல இருக்கின்றன. சமணமத துறவிகள் உச்சியிலிருந்து கடுந் தவஞ் செய்யும் ஒரு உயர்ந்த பெரும் பாறையும் இந்நாள் மட்டும் பார்க்கலாம். சிற்ப மாண்புள்ள சமணச் சிலைகள், ஆலயங்கள் முதலியன நார்த்த மலையில் பார்க்கலாம்.

பிப்ரவரி மீ 6-ம் தேதி நானும் டாக்டர் பேற்றனும் திருப்பத்தூர் வந்து சேர்ந்தோம். ஆசிரம உடன் தொண் டரும், பள்ளிக்கூட பிள்ளைகளும் புகைவண்டி ஸ்தானத்தில் எங்களை எதிர்கொண்டு சந்தித்து, பவனியாகப் பாடிக்கொண்டு ஆசிரமத்திற்கு அழைத்து வந்தார்கள்.

என் பிரிய கிராமத்தாராகிய உங்களுக்கு விபரமாய் எனது பிரயாணத்தைக் குறித்து நான் எழுத விரும்பிய இந்தப் புஸ்தகத்தை இத்துடன் முடிக்கிறேன். குற்றங் குறைகள் பல இருக்குமென்று நான் உணருகிறேன். எனினும் நான் இதையெல்லாம் எழுதிய பி ர தா ன மா ன நோக்கத்தை, புஸ்தகத்தை முடிக்குமுன், திரும்பவும் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

இதர தேசத்தினர் கல்வியிலும், சுகாதாரத்திலும், தொழிற்சாலைகளிலும், வியாபாரங்களிலும், பின்னும் எத்தனை எத்தனையோ பல காரியங்களிலும் முன்னேற்ற மடைந்து, இப்பூலோகத்தாரால் நன்கு மதிக்கப்பட்டு, உயர்ந்த அந்தஸ்து அடைந்தவர்களாய் இருக்கிறார்கள். ஏனையோர் நாளுக்கு நாள் மேன்மையும் வாழ்வு மடைந்து முன் செல்லும்போது என் ஜனங்களாகிய நீங்கள் நித்திரை மயக்கம் பிடித்தவர் போல் பஞ்சத்திற்கும், கொள்ளை நோயிற்கும், அடிமைத் தனத்திற்கும் ஆளாகி மாண்டுகொண்டிருக்கலாமோ? நீங்கள் இந்த பரிதாபமான ஸ்திதியிலிருக்க அவசியமே இல்லை. ஒற்றுமையும் கல்வியும் இதரதேசத்தினர் தங்கள் சுதந்திரத்தை இழக்காமல் மேன்மையடையச் செய்கின்றன. ஜாதி சமய கட்சிகளை அறவே அகற்றி, ஒவ்வொருவனும் சுய நலத்தையே பிரதானமாக நாடாமல், பிறன்நலத்தையும் கருதி, கல்வியிலும் ஒற்றுமையிலும் வளர்ந்தேற விடாமுயற்சியாய் உழையுங்கள். நம் மக்கள் வாழ்வடைந்தால் நாமும் தனித்தனியே வாழ்வடைவோம். நமது நாடு தாழ்வடைந்தால் நாமும் தனித் தனியேயும் தாழ்ந்தே போவோம்.

தன் ஜீவனை மாத்திரம் ஆதாயம் பண்ணப் பார்ப்பவன் அதை இழந்து போவான். மற்றவர்க்காக தன் ஜீவனை தியாகம் செய்கிறவனே தன் சொந்த ஜீவனையும் இழந்து போகாமல் ஆதாயப் படுத்திக்கொள்வான். இதுவே என்றும் மாறாத நித்திய சத்தியம்.

கிறிஸ்தகுல ஆசிரமம்,
திருப்பத்தூர்,
10—5—1935.

உங்கள் நண்பன்
சவரிராயன் ஏசுதாசன்.